# வேதம் வணங்கும் தெய்வங்கள்



A.V.

# சமர்ப்பணம்

எங்கள் எல்லோருக்கும் வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் வழிகாட்டியாக விளங்கிய பிரபல சேலம் வழக்கறிஞர், என் தகப்பனார், காலம் சென்ற அ.ஈ. வெங்கடேச அய்யர் அவர்களுக்கு இந்நூலைப் பணிவன்புடன் சமர்ப்பிக்கிறேன்.



## பொருளடக்கம்

# முகவுரை

தமிழ்நாட்டு ஆஸ்திகப் பெருமக்கள், ராமாயணம், மகா பாரதம், தவிர பாகவதம் முதலிய புராணங்களில் உள்ள கதைகளையும் மற்றும் பல ஆன்மீக விஷயங்களையும் ஓரளவிற்கு அறிந்திருக்கிறார்கள். தமிழில் எழுதப்பட்ட இந்த நூல்களைப் படிப்பதாலும், இவைகளைப்பற்றிய சொற்பொழிவுகளைக் கேட்பதாலும் இது சாத்தியமாகிறது.

தத்துவ விசாரணையில் ஈடுபாடு உள்ளவர்கள் உபநிடதங்கள், பகவத் கீதை, பிரம்மஸூத்திரம் முதலிய வடமொழி நூல்களின் தமிழாக்கத்தைப் படிப்பதாலும் அவைகளைப் பற்றிய சொற்பொழிவுகளைக் கேட்பதாலும் வேதாந்தக்கருத்துக்களை அறிந்திருக்கிறார்கள்.

இதே மாதிரி தமிழ் நூல்களான தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம், திருப்புகழ் முதலிய நூல்களிலுள்ள விஷயங்களையும் தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.

ஆனால் வேதங்களைப் பற்றித் தமிழில் எழுதுவாரும் இல்லை, படிப்பாரும் இல்லை, பேசுவாரும் இல்லை, கேட்பாரும் இல்லை என்ற நிலை ஏற்பட்டுள்ளது. மற்ற நூல்கள் படிப்பதற்கும், கேட்பதற்கும் ரசமாகவும், இனிமையாகவும் உள்ளன. ஆனால் வேதநூல்கள் கடினமான, கனமான விஷயங்களைக் கூறுகின்றன; தவிர, பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்பட்ட வேதங்களுக்கு, சமீபகால உரைகள்; சில இடங்களில், தெளிவான விளக்கம் கொடுக்க முடியவில்லை. ஆகையால் தான் மேற்கண்ட நிலை உலவுகிறது.

இக்குறையை ஓரளவிற்குப் போக்க நான் இந்த நூலைப் புனைந்துள்ளேன். வேதங்கள் கடலைப் போல ஆழமானது. வேதங்களைப் பற்றிய எனது அறிவு சொற்பமானது. காளிதாசன் ரகுவம்சத்தில் கூறுமாப் போல, எனது முயற்சி ஆழ்ந்த கடலை ஒரு சிறிய படகால் கடக்க முயலுவதை ஒத்துள்ளது. ஆனாலும், இந்த வேத நூல்களைப் படிப்பதில்

யான் பெற்ற இன்பம் இந்த வையகமும் பெற வேண்டும் என்ற அவாவில், இந்த நூலை ஆஸ்திகப் பெருமக்களுக்கு முன் வைக்கிறேன். அவர்கள் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறேன்.

இந்த நூலுக்குத் தலைப்பையும் கருத்தையும் கொடுத்தவர் எனது சகோதரரும், மும்மொழிப் புலவரும் ரிக்வேதத்தை ஆழ்ந்து படித்தவருமான திரு. அ.வெ. சுப்பிரமணியனாகும். தவிர, அவர் என்னுடைய கையெழுத்துப் பிரதி முழுவதையும் படித்துப் பிழைகளைத் திருத்தி மற்றும் பல விதங்களில் உதவியுள்ளார். என் உளம் கனிந்த நன்றி அவருக்கு உரித்தாகும்.

வேத நூல்களை வெளியிடுவதில் மிகுந்த ஆர்வமுள்ள அல்லயன்ஸ் திரு.வி.சீனிவாசன், இந்த நூலை நான் எழுதுவதற்குத் தூண்டுகோலாக இருந்தார். தவிர, மிகக் குறைந்த கால அளவில், இந்த நூலை நேர்த்தியாக அச்சிட்டு வெளியிட்டுள்ளார். அவருக்கு நான் மிகவும் நன்றிக் கடன் பட்டுள்ளேன்.

இதைப் படிக்கும் ஆஸ்திகப் பெருமக்கள் பிழைகளைச் சுட்டிக் காட்டினால் ஆவன செய்கிறேன்.

அ.வெ. சுகவனேச்வரன்

# வேதம் வணங்கும் தெய்வங்கள்



## அத்தியாயம் – 1

## முன்னோட்டம்

### 1.1. ஒரு கற்பனை

காலை வேளை, பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. சென்னை மாநகரம் ஆழ்ந்த உறக்கத்திலிருந்து விழித்து சோம்பல் முறித்து, எழுந்து நடமாடத் தொடங்கியது. நகரின் ஆட்டமும் பாட்டமும், கூச்சலும் குழப்பமும், ஓட்டமும் வேகமும், புகையும் புழுதியும் தென்பட இன்னும் சற்று நேரம் ஆகும். எப்பொழுதாவது பாதையைக் கிழித்துக் கொண்டு ஓடும் ஒன்றிரண்டு ஆட்டோக்களையும், ஸ்கூட்டர்களையும் தவிர நகரம், அந்தக்கால மணப்பெண்ணைப் போல அமைதியாகவும் அடக்கமாகவும் இருந்தது.

மைலாப்பூரில் லஸ்ஸைத்தாண்டித் தண்ணீர்த் துறை மார்க்கட்டிற்குப் போய்க் கொண்டிருந்தேன். ஏதோ சிந்தனையில் மூழ்கியிருந்த நான் எதிரில் வந்தவரை முதலில் கவனிக்கவில்லை. என்னைப்பார்த்து அவர் நின்றார். அப்பொழுது தான் நான் அவரைக் கவனித்தேன். உடனே சற்று திடுக்கிட்டேன். அவருடைய நடை, உடை, பாவனைகள் முற்றிலும் வேறுபட்டு இருந்தன. உலகில் எந்தப் பாகத்திலிருந்தும் வந்த மனிதராகத் தோன்றவில்லை.

என் குழப்பத்தைப் புரிந்து கொண்டு அவர் கூறினார். "நான் வேதகால மனிதன். உலகம் இப்பொழுது எப்படி இருக்கிறது என்று பார்க்க வந்தேன்!" என்றார். அவருக்குத் தமிழ் நன்றாகத் தெரியும் என்று வைத்துக் கொள்ளலாம். எல்லாம் கற்பனைதானே!

பேசிக்கொண்டே நடந்தோம். வழியில் ராமர் கோவில் வந்தது. வழக்கம்போல, நான் ஒரு கணம் நின்று, ஜன்னல் வழியாக ஹனுமார் ஸந்நிதியை நோக்கிக் கை கூப்பி வணங்கினேன். பிறகு நடந்தேன். இதைக் கண்ணுற்ற அவர் கேட்டார். 'இது என்ன? நீங்கள் என்ன செய்தீர்கள்?'

நான் :– இது ராமர் கோயிலில் ஹனுமான் ஸந்நிதி. எப்பொழுதும் இந்தப் பக்கம் வந்தால், நான் அவரை வணங்கிச் செல்வேன்.

அவர் :– நீங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. ஏதேதோ புதிய, நான் கேட்டிராத சொற்களை உபயோகிக்கிறீர்கள். கோயில் என்றால் என்ன?

நான் :– உங்கள் காலத்தில் கோயில் கிடையாதா?

அவர் :– இல்லை, கோயில் என்ற சொல்லையே நாங்கள் கேட்டதில்லை.

நான் :– தெய்வங்களின் விக்கிரஹங்களைப் பிரதிஷ்டை செய்துள்ள இடம்தான் கோவில். மக்கள் அங்கு சென்று தெய்வங்களை வழிபடுவார்கள்.

அவர் :– திரும்பவும் புதிய சொற்களைக் கூறுகிறீர்கள். விக்கிரஹம் என்றால் என்ன?

நான் :– ஓகோ! உங்கள் காலத்தில் கல்லாலும் உலோகங்களாலும் செய்யப்பட்ட தெய்வங்களின் உருவங்களே இல்லையா?

அவர் :— இல்லை.

நான் :— பின் எப்படி தெய்வங்களை வணங்குவீர்கள்?

அவர் :— நாங்கள் வேள்விகள் புரிவோம். அப்பொழுது தனித்தனியாக ஒவ்வொரு தெய்வத்திற்கும் நெய்யாலும் மற்றப் பொருள்களாலும் ஆஹுதிகள் கொடுப்போம். அப்பொழுது அந்தந்த தெய்வத்திற்குரிய மந்திரங்களை ஓதுவோம். இதுவே எங்கள் வழிபாட்டு முறை.

நான் :— இக்காலத்தில் நாங்கள் தெய்வங்களின் உருவத்தைக் கல்லிலும் உலோகங்களிலும் வடித்து கோவில்கள் கட்டி, வடித்த விக்கிரஹங்களைப் பிரதிஷ்டை செய்கிறோம். மக்கள் அங்கு சென்று தெய்வங்களை வணங்குகிறார்கள்.

அவர் :— அப்படியா! ஓரளவு புரிந்துகொண்டேன். ராமர், ஹனுமார் என்று இரண்டு பெயர்களைக் கூறினீர்கள். அவர்கள் யார்?

நான் :— ராமர் விஷ்ணுவின் அவதாரம். ஹனுமார் சிறந்த ராம பக்தர்.

அவர் :— சற்றுப்புரிகிறது. மூன்று காலடிகளை எடுத்து வைத்தாரே, அந்த விஷ்ணு தானே?

நான் :— ஆமாம். நீங்கள் வாமனாவதாரத்தைக் குறிப்பிடுகிறீர்கள்.

அவர் :— எனக்கு வாமனாவதாரம் என்றால் என்ன என்று விளங்கவில்லை. நான் சொல்லுவது விஷ்ணு மண்ணையும் விண்ணையும் இரண்டு காலடிகளால் அளந்து மூன்றாவது காலடியை வானத்தில் மிக உயர்ந்த இடத்தில் வைத்தார். இதை ரிக்வேதம் அடிக்கடி குறிப்பிடுகிறது.

நான் :— மூன்றாவது காலடியை விஷ்ணு மகாபலி

சக்கரவர்த்தியின் தலைமேல் வைத்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

அவர் :— அப்படியா? எங்கள் காலத்தில் புராணமும் இல்லை, வாமனாவதாரமும் இல்லை.

மார்க்கெட்டில் காய்கறிகளை வாங்கிவிட்டு, நாங்கள் திரும்பிக் கபாலீஸ்வரர் கோவிலுக்கு வந்தோம். பிரும்மாண்டமான கோபுரத்தையும் அகன்ற தடாகத்தையும் பார்த்து வியந்து அவைகளைப் பற்றிக் கேட்டார் வேதகால மனிதர். நான் சுருக்கமாக விளக்கிவிட்டு, அவருடன் கோவிலுக்குச் சென்றேன். வழக்கம் போல எல்லா ஸந்நிதிகளிலும் வணங்கிவிட்டு, அவருடன் வெளியே வந்தேன். அவர் வினவினார்: 'நீங்கள் இரு ஸந்நிதிகளில் உள்ள தெய்வங்களைப் பிள்ளையார், முருகன் என்று குறிப்பிட்டீர்கள், அவர்கள் யார்?'

நான் :— உங்கள் காலத்தில் கணபதி என்று ஒரு தெய்வம் உண்டல்லவா? ரிக்வேதத்தில் 'கணானாம்த்வா கணபதிம் ஹவாமஹே ....' என்று ஒரு ரிக் இருக்கிறதே, அந்தக் கணபதி தான் பிள்ளையார்.

அவர் :— கணபதி என்று வேதத்தில் சொல்லுவது பிரஹ்மணஸ்பதி என்று தெய்வத்தைக் குறிக்கும். அவர் கணங்களின் தலைவர் என்ற பொருளில் கணபதி என்ற பெயரைப் பெறுகிறார். தவிர அவருக்கோ, வேறு எந்த வேத கால தெய்வத்திற்கோ யானை முகம் கிடையாது. ஆனால் நான் இப்பொழுது கோவிலில் பார்த்த தெய்வத்திற்கு யானை முகம் உள்ளது.

நான் :— உண்மைதான். பிள்ளையாரும் முருகனும் சிவனுடைய இரு மைந்தர்கள்.

அவர் :— சரிதான். முதலில் சிவன் என்றால் யார் என்று புரியவில்லை. பிறகு அங்கு இருவர் ருத்திரம்

எனப்படும் மந்திரத்தை ஓதியதைக் கேட்டவுடன், நாங்கள் ருத்திரன் எனக் குறிக்கும் தெய்வத்தை நீங்கள் சிவன் என்று கூறுகிறீர்கள் என்பது புரிந்தது.

மேலும் நடந்தோம், அப்பொழுதுதான் சில கடைகளைத் திறந்து கொண்டிருந்தார்கள். படக்கடைகளில் சுவாமி படங்கள் வரிசையாக இருந்தன. ஒரு கடையின் முன்னால் ஒரு பெரிய கிருஷ்ணர் படத்தை வைத்து அதைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். என்னுடன் வந்தவர் சற்று நின்று அதையே உற்று நோக்கினார். பிறகு வினவினார். 'இப்படம் மிக நேர்த்தியாக உள்ளதே. தலை முடியில் மயிலிறகை வைத்துக்கொண்டு கழுத்தை ஒடித்து இடுப்பை வளைத்துக் கால்களை ஒன்றின் மேல் ஒன்றாகப் போட்டு நின்ற வண்ணம் புல்லாங்குழல் ஊதும் அந்த இளைஞன் யார்?'

நான் :— அதுவா? அதுதான் கிருஷ்ணன். விஷ்ணுவின் மற்றுமொரு அவதாரம்.

அவர் :— அவதாரம் என்றால் என்ன?

நான் :— எப்பொழுதெல்லாம் தர்மத்திற்கு இன்னல் ஏற்பட்டு, அதர்மம் தலை தூக்குகிறதோ, அப்பொழுதெல்லாம் நான் பூமியில் அவதரிப்பதாக பகவான் கீதையில் கூறியிருக்கிறார்.

அவர் :— எங்கள் காலத்தில் விஷ்ணு அவதாரம் எடுத்ததாக ஒருவரலாறும் இல்லை.

நான் :— நீங்கள் கூறுவதிலிருந்து உங்களுடைய வேத காலத்தில் பிள்ளையாரும் இல்லை, முருகனும் இல்லை, ராமனும் இல்லை, கிருஷ்ணனும் இல்லை என்று தெரிகிறது. அப்படியானால் நீங்கள் வணங்கிய தெய்வங்கள் எவை? கோவில்களும் இல்லை, விக்கிரஹங்களும் இல்லை எனில் வழிபாட்டை எப்படிச் செய்தீர்கள்?

அவர் :— எங்கள் காலத்தில் எங்களுக்கு 33 தெய்வங்கள் இருந்தன. விண்ணில் உலாவும் தெய்வங்கள் 11, மண்ணில் இருக்கும் தெய்வங்கள் 11, காற்று மண்டலத்தில் உள்ள தெய்வங்கள் 11, ஆக 33 தெய்வங்கள் ஆகும். இவைகளில் முக்கியமானவை இந்திரன், அக்கினி, ஸோமன், வருணன், விஷ்ணு, ருந்திரன், ஸூரியன், ஸவிதா முதலியவையாகும். வழிபடுவதற்கு எங்களுக்குத் தெரிந்த ஒரே வழி வேள்விகள் புரிந்த தெய்வங்களுக்கு ஆஹுதிகள் வழங்குவதுதான்.

நான் :— வேதகாலத்திற்கும், தற்காலத்திற்கும் எத்தனை வேறுபாடுகள்! ஆனால் சில அடிப்படை ஒற்றுமைகள் உள்ளன. உங்கள் ரிக் வேதத்தில் உள்ள 'ஏகம் ஸத் விப்ரா: பஹுநா வதந்தி' அதாவது 'மெய்ப் பொருள் ஒன்றேதான்; ஆனால் அறிவாளிகள் அதைப் பலவாறாகக் கூறுகிறார்கள்' என்ற தத்துவம் இன்றும் எங்கள் மதத்தின் அடிப்படைக் கொள்கையாக இருக்கிறது—'

மேலே நடந்தோம். சற்று நேரம் கழித்துத் திரும்பிப் பார்த்தால் வேதகால மனிதனைக் காணவில்லை. மாயமாய் மறைந்து விட்டாள். கற்பனையும் விடை பெற்றது.

## 1.2. வேதம்

'வித்' என்ற வடமொழி வினைச் சொல்லிலிருந்து வேதம் என்ற சொல் உருவாகியிருக்கிறது. 'வித்' என்றால் 'அறிவது' என்று பொருள். இந்த வினைச் சொல்லிலிருந்து தான் வித்துவான், வித்தியா என்ற வடமொழிச் சொற்கள் உருவாகியுள்ளன. விட்(Wit), விஸ்டம் (Wisdom) என்ற ஆங்கிலச் சொற்களும் 'வித்' என்ற வடமொழி வினைச் சொல்லிலிருந்துதான் வடிவம் பெற்றதாகக் காஞ்சி காமகோடி பரமாச்சாரியார் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் கூறுகிறார்கள். ஆக, வேதம் என்றால் புனித அறிவு நூல் என்று சொல்லலாம்.

வேதம் எப்படி வந்தது, எப்பொழுது உண்டாகியது, யார் அதைப் புனைத்தார்கள் என்றெல்லாம் கேள்விகள் எழுகின்றன. இதற்கு நமது நாட்டுப் பண்டைய மரபுகளும் தற்கால, முக்கியமாக மேல் நாட்டு, ஆராய்ச்சிகளும் முற்றிலும் மாறுபட்ட கருத்துக்களைக் கூறுகின்றன. முதலில் நம்நாட்டு மரபுகளைக் கவனிப்போம்.

நமது மரபின்படி வேதம் அநாதியானது. அது அபௌருஷேயம் என்று கூறுகிறார்கள். அபௌருஷேயம் என்றால் எந்த ஒரு மனிதனாலும் உருவாக்கப்பட்டதல்ல என்று பொருள். வேதத்தைப் பல ஸூக்தங்களாகப் பிரித்திருக்கிறார்கள். உதாரணமாக ரிக் வேதத்தில் 1028 ஸூக்தங்கள் உள்ளன. ஒவ்வொரு ஸூக்தத்திற்கும் ஒரு ரிஷி உண்டு. ஆனால் அந்த ரிஷி அந்த ஸூக்தத்தை எழுதியதாகவோ, புனைந்ததாகவோ நம் மரபில் கூறவில்லை. ரிஷிகளும் மனிதர்கள் தான், மனிதர்களில் உயர்ந்தவர்கள். ரிஷிகள் ஸூக்தங்களைப் புனைந்தார்கள் என்றால் வேதம் அபௌருஷேயமாகாது.

தனி மனிதன் புனையவில்லை என்றால், பகவான் வேதத்தைப் புனைந்தாரா? அப்படிப் பகவான் வேதத்தைப் புனைந்தார் என்றால், அவர் ஒரு கால கட்டத்தில் அதைச் செய்திருக்க வேண்டும். அப்படியானால் அதற்குமுன், வேதம் இல்லாத, காலம் இருந்திருக்க வேண்டும்.

ஆனால் வேதம் அநாதி என்று நம் மரபு சொல்லுகிறது. அநாதி என்ற வடமொழிச் சொல்லிற்கு என்ன பொருள் என்றால் அதற்கு முந்தியதாக, அதற்கு ஆதியாக எதுவும் இல்லை என்பதுதான். பகவான் வேதத்தைப் புனைந்து அதற்குமுன் ஒருகாலம் இருந்தால், வேதம் அநாதி ஆகாது. ஆகையால் பகவானும் வேதத்தைப் புனையவில்லை; பின் எப்படி வேதம் தோன்றியது?

வேதம் அநாதி என்றால் அது மனிதன் தோன்றுவதற்கு முன்னால், உலக சிருஷ்டிக்கு முன்னால், காலம் ஏற்படுவதற்கு முன்னால் இருந்திருக்க வேண்டும். அதாவது பகவானும் வேதமும் எப்பொழுதும் இருந்திருக்க வேண்டும். எல்லாமே பகவானிடமிருந்து வந்தது என்ற தத்துவப்படி பார்த்தால், பகவானிடமிருந்து வேறாகத் தனியாக வேறு ஒன்றும் இருந்திருக்க முடியாது. வேதத்தை பகவானும் உண்டு பண்ணவில்லை, ஆனாலும் அது அநாதி என்றால் அது எப்படி ஸாத்தியம்? பகவானுக்கும் புறம்பாக ஒன்றுமில்லை என்ற கொள்கைக்கு முரண்பாடாயிருக்கிறதே. ஒரே குழப்பமாக இருக்கிறதல்லவா?

இதற்கு விடை வேதத்திலேயே உள்ளது. சுக்கில யஜுர் வேதத்தின் கடைசிப் பகுதியான பிருஹதாரண்யக உபநிஷத் இந்தக் குழப்பத்தைப் போக்குகிறது. மனைவி மைத்திரேயி தன் கணவனான யாக்ஞ்யவல்கியரை அமிருதத்வம் (சாகாமை) அடைய வழி என்ன என்று கேட்டபொழுது, அவர் கூறினார்: 'ஈர விறகால் மூட்டப்பட்ட தீயிலிருந்து பிரிந்து புகை எவ்வண்ணம் கிளம்பிச் செல்லுகிறதோ, அவ்வண்ணமே ரிக்–யஜுர்–ஸாம–அதர்வண வேதங்கள் பரமாத்மாவிடமிருந்து மூச்சுக்காற்று போலத் தோன்றியவையாகும்.' *(பி.உ. II 4.10)*

அநாதியாக பகவான் என்றென்றும் இருந்திருக்கிறார் என்றால், வேதமும் அவருடனேயே, அவரது மூச்சுக்காற்றாக, அநாதியாக இருந்திருக்கிறது என்றாகிவிடுகிறது! இதில் கவனிக்க வேண்டிய சுவாரஸ்யமான விஷயம் என்ன வென்றால் நம் மரபின்படி பகவானும் வேதத்தை இயற்ற வில்லை, உண்டு பண்ணவில்லை என்பது தான். எப்பொழுதுமே பகவானும் வேதமும் சேர்ந்தே இருந்திருக் கின்றன.

நான்கு வேதங்களுக்கும் விரிவான உரை எழுதிய ஸாயணாச்சாரியார் வேதத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது 'யஸ்ய நி: ச்வஸிதம் வேதா:' என்கிறார். 'எவனுக்கு வேதம் தான் மூச்சுக் காற்றோ' என்று இதற்குப் பொருள். உபநிஷத்தில் கையாண்ட அதே நி: ச்வஸிதம் என்ற சொல்லை ஸாயனரும் சொல்லியிருக்கிறார். இங்கேயும் பகவான் வேதத்தைப் புனைந்தார் என்று கூறவில்லை.

பகவத் கீதையில் பகவான் கூறுகிறார். 'வேதை: ச ஸர்வை: அஹமேவ வேத்ய:', அதாவது, 'நானே எல்லா வேதங்களாலும் அறியப்படுகிறவன்! வேதகிருத் (வேதத்தைப் புனைந்தவன்) என்று சொல்லவில்லை; ஆனால் வேதாந்த கிருத் (வேதங்களின் முடிவான தத்துவத்தை உண்டு பண்ணினவன்) என்று பேசியிருக்கிறார். வேதாந்தம் என்ற தத்துவ ரூபத்தில் மக்களுக்கு வழிகாட்டியாக வருவதற்கு முன்னாலேயே, உலகசிருஷ்டி ஏற்படுவதற்கு முன்பே, சப்த ரூபத்தில் இந்த வேதங்கள் பகவானோடு பகவானாக, அவரது மூச்சுக் காற்றாக இருந்திருக்கின்றன.

ஒவ்வொரு ஸூக்தத்திற்கும் ஒரு ரிஷி (அல்லது சில ரிஷிகள்) உண்டு என்று பார்த்தோம். ஆனால் அந்த ரிஷிகள் அந்தந்த ஸூக்தங்களைப் புனைய வில்லை என்றும் பார்த்தோம். பின் ரிஷிக்கும் ஸூக்தத்திற்கும் என்ன தொடர்பு? சப்த அலைகளாக, பகவானின் மூச்சுக்காற்றாக இருந்த வேத மந்திரங்களைக் கண்டுபிடித்து, நமக்குப் புரியும் படியாக அவற்றுக்குச் சொல் வடிவம் கொடுத்து அவர்கள் உலகில் அவற்றைப் பரப்பினார்கள் என்பதேயாகும்.

ரிஷிகளுக்கு உலகில் ஏற்படுகிற எல்லா சலனங்களும் — அதாவது பரமாத்மாவின் சுவாஸகதிகளும்—தெரிந்தன. தெரிந்தது மட்டுமில்லை, ரேடியோ போன்ற சாதனைகள் மின் அலையை சப்த அலையாக மாற்றுவது போல, அந்த சலனங்களுக்குரிய சப்தங்கள் மனிதர்களுடைய காதுகளுக்கு

எட்டும்படியான சப்தங்களாகவும் இவர்களுக்குத் தெரிந்தன. அப்படிப்பட்ட சப்தங்களையே வேதமந்திரங்கள் என அவர்கள் சீடர்களுக்குப் போதித்தது, அவர்கள் மூலமாக உலகிற்குத் தந்திருக்கிறார்கள்.

வேத மந்திரங்களுக்கு சுருதி என்று வடமொழியில் பெயர் உள்ளது. எது கேட்கப்படுகிறதோ அது சுருதியாகும். நம் மரபின்படி குரு வாயால் வேதத்தை ஓதி, சீடர்கள் அதைக் காதால் கேட்டு, பாடம் பண்ணி, உலகிற்குப் பரப்பினார்கள் இதற்குக் 'கர்ண பரம்பரை' காதால் கேட்டுத் தலைமுறை தலைமுறையாக வந்தவை எனக் கூறுவார்கள். மகரிஷிகள் பிரபஞ்சத்தில் சப்த அவைகளாக இருந்த வேத மந்திரங்களைத், தங்களுடைய தெய்வீக சக்தி படைத்த காதுகளால் கேட்டு மக்களிடையே பரப்பினார்கள் என்பதாலும் வேதத்திற்கு சுருதி என்று பெயர் வந்தது. சுருதி என்பதைத்தான் தமிழில் எழுதாக் கிளவி என்கிறார்கள்.

வேத மந்திரங்களைக் கண்டு பிடித்த மகரிஷிகளுக்கு மந்திரதிரஷ்டார: என்று பெயர் உண்டு. இந்த வட மொழிச் சொல்லிற்கு மந்திரங்களைப் பார்ப்பவர்கள் என்று பொருள் ஆகும். மகரிஷிகள் வானத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த வேதமந்திரங்களைத் தங்களுடைய தெய்வீகக் கண்களால் பார்த்தார்களா? அப்படியானால் அந்த வேத மந்திரங்கள் எந்த லிபியில் எழுதப்பட்டிருந்தன? தேவநாகரியிலா அல்லது பிராம்மியிலா? வேத சப்தங்களையும், சுவரங்களையும் எந்த லிபியிலும் எழுத முடியாதே.

ரிஷிகள் வேத மந்திரங்களைப் பார்த்தார்களா, கேட்டார்களா? இதற்கெல்லாம் விளக்கங்கள் என்னவென்றால், உண்மையிலேயே, மகரிஷிகள் நியம நிஷ்டையுடன் கடும் தவம் செய்து, தியானத்தின் உச்ச நிலையை அடைந்த பொழுது, அவர்களுடைய உள்ளுணர்வால் இந்த மந்திரங்கள், இருட்டில் கருவானில் திடீர் என

மின்னல் பளிச்சிடுமாப் போலத் தோன்றின; வடமொழிய் ஸ்புரித்தன என்றும் ஆங்கிலத்தில் flash ஆகின என்று கூறலாம். அந்த ஆழ்ந்த நியான நிலையில் ரிஷிகளுடை கண்கள் எதையும் பார்க்கவில்லை, காதுகள் எதை கேட்கவில்லை; ஆனாலும் அந்த மந்திரங்கள் அவர்களுடை உள்ளுணர்வில் பளிச்சிட்டன.

இதில் இன்னொரு விஷயமும் கவனிக்கத்தக்க மகரிஷிகள் வேத மந்திரங்களைக் கண்டுபிடித்தார்க என்றால், இல்லாத ஒன்றை, அவர்கள் புதியதாகக் கண் பிடித்தார்கள் என்று பொருளில்லை. சில நூற்றாண் களுக்கு முன் தான் நியூட்டன் பூமியில் ஈர்ப்பு சக் (gravitation)யைக் கண்டு பிடித்தான். ஆனால் அதற் முன்னால் இந்த ஈர்ப்பு சக்தி இல்லாமலிருந்த தில்ல ஏற்கனவே இருந்ததை, மக்களுக்குத் தெரியாமலிருந்த அவன் கண்டு பிடித்து மக்களுக்கு விளக்கினான். அ மாதிரி ஏற்கனவே இருந்த அமெரிக்காவை கொலம்ப முதல் முறையாகக் கண்டு, ஐரோப்பிய மக்களுக்குத் தா கண்டதைக் கூறினான். இதே மாதிரிதான், மகரிஷிகளு ஏற்கனவே சப்த அவைகளாக இருந்த வேத மந்திரங்களை கண்டு பிடித்தார்கள்; அதாவது சாதாரண மக்கள் கேட் கூடிய ஒலிவடிவத்தைக் கொடுத்தார்கள்.

* * *

நமது மரபின் படி வேதம் அநாதியானது, அதற் கால நிர்ணயம் செய்ய முடியாது என்று பார்த்தோம். இ வேதத்தின் காலத்தைப்பற்றிய தற்கால ஆராய்ச்சிகளை சற்று கவனிப்போம்.

வேதத்தை ஓதியும் அதன் பொருளைப் படித்து இருக்கிற பண்டிதர்கள் இந்த மரபை ஒப்புக் கொள்வத இந்த ஆராய்சியில் இறங்கவே இல்லை. ஆனா ஆங்கிலேயர்கள் ஆட்சி. கு வந்தபிறகு, இங்கு வந்த

ஆங்கிலேயர்களும், மற்றும் பிரான்ஸ், ஜெர்மனி நாட்டவர்களும் படிப்பில் ஆர்வம் உள்ளவர்களாக இருந்தார்கள். அவர்கள் மிகுந்த சிரமத்துடன் வடமொழியைப் பயின்று பல வடமொழி நூல்களைப் படித்து, ஆங்கிலத்திலும் மற்ற ஐரோப்பிய மொழிகளிலும் மொழி பெயர்ப்புச் செய்திருக்கிறார்கள். சிறுகச்சிறுக இந் நூல்களைப் பற்றிய ஆராய்ச்சியும் செய்திருக்கிறார்கள். இப்படிச் செய்த பல ஆராய்ச்சிகளில் வேதத்தின் கால நிர்ணயமும் ஒன்றாகும்.

முதலில், பொதுவாக, ஒரு நாட்டின் பண்டைய கலாச்சாரத்தைப் பற்றிய கால நிர்ணயம் எவ்வாறு செய்கிறார்கள் என்று பார்ப்போம். சமீப காலத்தில் கார்பன் டேடிங் பிராஸஸ் (carbon dating process) என்று ஒரு பரிசோதனை முறையைக் கண்டு பிடித்துள்ளார்கள். இதன் படி ஒரு நாட்டின் பண்டைய நூல்களோ, மத சம்பந்தமான பாசுரங்களோ, காவியமோ எழுதி வைத்திருக்கும் காகிதம், ஓலை உலோகத்தட்டுப் போன்ற பொருளைப் பரிசோதித்து அந்தக் கலாசாரத்தின் காலத்தை நிர்ணயிப்பார்கள்.

உதாரணமாக எகிப்து நாட்டை எடுத்துக் கொள்ளுவோம். அவர்களுடைய மிகப்பழமையான கதையாகிய 'சின்பாத் என்கிற மாலுமி'யும், அவர்களுடைய அக்கால தெய்வமான ஸூரியனின் மேல் உள்ள பாசுரங்களும், மற்ற படைப்புகளும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. நாணல் போன்ற நீர் வாழ் தாவரத்திலிருந்து தயாரித்த 'பபைரஸ்' (papyrus) என்ற காகிதம் போன்ற பொருளில் அவர்கள் இவைகளையெல்லாம் எழுதி, அவைகளைச் சுருட்டி, சுருள் சுருளாக வெகு பத்திரமாகப் பெட்டிகளில் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். கார்பன் டேடிங் பிராஸஸ் மூலம் இந்தப் பபைரஸ்யை ஆராய்ந்து எகிப்தின் பண்டைய நாகரிகம் இன்றைக்கு 6000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று சந்தேகத்துக்கிடமில்லாமல் நிர்ணயித்திருக்கிறார்கள்.

இப்பொழுது ஈராக் என்று கூறப்படும் நாட்டில், வெகு காலத்திற்கு முன், பாபிலோனியன் நாகரிகமும் பண்பாடும் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது. பல அரச வம்சங்கள் நாட்டை நல்ல முறையில் ஆண்டு, அயல் நாடுகளைப் போரில் வென்று, கோலோச்சி வந்தன. அந்தப் பண்பாட்டின் புகழ் வாய்ந்த இலக்கியமான கில்கமேஷின் காவியத்தையும் மற்ற மதசம்மந்தமான பாசுரங்களையும் அவர்கள் களிமண் ஓடுகளில் பொறித்தார்கள். நல்ல களிமண்ணால் சதுரமாகவும் நீண்ட சதுரமாகவும், மெல்லிய ஓடுகளைச் செய்து, அவைகள் ஈரமாக இருக்கும்பொழுதே, எழுத்தாணியால் அவர்கள் தங்களுடைய இலக்கிய, மத சம்பந்தமான படைப்புகளை அவைகளின் மேல் எழுதினார்கள். பிறகு, சூளையில் அவைகளைச் சுட்டு எடுத்தார்கள். இந்த ஏடுகளை அடுக்கிக் கட்டுகளாகக் கட்டிப் பெட்டிகளில் பாதுகாத்தார்கள். இந்த ஓடுகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவைகளைக் கார்பன் டேடிங் பிராஸஸ் மூலம் பரிசோதித்ததில், இவைகள் 5500 ஆண்டுகளுக்கு முன் செய்யப்பட்டன என்று உறுதியாகக் கூற முடிந்தது. பாபிலோனிய நாகரிகம் கி.மு. 35வது நூற்றாண்டில் வளம்பெற்று விளங்கியது என்று நிர்ணயிக்க முடிந்தது.

இந்தியாவில் பௌத்த மதக் கோட்பாடுகளை, அசோகர் காலத்தில், கல்வெட்டுகளில் பொறித்தார்கள். மற்ற சில நாகரிகங்களின் இலக்கியத்தை செப்பேடுகளிலும் மற்ற பொருள்களிலும் பதித்தார்கள். இவைகளை எல்லாம் கார்பன் டேடிங் பிராஸஸ் மூலம் கால நிர்ணயம் செய்ய முடிந்தது.

ஆனால் ஆராய்ச்சியாளர்கள் வேதத்தைப் பற்றிய கால நிர்ணயத்தை இந்த முறையில் செய்ய முடியவில்லை. குரு வாயால் ஓதி, சீடர்கள் காதால் கேட்டுப்பாடம் பண்ணி மற்றவர்களுக்குப் பரப்பிய வேதத்தை எவ்வாறு கார்பன்

டேடிங் செய்வது? அதுதான் எழுதாக் கிளவி ஆயிற்றே. ஆகையால் அவர்கள் வேறு இரண்டு முறைகளைக் கையாண்டு வேதகாலத்தை நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

ஆங்கிலேயர்களைப் போலவே சில இந்தியர்களும் வேதகாலத்தை நிர்ணயம் செய்ய ஆராய்ச்சி நடத்தி இருக்கிறார்கள். நம் நாட்டு சுதந்திரத்திற்காக அரும்பாடு பட்ட மூத்த தலைவரான பாலகங்காதர திலகரும் அவர்களில் ஒருவர். ஆங்கிலமும், வடமொழியும் நன்றாகப் பயின்று, சம்பந்தப்பட்ட நூல்களைப்படித்து, ஆங்கிலேயரின் ஆராய்ச்சி முறைகளைப் பின்பற்றி அவர் கி.மு. 6000ல் வேதம் புனையப்பட்டது என்று நிர்ணயம் செய்திருக்கிறார். வேறு சிலர் வேதம் கி.மு. 3000ல் செய்யப்பட்டது என்கிறார்கள். மாக்ஸ் முல்லர் போன்ற சில அறிஞர்கள் இன்றும் சமீப காலமாக, கி.மு. 1500ல் வேதத்தை இயற்றினார்கள் என்று கூறுகிறார்கள். இவர்கள் கையாண்ட இரண்டு முறைகளையும் சற்று பார்ப்போம்.

முதல் முறையில், ஆராய்ச்சியாளர்கள் வான சாஸ்திரம் மூலமாக வேதகால நிர்ணயம் செய்ய முயன்றார்கள். வேதத்தின் உட்சான்று (Internal evidence) மூலமாக அச்சமயம் கோள்கள் எந்த இடங்களில் இருந்தன என்று பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட கோள்களின் சேர்க்கையிலிருந்து (planetary conjunction) அவர்கள் வேதகாலத்தை நிச்சயிக்கிறார்கள். ஆனால் இதில் குறைபாடு என்னவென்றால் இந்தச் சேர்க்கை அதற்கு முன்னும் பல தடவைகள் ஏற்பட்டிருக்கும். ஆகையால் இதை உறுதியாக நிர்ணயிக்கும் முறையாகக் கருத முடியாது.

இரண்டாவது முறையில் காலப்போக்கில் மொழியில் ஏற்படும் மாறுதல்களை (mutation)க் குறித்துக்கொண்டு, அதிலிருந்து ஒரு நூலின் காலத்தை நிர்ணயம் செய்ய ஆராய்ச்சியாளர்கள் முயன்றிருக்கிறார்கள். இதில் வட

மொழியில் லிபி என்றும் ஆங்கிலத்தில் ஸ்கிரிப்ட் (script) என்றும் சொல்லப் படும் எழுத்துக்களில் ஏற்படும் மாறுதலைக் கொண்டு செய்யும் கால நிர்ணய ஆராய்ச்சி வேதத்திற்குப் பொருந்தாது; ஏனென்றால் வேதம் தான் எழுதாக் கிளவியாயிற்றே! ஆகையால் சொற்களின் வடிவத்திலும் ஒலியிலும் ஏற்பட்ட மாறுதல்களைக் கொண்டு ஆராய்ச்சியாளர்கள் வேதத்தின் காலத்தைக் கணக்கிடு கிறார்கள்.

பல மொழிகளிலும் சொற்களில் ஏற்பட்ட திரிபுகளை (மாறுதல்களை)க் கவனித்து, அவர்கள் ஒரு சொல்லில் ஒரு மாறுதல் ஏற்பட சராசரி 200 ஆண்டுகள் ஆகின்றன என்று கூறுகிறார்கள். ஒரு ஆராய்ச்சியாளர் சில வேத கால சொற் களை எடுத்துக்கொண்டு, அவைகள் இன்று என்ன ஒலிவடிவம் பெற்றிருக்கின்றன என்று பார்த்து, எத்தனை திரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன என்று கணக்கெடுத்தார். அவருடைய கணக்கு (chart) பிரகாரம் 20 மாறுதல்கள் ஏற்பட்டு உள்ளன என்று பார்த்தார். உடனே அவர் 20 x 200 = 4000 ஆண்டுகளுக்கு முன் வேதம் உண்டானது என்றார்! இன்னுமொருவர் கணக்குப்படி சொற்களில் 30 மாறுதல்கள் ஏற்பட்டதால் 30 x 200 = 6000 ஆண்டுகளுக்கு முன் வேதம் தோன்றியது என்றார்!

இதில் பெரிய குறைபாடு உள்ளது. பல மக்கள் தினசரி தங்கள் இஷ்டம் போலப் பேசும் சொற்களில் 200 ஆண்டு களுக்கு ஒரு முறை மாற்றம் ஏற்படலாம். ஆனால் வேதம் அப்படியில்லை. பின்னால் கூறப்போகும் கிரமம், ஜடை கனம் முதலிய முறைகளில் வேதத்தை ஓதுவதால், ஒவ்வொரு வேதச் சொல்லும் முன்னும் பின்னுமாகப் பல தடவை பின்னி ஓதப் பட்டு ஒவ்வொரு சொல்லும் சற்றும் மாறாமல் பல்லாயிர மாண்டுகளாக ஒரே வடிவத்தையும், ஒலியையும் பெற்றிருக்கின்றன.

சில ஆண்டுகளுக்கு முன் பல வேத பண்டிதர்கள் முன் வந்து பூனாவில் ஒரு ஆராய்ச்சியை நடத்தினார்கள். காஷ்மீரத்திலிருந்து கன்யாகுமரி வரையிலும், குஜராத்தி லிருந்து காமரூபம் வரையிலுமுள்ள எல்லாப் பிரதேசங்களிலிருந்தும் ரிக்வேதத்தின் ஒரே சாகை (பிரிவு) யைச் சேர்ந்த வேத பண்டிதர்களை அழைத்து, அவர்களை ரிக் வேதத்தை ஓதச் சொன்னார்கள். பல நாட்கள் ஓதி அவர்கள் வேதத்தை முடித்தார்கள். இதை மேற்பார்வை யிட்ட பண்டிதர்கள் 10,000க்கும் மேற்பட்ட ரிக்குகளில், நாற்திசையிலிருந்தும் வந்த பண்டிதர்கள் ஓதினதில் ஒரே ஒரு எழுத்தில் தான் பண்டிதர்களிடையே வேற்றுமையைக் காண முடிந்தது!

ஆகையால் அடிக்கடி உபயோகத்தில் இருந்து, வேகமாகத் தேய்ந்து உருவாகும் சொற்களின் அடிப்படையில் வேத காலத்தைக் கண்டு கொள்ள முயற்சிப்பது தவறாகும்.

அக்ஷர சுத்தத்தால் தான் மந்திரங்களுக்கு சக்தியே ஏற்படுகிறது என்ற கொள்கையின் பேரில் நம் முன்னோர்கள் வேத சப்தங்களைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றி வந்திருக் கிறார்கள்.

இதிலிருந்து நவீன கால ஆராய்ச்சி முறைகளின் மூலம் வேத காலத்தை நிர்ணயம் செய்வது சாத்திய மில்லை என்பது தெளிவாகிறது ஆகையால், நம்மரபின் படி வேதம் அநாதியானது என்பதை ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும்.

* * *

எழுதி வைக்காமலே வேதத்தை ஒரு சிறு பிழை கூட வராமல் காப்பாற்றுவதற்காக, நம் முன்னோர்கள் பல வழிகளை வகுத்துள்ளார்கள். வேதத்திற்கு மேலும் கீழுமாக உச்சரிக்க வேண்டிய ஸ்வரங்கள் உண்டு. மந்திரங்களின் சக்தி, இந்த எழுத்துக்களிலும் அவைகளை ஓத வேண்டிய

ஸ்வரங்களிலும் அடங்கியிருக்கிறது. ஒரு எழுத்து மாறினாலும் பலன் கிடைக்காது; ஒரு ஸ்வரம் தப்பினாலு பலன் மாறிவிடும். வேதத்தின் ஒவ்வொரு எழுத்தையு ஒவ்வொரு ஸ்வரத்தையும் மிகுந்த கண்ணும் கருத்துமாக காப்பாற்று வதற்காக, நம் பெரியோர்கள் வகுத்த ப வழிகளில் நான்கு முறையான அத்தியாயங்கள் (ஓதுதல் வேதப்படிப்பு குறைந்து வரும் இக்காலத்திலு வழக்கிலுள்ளன.

ஆங்கிலத்தில் ஒவ்வொரு சொல்லும் தனித்தனியாக அடுத்த சொல்லுடன் சேராமல், ஒலி வடிவ பெற்றிருக்கிறது. அதாவது தமிழில் உள்ள ஸந்தி ஆங்கிலத்தி இல்லை. பழைய சங்ககால நூல்களிலும், தேவாரம் திவ்யப்பிரபந்தம், திருக்குறள் போன்ற நூல்களிலும் இந்த சேர்க்கை (ஸந்தி)யைக் காணலாம். வட மொழியில் இந்த ஸந்தி இன்னும் அதிகம். இப்படி ஸந்தி சேர்த்துச் சொல்லுவதே வேதத்தின் ஸம்ஹிதா பாடம் எனப்படும் இந்த ஸந்திகளைப் பார்த்து, சொற்களை (பதங்களை)த் தனித்தனியாக ஓதுவதைப் 'பதபாடம்' என்று சொல்லுகிறார் கள். மேலே சொன்ன நான்கு முறைகளில் இது முதலாவ தாகும்.

இரண்டாவது அத்தியயன முறை 'கிரமபாடம்' ஆகும். இதில் ஒரு மந்திரத்தின் முதற் சொல்லை இரண்டாவது சொல்லுடன் சேர்த்து, இரண்டாவது சொல்லை மூன்றாவதுடன் சேர்ந்தும், மூன்றாவதை நான்காவதுடன் சேர்த்தும், இப்படியே அந்த மந்திரம் முடியும் வரை சொல்லிக்கொண்டு போக வேண்டும்.

மூன்றாவது முறை 'ஜடா' பாடம் எனப்படும். இதிலே முதல் சொல்லை இரண்டாவது சொல்லுடன் சேர்த்துச் சொன்னவுடன், அதை மாற்றி இரண்டாவதை முதற் சொல்லுடன் சேர்க்க வேண்டும். மறுபடியும் முதலை

இரண்டாவதுடன் சேர்க்க வேண்டும். அப்புறம் இரண்டாவது சொல்லை மூன்றாவதோடும், அதை மாற்றி மூன்றாவதை இரண்டாவதோடும், திரும்பவும் இரண்டாவதை மூன்றாவ தோடும், இப்படியே பின்னால் வருகிற சொற்களையும் மாற்றி மாற்றிச் சேர்த்துக் கொண்டு போக வேண்டும்.

எல்லாவற்றையும் விட சிரமமானது நான்காவது அத்தியயன முறையாகிய 'கன' பாடம். முன்னும் பின்னுமாகச் சொற்களைச் சேர்த்துச் (permutations and combinations) சொல்லும் அத்தியயன முறையே கனபாடம் ஆகும். இந்தப் பயிற்சியைப் பெற்றவர்களை கனபாடிகள் என்று அழைப்பார்கள். ஒரே வேத சாகையைச் சேர்ந்த சில கன பாடிகள் கோஷ்டியாக வேத மந்திரங்களை கனபாடமாக ஓதினால், அது கேட்பதற்கு பரமானந்தமாக இருக்கும். வேத கோஷத்தில் இயற்கையாக உள்ள காம்பீரியம் பண்மடங்கு அதிகரித்து, அந்த ஒலிகள் நம் காதுகளில் புகுந்து, உள்ளத்தை உருக்கி, நம்மைப் புளகாங்கிதம் அடையச் செய்கின்றன. அமெரிக்க, ஐரோப்பிய நாட்டைச் சேர்ந்த பலர், இதை நன்கு உணர்ந்து, இந்த கோஷங்களை ஒலிநாடா (audio cassette) அல்லது ஒளிநாடா (video cassette)ல் பதிவு செய்து தம் நாடுகளுக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள். வெளி நாடுகளில் பணிபுரியும் நம் நாட்டவர் பலரும் இப்படியே செய்துள்ளனர்.

* * *

'அனந்தாவை வேதா என்று வேதத்திலேயே கூறியிருக் கிறது. 'அந்த: 'என்ற வடமொழிச் சொல்லிற்கு முடிவு என்று பொருளாகும். ஆக 'அனந்தாவை வேதா:' என்றால் வேதத்திற்கு முடிவே இல்லை என்றாகும். இந்தப் பிரபஞ்சத்தில் எண்ணிலடங்கா வேத மந்திரங்கள் சப்த அவைகளாக ஆரம்ப காலத்திலிருந்து உலவிவருகின்றன. ஒவ்வொரு பிரளயத்திற்குப் பிறகும் ஒரு பிரம்மா

தோன்றுகிறார். அவர் சப்த அவைகளாக இருக்கும் வேத மந்திரங்களை எல்லாம் அறிந்து, அந்த மந்திரங்களின் மூலமாக இந்த உலகத்தையும் எல்லா ஜீவராசிகளையும் படைக்கிறார். இது தான் நமது மரபு.

இப்படிச் சப்த அவைகளாக இருக்கும் வேத மந்திரங்களில் நமக்கு உபயோகமான பல மந்திரங்களை மகரிஷிகள் தங்களுடைய தபோ பலத்தால் கண்டறிந்து உலகிற்குப் பரப்பி இருக்கிறார்கள். இது தவிர, இன்னும் எத்தனை எத்தனையோ எண்ணிடலங்கா வேத மந்திரங்கள் சப்த அவைகளாக இந்தப் பிரபஞ்சத்தில் உலவி வருகின்றன. அடுத்த பிரம்மா வரும் பொழுது அவைகள் உலகப் படைப்பிற்குப் பயன்படுத்தப் பெறும்.

மகரிஷிகள் கண்டறிந்த மந்திரங்கள் ஒரே குவியலாக இருந்தன. பராசரருடைய மகனான கிருஷ்ணத்வைபாயனர் என்ற மகரிஷி இந்தக் குவியலைச் சாகை, சாகையாகப் பிரித்து ஒழுங்குப்படுத்தினார். வடமொழியில் சாகை என்றால் கிளை என்று பொருளாகும். வேதம் என்ற மகத்தான ஆல மரத்திற்குப் பல கிளைகளாக இந்த சாகைகள் விளங்கின. தவிர, கிருஷ்ணத்வைபாயனர் மந்திரங்களை நான்கு வேதங்களாகப் பிரித்தார்; அவைதான் ரிக், யஜுர், ஸாம, அதர்வண வேதங்களாகும். இவைகளில் ஒவ்வொரு வேதத்திற்கும் சில சாகைகள் சாரும். குவியலாக இருந்த வேத மந்திரங்களைப் பிரித்து, ஒழுங்கு படுத்தியதால் கிருஷ்ணந்வைபாயருக்கு வேத வியாஸர் என்ற பெயர் வந்தது. (வடமொழியில் வியாஸ: என்றால் ஒழுங்கு படுத்தியவர் என்று பொருள்.)

மேல் நாட்டு ஆராய்ச்சியாளர்கள் ரிக் வேதம் முதலில் வந்தது; பிறகு மற்ற வேதங்களும் கடைசியில் அதர்வண வேதமும் வந்தன என்று கூறுகிறார்கள். ஆனால் நமது மரபின் படி எல்லா வேதமந்திரங்களும் ஒரே சமயத்தில் சப்த அவைகளாக இருந்தன என்றாகும்.

ஒவ்வொரு சாகைக்கும் ஸம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம், உபநிஷத் என்ற நான்கு பாகங்கள் உண்டு. வேதத்தை அத்தியயனம் பண்ணுவது, சடங்குகளில் ஓதுவது என்பது ஸம்ஹிதா பாகத்தைத் தான் குறிக்கும். இப்பொழுது ஸம்ஹிதா பாகத்தை மட்டும் பார்ப்போம்.

வடமொழியில் ஸம்ஹிதா என்றால் ஒழுங்குபடுத்திச் சேர்த்து வைத்தல் என்று பொருளாகும். ரிக் வேத ஸம்ஹிதை பூராவும் செய்யுள் வடிவத்தில் உள்ளது. பிற்காலத்தில் வடமொழிக் காவியங்களில் சுலோகம் என்று சொல்லப்படும் செய்யுளுக்கே வேத காலத்தில் ரிக் என்ற பெயர் இருந்தது. ரிக் என்றால் துதி என்று பொருளாகும். பல தேவதைகளைக் குறித்து இந்த ரிக்குகள் துதிக்கின்றன.

ரிக் வேத ஸம்ஹிதையில் மொத்தம் 10,170 ரிக்குகள் உள்ளன. இவைகளை 1028 ஸூக்தங்களாக வகுத்திருக் கிறார்கள். இந்த ஸூக்தங்கள் எல்லாம் பத்து மண்டலங்களில் அடங்கியுள்ளன. எல்லாத் தேவதைகளைப் பற்றியும் துதிகள் மயமாக இருப்பது. ரிக் வேதத்தின் பெருமை. அக்கால மக்களின் சமூக வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை முறைகளைப் பற்றிப் பல குறிப்புகள் ரிக் வேதத்தில் உள்ளன. தற்கால திருமணச் சடங்குகளில் ஓதப்படும் சில மந்திரங்கள் ரிக்வேதத்தில் ஸூரியனின் மகள் திருமணத்தை விவரிக்கும் ஸூக்தத்தில் உள்ளன. காளிதாசன் என்ற மகாகவி எழுதிய விக்கிரமோர் வசீயம் என்ற நாடகம் ரிக் வேதத்தில் உள்ள ஊர்வசி – புரூரதவஸ் உரையாடலை அடிப்படையாகக் கொண்டு புனையப்பட்டதாகும். மிகப் பொருத்தமான உவமைகள் அமைந்திருப்பதாயும், உஷஸ் முதலிய தேவதைகளின் வருணனை போன்ற ரிக்வேதப் பகுதிகள் இருப்பதாலும் இதை மிக அபூர்வமான கவிதை என்று ரசிகர்கள் கொண்டாடுகிறார்கள். தவிர, உயர்ந்த தத்துவங்கள், உன்னதக் கருத்துக்கள், பின்னால் உபநிஷத்தில் கூறப்படும் விரிவான வேதாந்த சிந்தனைகளின் கரு, இவை

எல்லாம் ரிக் வேதத்தில் ஆங்காங்கே பரவிக் கிடக்கின்றன. காஞ்சி காமகோடி பரமாச்சாரியர் கூறியபடி, யஜுர் வேத்தில் உள்ள கர்மா, ஸாம வேதத்தில் பண்ணப் பட வேண்டிய (ஸாம) கானம் இவற்றுக்கெல்லாம் தாய்ச் சரக்கு ரிக் வேத ரிக்குகள் தான்.

யஜுர் வேதத்தில் கிருஷ்ண யஜுஸ், சுக்ல யஜுஸ் என்று இரு சாகைகள் உள்ளன. முதலில் வைசம்பாயனார் கிருஷ்ண யஜுர் வேதத்தை உலகுக்குப் பரப்பினார். பிறகு அவருடைய சிஷ்யர் யாக்ஞ்ய வச்சியர் சுக்ல யஜுர் வேதத்தை ஸூரியனிடமிருந்து கற்ற சீடர்களுக்குப் போதித்தார். கிருஷ்ண யஜுர் வேத ஸம்ஹிதைக்கு தைத்திரிய ஸம்ஹிதை என்றும் சுக்ல யஜுர் வேதத்திற்கு வாஜஸநேயி ஸம்ஹிதை என்றம் வேறு பெயர்கள் உள்ளன.

கர்ம யோகத்தை நன்றாக அமைத்துக் கொடுத்தது யஜுர் வேதத்தின் பெருமை. மாபெரும் வேள்விகளான தர்ச பூர்ண மாஸம், ஸோம யாகம், வாஜபேயம், ராஜ ஸூயம், அச்வமேதம் முதலியனவும், மற்றும் பல பெரிய ஸ்தர யாகங்களும் தைத்திரிய ஸம்ஹிதையில் தான் விரிவாகக் காண முடியும். தவிர, ரிக்வேதத்தில் காண முடியாத சில உயர்ந்த துதிகளும் யஜுர் வேதத்தில் உள்ளன. உதாரணமாக, மக்களால் பெரிதும் போற்றப்படும் ஸ்ரீ ருத்ரம் என்ற பகுதி யஜுர் வேதத்தில் தான் உள்ளது. ஏகாதச ருத்ரம், மஹாருத்ரம், அதிருத்ரம் என்று பலவாறாகக் கோஷ்டியாக ஓதும் இந்தத் துதியை ரிக் வேதத் திலேயோ, ஸாம வேதத்திலேயே காண முடியாது. ஸாம வேதியான ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் என்ற மகான், இவ்வளவு உயர்ந்த துதியான ஸ்ரீ ருத்ரம் யஜுர் வேதத்தில் உள்ளதால் தான் யஜுர் வேதியாக் பிறக்க வில்லையே என்று குறைப்பட்டார்.

* சுக்ல யஜுர் வேதம் உண்டான விரிவான கதையை என்னுடைய மகரிஷிகள் வரலாறு என்னும் நூலில் காணலாம்.

வட மொழியில் 'யஜ்' என்ற வினைச் சொல்லிற்கு 'வழிபடுதல்' என்ற பொதுவான பொருள் இருந்த போதிலும், முக்கியமாக அச்சொல் வேள்வி மூலம் வழிபடுவதையே குறிக்கும். இந்த வினைச் சொல்லிருந்து உருவானதுதான் யஜுஸ் என்ற சொல்லும் யக்ஞ்யம் என்ற சொல்லும் ஆகும். ரிக் வேதத்திலுள்ள துதி ரூபமான மந்திரங்களை, வேள்வி என்ற காரியத்தில் பொருத்திக் கொடுப்பதே யஜுர் வேதத்தின் முக்கிய நோக்கமாக இருக்கிறது. ரிக் வேதத்தில் உள்ள பல மந்திரங்களும் யஜுர் வேதத்திலும் கூறப்படுகின்றன. அதோடு கூட, வேள்விகளை எப்படிச் செய்வது என்பதை இந்த வேதம் உரை நடையில் விவரிக்கிறது. வாயால் துதி செய்ய ரிக் வேதம் உதவுகிறது; காரியத்தில் வழிபாடு செய்ய யஜுர் வேதம் உதவுகிறது.

இந்தியா பூராவுமே மற்ற வேதிகளை விட யஜுர் வேதிகள் அதிகமாக உள்ளனர். வட மாநிலங்களில் சுக்ல யஜுர் வேதிகளும் தென் மாநிலங்களில் கிருஷ்ண யஜுர் வேதிகளுமே மிகுதியாக இருக்கிறார்கள்.

ரிக் வேத்திலுள்ள புருஷ ஸூத்தம், சில மாறுதல் களுடன் யஜுர் வேதத்திலும் உள்ளது. தற்காலத்தில் புருஷ ஸூத்தத்தை ஓதும் பொழுது, யஜுர் வேதத்தில் காணப்படும் மந்திரங்களையே கூறுகிறார்கள். இப்படியாக யஜுர் வேதத்திற்குப் பல பெருமைகள் உள்ளன.

'ஸாம்' என்ற வினைச் சொல்லிற்கு வடமொழியில் சமாதானப்படுத்துவது, சந்தோஷப்படுத்துவது என்ற பொருளாகும். துதிப்பதாலேயே மகிழும் இறைவன், அந்தத் துதியையே இனிமையான பாட்டாகப் பாடினால் இரட்டிப்பு சந்தோஷம் அடைகிறான். ரிக் வேதத்திலுள்ள பல துதிகளையே, அந்தந்த மந்திரங்களை ஸாம கான மாக்கித்தருகின்றது ஸாம வேதம். பிற்காலத்தில் உண்டான ஸப்தஸ்வர சங்கீதத்திற்கு மூலம் ஸாமகானம் தான்.

ஸாமவேத மந்திரங்கள் பெரும்பாலும் ரிக் வேதத்தி இருப்பவை தான்; ஆனாலும் அவைகளை ஸாமகானத்தி ஓதினால் அதற்குத் தனிச்சிறப்பு அமைகிறது; ஆத்ம சிரே ஸையும் தெய்வத்தினுடைய பிரீதியையும் அதிகமாக அளிக்கு உயர்வு ஸாமவேதத்திற்கு உள்ளது. ஆகையால் தா கிருஷ்ண பகவான் பகவத் கீதையில் கூறுகிறார்.

வேதானாம் ஸாமவேதோஸ்மி — என்று, ஒவ்வொ வர்க்கத்திலும் எது மிகவும் உயர்ந்ததாக இருக்கிறதோ அ தானாக இருக்கிறேன் என்று கிருஷ்ணன் அர்ஜுனனிட கூறும் பொழுது, இதைச் சொல்லுகிறார். லலிதா ஸஹஸ் நாமத்தில் அம்பாளுக்கு இருக்கும் ஆயிரம் பெயர்களி ஒன்று 'ஸாமகானப்ரியா' ஆகும். சியாமா சாஸ்திரிகளு 'ஸாமகான வினோதினி' என்று மதுரை மீனாக்ஷியை குறித்துப் பாடியுள்ளார். சிவ அஷ்டோத்திரத்தி 'ஸாமகானப் பரியாய நம': என்று சிவனுக்கு ஒரு பெய உள்ளது. 'சந்தோக ஸாமம் ஓதும் வாயான்' என் தேவாரமும் சிவனைப் போற்றுகிறது. வைஷ்ணவ திவ்விய பிரபஞ்சத்திலும் "சந்தோகன் பௌழியன் ஐந்தழல் ஏம் தைத்திரியன் ஸாமவேதி" என்று திருமங்கை யாழ்வா திருமாலைக் ஸாம வேதி என்று வருணிப்பார். சிவ பார்வதி, விஷ்ணு ஆகிய மூவரையும் 'ரத்னத்ரய என்பதாகத் தெய்வங்களில் மிக உயர்ந்த இடத்தில் அப்பய தீக்ஷிதர் நிலை நாட்டியிருக்கிறார். அப்படிப்பட்ட மூவருக்கு ஸாம வேதத்தில் விசேஷப் பற்று உண்டு என்ப அவ்வேதத்தின் பெருமை யாகும்.

அதர்வன் என்ற வடமொழிச் சொல்லிற் அக்கினியையும் ஸோமனையும் வழிபடும் மதகுரு என் பொருளாகும். அந்தப் பெயரிலேயே ஒரு மகரிஷி இருந்தா அவர் மூலம் உலகிற்குப் பிரகாசமானது அதர்வண வேத உரைநடை, செய்யுள் இரண்டும் கலந்துள்ள இந்த வேத ஆபத்துக்களைப் போக்கு வதற்கும், சத்துருக்கள

அழிப்பதற்கும் பல மந்திரங்களைக் கூறுகிறது. மற்ற வேதங்களில் இல்லாத பல தேவதைகள், கோரமான பல ஆவிகள் இவைகளைக் குறித்து பல மந்திரங்கள் இந்த வேதத்தில் உள்ளன. மாந்திரீகம் என்று இப்பொழுது சொல்லப்படும் விஷயங்கள் அந்த வேதத்திலிருந்து வந்தவைதான்.

உயர்ந்த கருத்துக்களும் தத்துவங்களும் கொண்ட பல மந்திரங்களும் இந்த வேதத்தில் உள்ளன. உலகப் படைப்பில் உள்ள பல வினோதங்களைப் பாராட்டிப் பேசுகிற பிருதிவீ ஸூக்த்தம் இந்த வேதத்தில் ஒரு பகுதியாகும்.

வேள்வியை மேற்பார்வை பார்க்கிற பிரம்மாவை அதர்வண வேதத்திற்குப் பிரதிநிதியாகச் சொல்லியிருப்பது இதற்கு ஒருபெருமை. இதன் ஸம்ஹிதா பாகத்தின் அத்தியயனம் வடக்கே நிரம்பத் தேய்ந்து போய், தெற்கு மாநிலங்களில் அடியோடு இல்லாமல் போய்விட்டது. காஞ்சி காமகோடி பரமாசாரியாரின் பெரு முயற்சியால், 'வேத ரஷண நிதி' என்ற நிறுவனத்தின் மேற்பார்வையில், அதர்வண வேதத்தைப் புனருத்தாரணம் செய்ய முயற்சிகள் நடக்கின்றன; குஜராத் மாநிலத்தில ஸினோர் என்ற இடத்தில் ஒரு அந்தணர் இருந்தார். அவர் அதர்வண வேதத்தின் ஒரு சாகையை நன்கு அத்தியயனம் செய்திருந்தார். இந்தியா பூராவும் அந்த சாகையைத் தெரிந்தவர்கள் வேறு ஒருவரும் இல்லை. வயதான அந்த அந்தணருக்குப் பிறகு அதர்வண வேதத்தின் அந்த சாகையே அழியும் நிலையில் இருந்தது. காஞ்சி பரமாச்சாரியார்களும், ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதியும் பெருமுயற்சி செய்து, தமிழ் நாட்டிலிருந்து நான்கு அந்தணச் சிறுவர்களுக்கு உபநயனம் செய்வித்து அவர்களை ஸினோருக்கு அனுப்பினார்கள். அவர்களும் அந்த அதர்வண வேத அந்தணருடன் தங்கி, அந்த சாகையை அவரிடமிருந்து பயின்றார்கள். வேதரஷண நிதி இதற்கான பணத்தைச்

கொடுத்து உதவியது. இப்படியாக சிறுகச்சிறுக அதர்வண வேதம் தழைக்கிறது.

* * *

வேதத்திலுள்ள நான்கு பாகங்களில் ஸம்ஹிதா பாகத்தை விரிவாகப் பார்த்தோம். மிகுதியுள்ள மூன்றையும் இப்பொழுது கவனிப்போம்.

பிராம்மணம் என்ற பாகத்தில் கர்மாக்களை (அதாவது வேள்விகளை) எப்படிச் செய்ய வேண்டும் என்று விளக்கியிருக் கிறது. வேத ஸம்ஹிதையில் உள்ள மந்திரங்களை, வேள்வி என்ற காரியமாக்கும் பொழுது, மந்திரச் சொற்களுக்கு எப்படிப் பொருள் கொள்ள வேண்டும் என்று பிராம்மணம் விளக்குகிறது. சுருக்கமாகச் சொன்னால் வேதத்தில் விதிக்கப்பட்ட வேள்விகளுக்கு பிராம்மணம் ஒரு வழிகாட்டி நூல் (guide book) ஆக விளங்குகிறது.

'அரண்யம்' என்ற வடமொழிச் சொல்லிற்குக் காடு என்று பொருள் என்பது தெரிந்ததே. இதிலிருந்து ஆரண்யகம் உருவாகியுள்ளது. வேத மந்திரங்களைப் பிரயோகம் செய்து, பிராம்மணத்தில் கூறியுள்ள வேள்ளிகளைச் செய்யும் பொழுது, சிறிது சிறிதாகச் சித்த சுத்தி ஏற்படுகிறது. இவையெல்லாம் வீட்டிலிருந்து கொண்டு, நாட்டில் இருந்துகொண்டு செய்ய வேண்டியது. இதன் பிறகு காட்டிற்குப் போக கிருஹஸ்தனைத் தயார் செய்வது ஆரண்யகம்.

ஸம்ஹிதையில் மந்திரமாகவும், பிராம்மணத்தில் கர்மாவாகவும் உள்ளவைகளின் தத்துவார்த்தங்கள் என்னவோ, உள்ளுறை பொருள் என்னவோ, அவைகளை ஆராய்ச்சி செய்து ஸித்தாந்தங்களை ஏற்படுத்துவதே ஆரண்யகத்தின் நோக்கம். மறை பொருளாகவும்

உருவகமாகவும் வேதத்தில் சொல்லியிருப்பதை இங்கு விளக்குகிறது ஆரண்யகம். யாகம் செய்வதைவிட அதன் உள்ளர்த்தத்தை விசாரணை செய்வதே ஆரண்யகத்தின் லக்ஷியம். காட்டிலே ஆசிரமவாசிகள் சேர்ந்து செய்த இப்படிப்பட்ட ஆராய்ச்சிகளே ஆரண்யகமாக வந்துள்ளன.

ஆரண்யகமாகவும் உபநிஷந்தாகவும் விளங்குகிற பிருஹதாரண்யக உபநிஷத், அச்வமேத யாகத்தைப் பற்றிய இப்படிப்பட்ட தத்துவ விளக்கத்தோடு தொடங்குகிறது. இந்த ஆரண்யகங்களுக்கு முடிவிலேதான் உபநிஷத்துக்கள் உள்ளன.

காஞ்சி பரமாச்சாரியார் கூறுகிறார்:

“ஸம்ஹாதை மரம் என்றால், பிராம்மணம் பூ, ஆரண்யகம் காய், இந்த உபநிஷதம் தான் முடிவான பழம், (பலம்—பலன்), ஞான மார்க்கத்திலே ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தை சாதித்துக் கொடுப்பதற்கே ஏற்பட்ட நேர் சாதனம் உப நிஷதந்தான், இதில் நம்மை ஈடுபடுத்தவே ஸம்ஹிதையும், பிராம்மணமும், ஆரண்யகமும் இருக்கின்றன. உப நிஷத்துக்களில் பலதரப்பட்ட வித்யைகள், யக்ஞங்கள், தேவதா உபஸனைகள் அங்கங்கே சொல்லியிருந்தாலும், முக்கியமாக அது தத்துவ விசாரணை தான். கர்மா எல்லாம் விட்டுப் போகிற நிலையைச் சொல்லுவதுதான் உபநிஷத்தின் தாத்பர்யம். . .. .. .. ஒரு விருக்ஷத்தில் இலைகள் நிறைய இருந்தாலும், புஷ்பமும் பழமும் கொஞ்சமாக இருக்கிறாப் போல, வேத விருஷத்தில் கர்ம காண்டம் நிறையவும், உபநிஷத் பாகம் கொஞ்சமாகவும் இருக்கிறது.

“உபநிஷத்தில் தத்துவ விசாரம் என்பது, இதர தேசங்களில் ஃபிலாஸஃபிக்காரர்கள், புத்தி பூர்வமாக, ரொம்பவும் ஆழமாக ஸத்தியத்தை ஆராய்கிற மாதிரி மட்டும் முடிந்து விடவில்லை. புத்தியினால் ஆராய்வதை அனுபவத்தில் தெரிந்து கொள்ளுவது தான் முக்கியம் .. .. ..

.. மற்ற ஃபிலாஸஃபிக்காரர்களுக்கு இல்லாமல் உபநிஷத்திற் மாத்திரம் இருக்கிறது பெருமை அது மந்திரா க்ஷரங்களை கொண்டதாகவும், எந்தத் தத்துவங்களை சொல்லுகிறதோ அதை மந்திர சப்தத்தின் சக்தியால் அனுபவத்திற்கு கொண்டு வந்து கொடுத்து விடுகிறது. மற்ற தேசத்து ஃபிலாஸஃபிகள் போல வெறும் அறிவாராய்ச்சியா இல்லாமல், அதை அனுபவத்தில் உறைக்கும் படியாக பண்ணுவதற்கு எப்பேர்ப்பட்ட வாழ்முறை வேண்டுமே அப்பேற்பட்ட தர்மங்கள் நிறைந்த ஒழுக்கமான வாழ்க்கை வேதத்தில் கர்ம காண்டம் சொல்லியிருக்கிறது அதன்படி வாழ்ந்து, தன்னை சுத்தப்படுத்திக் கொண்டு, அப்புற கர்மாக்களை விட்டு விட்டு இந்த உபநிஷத்துக்களை ஒருவ அனுஸந்தாளம் பண்ணும் பொழுது, அதிலுள்ள தத்துவங்கள் வெறும் புத்திவாதமாக இல்லாம அவனுடைய அனுஷ்டானத்திலேயே ஜீவனோடு பிரகாசிக்கின்றன. இந்தத் தத்துவங்களுக்கெல்லாம் உச்சியில் தான் ஜீவப்பிரம்ம அபேதம் இருக்கிறது". *

உபநிஷத் என்ற வடமொழிச் சொல்லிற்கும் பக்கத்தி உட்காருதல் என்று பொருளாகும். குரு சீடனைப் பக்கத்தி உட்கார வைத்துக்கொண்டு செய்த உபதேசம் தா உபநிஷத்துக்கள். 'பிரும்மத்திற்குப் பக்கத்திலே போய் சேரும்படியாகச் செய்வது' என்றும் பொருள் கொள்ளலாம்.

உபநிணத்துக்கள் மொத்தம் 108 ஆகும். அவைகளி பத்து உபநிஷத்துக்கள் தான் முக்கியமாகக் கருதப்படுகின்றன ஆதிசங்கர பகவத் பாதாள் இந்தப் பத்து உபநிஷத்து களுக்குத் தான் உரை எழுதியுள்ளார்.

---

* காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் 'தெய்வத்தின் குரல்' இரண்டாம் பகுதி, வான பதிப்பகம், பக்கம் 307–309.

பின்னால் வந்த சில ஆச்சார்யர்களும் இந்தப் பத்து உபநிஷத்துக்களுக்குத் தான் உரை எழுதியுள்ளார்கள்.

வரிசைப்படி முதலில் உள்ளது ஈ.சோ. பரிஷத். இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. பிறகு வரும் கேனோபநிஷத் ஸாமவேதத்தை சேர்ந்தது. மூன்றாவதாக வரும் கடோபநிஷத் கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சார்ந்தது பிறகு உள்ள பிரச்னம், முண்டகம், மாண்டூக்யம் என்ற மூன்று உபநிஷத்துக்களும் அதர்வண வேதத்தைச் சேர்ந்தவையாகும். ஏழாவதாக உள்ள தைத்திரீய உபநிஷத் கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சார்ந்தது. அடுத்ததாக உள்ள ஐதரேய உபநிஷத் ரிக்வேதத்தைச் சார்ந்தது. பிறகு வரும் சாந்தோக்ய உபநிஷத் ஸாம வேதத்தையும், பிருணதாரஸ்யக உபநிஷத் சுக்ல யஜுர் வேதத்தையும் சார்ந்தன.

* * *

வேத மந்திரங்களை மஹரிஷிகள் கண்டறிந்த பிறகு, அக்காலத்தில், அம்மந்திரங்களுக்குப் பல உரைகள் இருந்திருக்கலாம். ஆனால் அவைகள் எல்லாம் காணாமல் போய்விட்டன. யாஸ்கரின் நிருக்தமும், சௌனகரின் பிருஹத்தேவதாவும் ஒரு சிறிய அளவு வேதத்தைப் புரிந்து கொள்ள உதவுகின்றன. பிற்காலத்தில் வேதங்களுக்குச் சிலர் உரை எழுதினார்கள். அவைகளில் முக்கியமானது விஜயநகர சாம்ராஜ்யத்தை ஏற்படுத்தி, ஆதி சங்கரர் ஸ்தாபித்த மடங்களை புது ஜீவனோடு புனருத்தாரனம் செய்த, பதினாலாம் நூற்றாண்டைச் சேர்ந்த மகாபுருஷரான ஸ்ரீ வித்தியாரண்ய ஸ்வாமிகள், ஸாயனாச்சாரியார் என்ற பெயரில், எழுதிய உரைகளே ஆகும். ரிக்வேதம், கிருஷ்ண யஜுர், சுக்ல யஜுர், ஸாமம், அதர்வம் ஆகிய ஐந்து வேத நூல்களுக்கும் விரிவான உரை எழுதியுள்ளார்.

ஆனாலும் வேதத்தை ரிஷிகள் கண்டறிந்த காலத்திற் பல ஆயிரம் ஆண்டுகள் பின்னரே ஸாயனர் வந்ததாலு பழைய உரைகள் பலவும் கிடைக்காமையாலும், ஸாயன பல இடங்களில் பொருளை விளக்கச் சிரமப்படுகிற இப்பொழுது வேதத்தின் பொருளைத் தெரிந்து கொள் விரும்பும் எல்லாப் பண்டிதர்களுமே ஸாயனாரையே பெ பாலும் நம்பியுள்ளார்கள். வேத மந்திரங்களின் பொருளை பல மட்டங்களில் (levels) புரிந்துகொள்ளவேண்டும். மந்திரங்கள் உருவக அணி கொண்டதாகவும் (symbol ஆழ்ந்த உள்ளுரை பொருளைச் சம்பவம் போ சொல்வதாலும் (allegorical), வேதத்தைச் சரிவ புரிந்துகொள்வது மிகவும் சிரமம். இந்நிலையில், வேதத் விமர்சிப்பது – அதிலும் சில மந்திரங்களைக் கண்ட செய்வது – நம் அறியாமையையே எடுத்துக்காட்டும்.

* * *

வேதத்திற்கு ஆறு அங்கங்கள் உண்டு. இவை சி வியாகரணம், நிருக்தம், கல்பம், சந்தஸ், ஜோதிடம் ஆ வேத எழுத்துக்களின் லக்ஷணங்களை வரையறுத் கூறுவது சிக்ஷையாகும். வியாகரணம் என்பது இலக்கண ஆகும். சந்தம் என்பது செய்யுளிலக்கணம், பாவிலக்கண என்று பொருள் படும். வேதத்தில் உள்ள அரிய சொற்கள் பொருளை விளக்குவது திருக்தமாகும்; ஏன் ஒரு சொல் ஒரு இடத்தில் உபயோகம் செய்துள்ளார்கள் என்பதை காரணத்தோடு அது விளங்குகிறது. இதற்கு யாஸ்கர் எ மகரிஷி ஒரு விரிவான நூலைப் புனைந்துள்ளார். கர்மாக்களுக்கான காலத்தை நிர்ணயம் செய்து, நம் அந்தக் காரியத்துக்கு அழைத்துக் கொண்டு போ கண்ணாக இருப்பது ஜோதிடம், எந்தக் கர்மாவை எப்ப பண்ணுவது, எந்தக் கர்மாவிற்கு எந்த மந்திரம், திரவி தேவதை என்பதையெல்லாம் கூறுவது கல்பமாகும்.

இந்த ஆறு அங்கங்களும் சேர்ந்து செய்யும் காரியங்க 'ஷடங்கு' (வடங்கம்) ஆயிற்று

## 1.3. வேத காலத் தெய்வங்கள்

முதலில் தெய்வங்கள் எப்படி உண்டாயின என்று பார்ப்போம். படைக்கும் காலத்தில், உலகமும், பொருள் களும், தெய்வங்களும், மனிதர்களும் உண்டானார்கள். இந்தப் படைப்பைப்பற்றி ரிக் வேதத்தில் பல ஸூக்தங்கள் இருந்த போதிலும் முக்கியமாக மூன்று ஸூக்தங்கள் இதை அழகாகக் கூறுகின்றன. அவை புருஷ ஸூக்தம், ஹிரண்யகர்ப ஸூக்தம், நாஸதீய ஸூக்தம் ஆகும்.

புருஷ ஸூக்தத்தை (ரி.வே. X 90) விரிவாக ஆராய்ந்து அதன் பதினாறு ரிக்குகளின் பொருளையும் பின்னால் பார்ப்போம். (அத்தியாயம் 6). சுருக்கமாகச் சொல்லப்போனால், விராட் புருஷனிலிருந்து உண்டான படைப் போன் பரம புருஷனுக்கு மனத்தளவில் வேள்வி புரிந்து தெய்வங்களைப் படைத்தார். ஆக, இந்திரன், அக்கினி, ஸூரியன் முதலிய எல்லாத் தெய்வங்களும் இந்த மானஸீக வேள்வியிலிருந்து உண்டாயின.

அடுத்தது ஹிரண்ய கர்ப்ப ஸூக்தம். (ரி.வே.X 121) ஹிரண்ய கர்ப்ப: என்ற சொல்லுடன் இந்த ஸூக்தம் தொடங்குவதால் இதற்கு இப் பெயர் வந்தது. இதில் உள்ள பத்து ரிக்குகளில், முதல் ஒன்பது ரிக்குகள் 'கஸ்மை தேவாய ஹஸ்ஷா விதேம' (எந்த தெய்வத்திற்கு நாம் ஹவிஸைக் கொடுப்போம்!) என்ற கேள்வியுடன் முடிகிறது. இதையும் நாம் பின்னர் பார்ப்போம். (அத்தியாம் 5). கடைசி ரிக் பிரஜாபதிதான் இந்த உலகத்தையும் எல்லாத் தெய்வங்களையும் படைத்தவர். அவர் ஒருவருக்கே எல்லா விஷயங்களும் தெளிவாகப் புரியும் என்று கூறுகிறது.

மூன்றாவதாக நாஸதீய ஸூக்தம் (ரி.வே.X 129) படைப்பைப் பற்றிக் கூறுகிறது. 'ந அஸத் அஸீத்' என்ற சொற்களுடன் இந்த ஸூக்தம் தொடங்குவதால் இதற்கு

நாஸதீய ஸூக்தம் என்று பெயர் வந்தது. இச் சொற்களுக்கு பொருள் 'இல்லாமை இல்லாமலிருந்தது' ஆகும். இது சற்று குழப்பமாக உள்ளதல்லவா? இந்த ஸூக்தமே சற்று குழப்பமாக உள்ளது! உலகப் படைப்பு என்பது எளிதாகவு தெளிவாகவும் கூறக்கூடிய விஷயமல்ல. இந்த ஸூக்தத்தி ஏழு ரிக்குகளின் பொருளைப் பின்பு பார்ப்போ (அத்தியாயம் பக்கம்) இதில் படைப்பைப்பற்றி தெளிவா ஒன்றும் கூறுவில்லை. இந்த ஸூக்தத்தின் ஆறாவது ரி இந்த உலகம் படைத்த பின் தெய்வங்கள் உண்டாயின என் கூறுகிறது.

ஆக, இந்த மூன்று ஸூக்தங்களும் உலகப் படைப்பி ஒரு கால கட்டத்தில் தெய்வங்கள் உண்டாயின என்பதை கூறுகின்றன.

எல்லாத் தெய்வங்களுக்கும் அதிதி தான் தாய என்றும் பின்பு பார்ப்போம். (அத்தியாயம் 5). வேத மற்றுமோர் இடத்தில் தெய்வங்கள் எல்லாம் நீரிலிருந்து அதிதியிடமிருந்தும் பூமியிலிருந்தும் உண்டாயின என் கூறுகிறது. (ரி.வே. x. 69.2)

பல தெய்வங்களைப் பற்றி வேதம் கூறிய போதிலு அடிப்படையான தத்துவ ரீதியில் பரம்பொருள் ஒன் என்று வேதம் பல இடங்களில் கூறுகிறது. 'மெய்ப் பொரு ஒன்றே, அதை அறிவாளிகள் பலவிதமாகக் கூறுகிறார்க (ரி.வே. I. 164.46) என்று வேதம் உறுதி படச் சொல்லுகிற

மற்றுமோர் இடத்தில் வேதம், 'எல்லாத் தெய்வங்களி மகத்துவமும் ஒன்றேதான்' என்று திரும்பத் திரும்ப இருப இரண்டு ரிக்குகள் கொண்ட அந்த ஸூக்தத்தின் ஒவ்வொ ரிக்கிலும் கூறுகிறது. (ரி.வே. III. 55). இயற்கையி செயல்களில் ஒரு அழகிய ஒற்றுமைக்கும் காரணமா ஆன்மிக சக்தியை இந்த ஸூக்தம் பரந்த நோக்கில் புகழ் பேசுகிறது. வேள்விக் குண்டத்தில் கொழுந்து விட்டெரி

அதே தெய்வீகம் காட்டுத் தீயாகவும் எரிகிறது; அது வானில் மின்னலெனப் பளிச்சிடுகிறது; அது விண்ணில் ஸூரியனாகப் பிரகாசிக்கிறது. வெப்பமாக அது பயிர்களை முற்றச் செய்கிறது. உதய ஸூரியனாகவும், அஸ்தமிக்கும் ஸூரியனாகவும் அது பகலையும் இரவையும் உண்டு பண்ணுகிறது. அதே தெய்வீகம் தான் மழையை உண்டு பண்ணுகிறது, தாவர வர்க்கத்தை வளர்க்கிறது, உயிருள்ளவைகளை வாழவைக்கிறது. *

ரிக் வேதம் பிரிதோர் இடத்தில் எல்லாத் தெய்வங் களையும் ஊடுருவி இருக்கும் ஒரே பரமாத்ம தத்துவத்தை நிலை நாட்டுகிறது. (ரி.வே.IV. 40.5) இந்த ரிக்கின் பொருளைப் ட க்கம் ...ல் காணலாம். ஸாயனார் தன்னுடைய உரையில், ீவாத்மா, தெய்வங்கள், பரமாத்மா எல்லாம் ஒன்றே என்ற தத்துவத்தை இந்த ரிக் சுட்டிக் காட்டுவதாகக் கூறுகிறார்.

ஒரே பரமாத்மா எப்படிப் பல தெய்வங்களாகப் பிரிந்துள்ளார் என்பதை மஹரிஷி யாக்ஞ்யவல்கியர், பிருஹதாரண்யக உபநிஷத்தில் வெகு அழகாக விவரித் துள்ளார். (III. 9.1.3.)

கடோபநிஷத்தும் இதே தத்துவத்தை சற்று மாறுபட்டுக்

---

* *Swami Sarvananda in his article, 'The Vedas and their religious teachings' in the book The Cultural Heritage of India Vol I - published by The Ramakrishna Mission Institute of culture, Calcutta, page 194, observes:-*

*"In the whole of this sukta (hymn), the rsi takes a grand synthetic view of the spiritual force which is responsible for such a beautiful harmony in the different activities of Nature: The same Divinity that burns on the sacrificial altar blazes also as a jungle fire; it flashes as lightning in the sky, and shines as the celestial sun. It ripens the corn as heat, produces the day and night as the rising and setting sun: it is the same Principle that produces rain, expresses the lightning, produces regetation, and sustains life."*

கூறுகிறது: 'ஸர்வே வேதா: யத் பதம் ஆமநந்தி. .....' (II. 15
இதன் பொருள்: 'வேதங்கள் எல்லாம் எந்தப் பொருளை
போற்றுகின்றனவோ........ அது 'ஓம்' என்பதாகும். பரமா
மாவையே இங்கு உபநிஷத் சப்த ரூபமாகக் குறிப்பிடுகிறது

மஹாநாராயண உபநிஷத்தில் வரும் இந்த மந்திரமு
இதே கருத்தைக் கூறுகிறது.

யோ வேதாதௌ ஸ்வார: ப்ரோக்த :
வேதாந்தேச ப்ரதிஷ்டி த: |
தஸ்ய பிரகிருதி லீனஸ்ய
ய: பர: ஸ மஹேச்வர: || (ம.உ.XII. 17)

தன் பொருள் என்னவென்றால் வேதத்தின் ஆதியிலு
(ஆரம்பத்திலும்) அந்தத்திலும் (முடிவிலும்) நிலைநாட்ட
படுவது ஒரே மஹாதத்துவமான ஈசுவரன் தான் என்பதாகும்

"பகவத் கீதையிலும் இதே கருத்தைக் காண்கிறோம். பகவா
கூறுகிறார்: 'வேதை: ச ஸர்வை: அஹமேவ வேத்ய:' (ப.கீ
XV. 15) பொருள்: 'வேதங்கள் எல்லாவற்றிலும் அறியப்படு
பொருள் நானே.'

ஆக, வேதத்திலும் மற்ற நூல்களிலும் பரமாத்ம தத்துவ
ஒன்றேதான் என்று திரும்பத் திரும்ப ஐயம்திரிபரக் கூறப்படு
கிறது. ஆனால் வேதம் ஏன் இந்திரன், அக்கினி, ஸோமன்,
ஸூரியன் வருணன் என்று பல தெய்வங்களைப் புகழ்ந்து
பாடுகிறது? வேதகால மக்கள் ஒரு தெய்வத்தை வழி
பட்டார்களா, அல்லது பல தெய்வங்களை வழிபட்டார்களா?

இவ்வினாவிற்கு விடை எளிதில் கூற முடியாது. இன்று
போலவே, வேதகாலத்திலும் மக்களில் ஒரு சிலர் சிறந்த
அறிவாளிகளாகத் திகழ்ந்தார்கள். அவர்கள் உலகைப்
பற்றியும், மனித வாழ்க்கையைப் பற்றியும் ஆழ்ந்த
சிந்தனையில் ஈடுபட்டுத் தத்துவ ஆராய்ச்சி செய்தார்கள்.
அவர்களுடைய தெளிவான ஆழ்ந்த சிந்தனையில்

அடிப்படையான தெய்வீக தத்துவம் ஒன்றேதான் எல்லா உயிர்களையும் மற்ற இயற்கை சக்திகளையும் ஊடுருவி இருக்கிறது என்பதைக் காண முடிந்தது. இந்த உண்மைகளை அவர்கள் சில ரிக்குகளில் அங்கங்கே சொல்லியிருக் கிறார்கள்.

ஆனால் பெரும்பாலான மக்கள் அந்த அளவுக்கு அறிவாளிகளாக இருக்கவில்லை; அவர்கள் ஆழ்ந்த சிந்தனை யிலும் தத்துவ ஆராய்ச்சியிலும் ஈடுபட முடியாது. அவர்கள் அன்றாட அலுவல்களைச் செய்து கொண்டு வாழ்க்கையை நடத்துபவர்கள். அவர்களுக்கு எளிதில் தெய்வத்தை வணங்க வழி வகுக்க வேண்டும்.

இப்படிப்பட்ட மக்களுக்கே அறிவாளிகள் ஒவ்வொரு இயற்கைச் சக்தியையும் ஒரு தெய்வமாக உருவாக்கினார்கள். மழையின் தெய்வமாக இந்திரனையும், நெருப்பின் தெய்வமாக அக்கினியையும் விடியற்காலையின் தெய்வமாக உஷஸ்யையும், புயலின் தெய்வங்களாக மருத்துக்களையும் வேதம் புகழ்ந்து பாடியது. இப்படியாகப் பல தெய்வங்கள் உண்டாயின. மக்களும் அவரவர்கள் மனப்பக்குவத்திற்கும், தேவைக்குத் தக்கபடி அந்தந்த தெய்வங்களை வழிபட்டார் கள் எல்லா வழிபாடும் கடைசியில் பரமபுருஷனுக்கே போய்ச் சேர்ந்தன.

இப்படியாக, வேதம் பல தெய்வங்களின் உருவங் களையும், குணாதிசயங்களையும் வருணிக்கிறது. அத்தெய்வங் களைப் பற்றிய கதைகளையும், வரலாறுகளையும், நிகழ்ச்சி களையும் வேத நூல்களில் காணலாம். அக்கால மக்களும் அவரவர்கள் தேவைக்கேற்பக் குறிப்பிட்ட தெய்வங்களை வழிபட்டு வாழ்க்கையை நடத்தினார்கள்.

வேதம் இந்தப் பிரபஞ்சத்தை மூன்று பாகங்களாகப் பிரித்தது. அவை விண்ணுலகம், மண்ணுலகம் மற்றும் இரண்டுக்கும் நடுவிலுள்ள காற்று மண்டலம் ஆகும்.

வேதத்தின் ஆரம்பத்தில் வேதம் மூன்று தெய்வங்களை, இ மூன்று பாகங்களுக்கும் ஆளும் தெய்வமாகக் குறிப்பிட்ட விண்ணுலகிற்கு ஸூரியனும், காற்று மண்டலத்திற்கு வ அல்லது இந்திரனும், மண்ணுலகிற்கு அக்கினியும் ஆ தெய்வங்கள் ஆகும்.

இந்த மூன்று தெய்வங்களும், ரிக் வேத காலத்திலே ஒரு பாகத்திற்குப் பதினொன்று தெய்வங்களாக, மொத் முப்பத்தி மூன்று தெய்வங்களாக அதிகரித்தன. இதை வேதமே பின்வரும் ரிக்கில் கூறுகிறது: "ஓ விண்ணை இருப்பிடமாக உள்ள பதினொரு தெய்வங்களே, மண்ணை இருப்பிடமாக உள்ள பதினொரு தெய்வங்களே, நீ இருப்பிடமாக உள்ள பதினொன்று சக்தி வாய்ந்த தெய்வ களே, என்னுடைய வேள்வியை மகிழ்வுடன் ஏற் கொள்ளுங் கள்(ரி.வே. I. *139. 11*). இங்கே நீர் என்பது கா மண்டலத்தைக் குறிக்கும். இதன் உரையில் ஸாயன கூறுகிறார். "நிருக்தம் VII. *5*)ன் படி, தெய்வங்கள் மூன்றுதா ஆனாலும், அவர்களுடைய மஹிமையால், அதாவது மாறுபட்ட தோற்றங்களால் அவர்கள் முப்பத்தி மூன்ற ஆகிறார்கள்."

சதபதப் பிராம்மணம் இந்த முப்பத்தி மூன் தெய்வங்களுக்கு வேறு விதமாகக் கணக்கைக் கூறுகிற அதன்படி, எட்டு வஸீக்களும், பதினொரு ருத்திரர்க பன்னிரண்டு ஆதித்தியர்களும், விண்ணும், மண்ணு சேர்ந்து முப்பத்தி மூன்று தெய்வங்கள் ஆகின்றன. (ச.பி. *5.7.2*) பன்னிரண்டு ஆதித்தியர்களும் ஆண்டின் பன்னிரண் மாதங்களுக்கு ஸூரியனின் வெவ்வேறு பெயர்கள அமைந்தன என்றும் அதே நூல் கூறுகிறது.

ரிக்வேதம் மற்றுமொரு ரிக்கில் *3339* தெய்வங் அக்கினியை வழிபட்டதாகக் கூறுகிறது. (ரி.வே.III. 9 ஸாயனர், தம் உரையில், முதலில் மூன்றாக இரு

தெய்வங்கள் முப்பத்தி மூன்று ஆனதாகவும், அவர்களின் மஹிமைகளைக் கணக்கிட்டதில் 3339 ஆயின என்றும் விளக்குகிறார்.

வேதம் கூறிய ஒன்றேயன மெய்ப் பொருள் (ஏகம் ஸத்), வேதத்திலேயே மூன்றாகி, பிறகு முப்பத்தி மூன்றாகி, கடைசியில் 3339 தெய்வங்களாக ஆயிற்று. இதே பரம் பொருள் புராண காலத்தில் முப்பத்து முக்கோடி தேவதைகளாக ஆனது வியப்பில்லை அல்லவா?

வேதங்களில் கூறிய வருணனைகளின்படி, வேதகாலத் தெய்வங்களின் வடிவங்கள் தெளிவாக இல்லை. யாஸ்கர் நிருக்தத்தில் கூறுகிறார். 'நம்முடைய கண்களுக்குப் புலப்பட்ட மட்டில், இந்தத் தெய்வங்களுக்கு மனித வடிவாக்கம் (anthropomorphism) சிறிது கூட இல்லவே இல்லை. உதாரணத்திற்கு ஸூரியன், பூமி, அக்கினி முதலிய தெய்வங்களைக் கூறலாம்.' (நிருக்தம் VIII. 4)

பல தெய்வங்களுக்கும் பொதுவாக சில குணாதிசயங் களைக் காணலாம். அவை பேரொளி வீசுதல், ஆற்றல், நன்மை புரிதல், பேரறிவு முதலியவை ஆகும். இது தவிர, ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒரு சில பிரத்யேகமான குணங்களையும் பார்க்கலாம். உலக அளவிலான சில செயல்களும் முக்கியமான சில தெய்வங்களுக்கும் பொதுவாக உள்ளது. விண்ணையும் மண்ணையும் தாங்குதல் பல தெய்வங்களுக்குப் பொதுவாகக் கூறப்படுகிறது. கிட்டத்தட்ட பன்னிரண்டு தெய்வங்கள் இந்த உலகத்தைப் படைத்ததாக வேதம் கூறுகிறது. பல தெய்வங்கள் ஸூரியனைப் படைத்ததாகவும், அதை விண்ணில் பதித்ததா கவும், அதற்கு ஒரு பாதையை அமைத்ததாகவும் வேதம் சொல்லுகிறது. நகருபவை, நகராதவை எல்லாவற்றிற்கும் அதிபர்களாகச் சில தெய்வங்களை வேதம் குறிப்பிடுகிறது.

சில சமயங்களில் வேதம் ஒரு தெய்வத்தை மற்ற சி தெய்வங்களுடன் ஒருங்கிணைத்துப் பேசுகிறது. உதாரணமாகப் பின் வரும் ரிக்கைக் கூறலாம்: ' அக்கினியே! நீ பிறக்கும் பொழுது வருணனாக இருக்கிறா மூடப்பட்ட பொழுது நீ மித்திரனாக ஆகிறாய்; வலிமையின் மகனே! எல்லாத் தெய்வங்களும் உன்னி இணைந்துள்ளன; வழிபடுவோருக்கு நீ இந்திரனா விளங்குகிறாய்! (ரி.வே. V. 3.1.)

வேதம் அக்கினியின் பல தோற்றங்களைக் குறிப்பி கிறது. பூமியிலுள்ள இல்லங்களில் வேள்வித் தீயாகவு காற்று மண்டலத்தில் மின்னலாகவும், வானில் விண்ணுலக தீயாகஜ் ஜுவலிக்கும் ஸூரியனாகவும் வேதம் பேசுவ லிருந்து, பல தெய்வங்களும் ஒரே பரம் பொருளின் ப மாறுபட்ட தோற்றங்கள் என வேதம் சுட்டிக்காட்டுவதாக கொள்ளலாம்.

ஆரம்ப காலத்தில் தெய்வங்கள் சாகாமையைப் பெ வில்லை. மனிதர்களைப் போலவே அவர்களும் சாகு தன்மை உடையவர்களாக இருந்தார்கள். அதர்வ வேத இதைத் தெளிவாகக் கூறுகிறது. (அ.வே. XI. 5.19; IV. 11. நேரிடையாகக் கூறாவிட்டாலும், ரிக் வேதம் இதை சொல்லாமல் சொல்லுகிறது; ஒரு ரிக் ஸவிதா எல்லா தெய்வங்களுக்கும் 'அம்ருதத்வம்' (சாகாமையை அளித்ததாகக் கூறுகிறது. (ரி.வே. IV.7.4.) ஒவ்வொரு யுகத்தி முடிவிலும், பிரளயத்தின் பொழுது, தெய்வங்களும் மற் எல்லாவற்றுடனும் அழிந்து போவதாக வேதகாலத்திற்கு பின் வந்து புராண நூல்கள் கூறுகின்றன.

பொதுவாக எல்லாத் தெய்வங்களுக்கும் வேதம் மனி வடிவாக்கம் கொடுத்திருப்பதைக் காண்கிறோம். ப தெய்வங்களின் தலை, முகம், கண், உடல், கை, கா எல்லாவற்றையும் வேதம் வருணித்துள்ளது. பல தெய்வங்க

ஆடைகளை அணிந்திருக்கிறார்கள். உஷஸ் நேர்த்தியான ஆடைகளை அணிந்திருப்பதாக வேதம் கூறுகிறது. இந்திரன் போன்ற போர்வீரர்கள் கேடயம் பூண்டிருப்பதையும் வேதம் கூறுகிறது. பெரும்பாலான தெய்வங்கள் அவரவர்களுக்கு உரித்தான ஆயுதங்களைக் கையில் பிடித்திருக்கிறார்கள்.

தெய்வங்கள் தேர்களில் சஞ்சரிக்கிறார்கள். அத் தேர்களாக் குதிரைகள் இழுக்கின்றன. பூஷன் மட்டும் வெள்ளாடுகள் பூட்டிய தேரில் போகிறான் குதிரைகளைத் தவிர, மருந்துக்களின் தேரைப் புள்ளிமான்களும், உஷஸின் தேரைப் பசுமாடுகளும் இழுக்கின்றன.

தெய்வங்கள் வேள்வி நடக்கும் இடத்திற்கு வந்து வேள்வி குண்டத்தைச் சுற்றிலும் பரப்பப்பட்ட தர்ப்பைப் புல்லின் மேல் அமர்ந்து ஸோம ரசத்தைப் பருகுகிறார்கள். அல்லது, சில சமயங்களில் அக்கினியே ஸோம ரசத்தையும் மற்ற ஆஹுதிகளையும் தெய்வங்களின் இருப்பிடத்திற்கு கொண்டு போய் அவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கிறது. தெய்வங்கள் மேலுலகத்தில் மிக ஒற்றுமையாகவும் நட்புடனும் வசிக்கிறார்கள்.

வேதகாலத் தெய்வங்கள் நீதி நெறியில் பற்றுள்ளவர்கள் அவர்கள் நேர்மைக்கும் நன்னடத்தைக்கும் பாதுகாப்பாளார் கள். முக்கியமாக வருணை நீதி நெறியின் சட்டதிட்டங்களை நிலை நாட்டுபவனாக விளங்குகிறான். கேடு செய்பவர்களின் மேல் வருணன் கோபம் கொண்டு, அவர்களைத் தண்டிக்கிறான்.

இந்த ரிக் வேத ஸூக்தங்களில் எந்தத் தெய்வம் உயர்ந்தது என்பதைத் தெளிவாக வேதம் கூறவில்லை. ஆனாலும் பலகோணங்களிலிருந்து நோக்கினால் இந்திரனும் வருணனும் முக்கிய தெய்வங்களாகத் திகழ்கிறார்கள். மிகுந்த பலசாலியாகவும், ஆற்றல் படைத்தவனாகவும், எல்லா எதிரிகளையும் வீழ்த்துபவனாகவும், இந்திரன் போற்றப்படு

கிறான்; நீதி நெறியில் சட்ட திட்டங்களைக் காத்து உலகத்தை ஆளும் வருணனுக்குத் தனி சிறப்பைப் பாசுரங்களில் காண்கிறோம்.

மேல் நாட்டு ஆராய்ச்சியாளர்கள் ஒவ்வொரு தெய்வத்திற்கும் எத்தனை ஸூக்தங்கள் ரிக் வேதத்தில் உள்ளன என்று கணக்கெடுத்து, அதன்படி தெய்வங்களுக்கு உயர்வு தாழ்வைக் கற்பிக்கிறார்கள். இந்தக் கணக்கின் படி இந்திரன் முதலாவதாகவும், அக்கினி இரண்டாவதாகவும் ஸோமன் மூன்றாவதாகவும் விளங்குகிறார்கள்.

இந்தக் கணக்கிற்குப் பிறகு ஒவ்வொரு தெய்வத்தின் பெயரும் எத்தனை தடவை ரிக்வேதத்தில் காணப்படுகிறது என்ற கணக்கையும் எடுத்தார்கள். இந்த இரண்டையும் சேர்த்து, அவர்கள் தெய்வங்களை உயர்வு தாழ்வின் படி ஐந்து பிரிவுகளாகப் பிரித்தார்கள். அவை வருமாறு:

1. இந்திரன், அக்கினி, ஸோமன்.
2. அசுவினி தேவதைகள், மருந்துக்கள், வருணன்.
3. உஷஸ், ஸபாதா, பிருஹஸ்பதி, ஸூரியன், பூஷன்.
4. வாயு, தியாவா—பிருத்திவி (விண் — மண்), விஷ்ணு, ருத்திரன்.
5. யமன், பர்ஜன்யன்.

பல தெய்வங்கள் பட்டியலில் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்தப் பட்டியலைப் போட்டு விட்டு ஆராய்ச்சியாளர்கள் தெய்வங்களின் தாரதம்மியத்தை நிர்ணயிக்க இது முழுதும் திருப்திகரமாக இல்லை என்றும் கூறுகிறார்கள்!

இனி ஒவ்வொரு தெய்வத்தையும் பற்றி வேதம் என்ன கூறுகிறது என்று தனித்தனியாகக் கவனிப்போம்.

## அத்தியாயம் – 2

# விண்ணுலகத் தெய்வங்கள்

### 2.1. திவம்

'விண்' எனப் பொருள்படும் தெய்வமான திவம், வட மொழியில் தியெளஸ் என விளங்குகிறது. ரிக் வேதத்தில் இந்தச் சொல், பூமியைக் குறிக்கும் 'மண்' உடன் சேர்ந்து இருமைச் சொல்லாகவே உபயோகத்தில் உள்ளது. வட மொழியில் தியாவா. பிருதிவி என்ற சொற்றொடரை அடிக்கடி ரிக் வேதத்தில் காணலாம். இதில் திவம் என்கிற விண் தகப்பனாகவும் பிருதிவி என்கிற மண் (பூமி) தாயாகவும், இவ்வாறு உலகுக்கெல்லாம் பெற்றோர்களாக இருக்கிறார்கள். ரிக் வேதத்தில் பல ரிக்குகள் இந்தப் பெற்றோர்களுக்கு உஷஸே மகள் என்று கூறுகின்றன, மற்றும் சில இடங்களில் அசுவினி தேவதைகளையும் அக்கியையும், இன்னும் சில தெய்வங்களையும் மகன்களாகக் குறிப்பிடுகிறது.

ஒரு ரிக் விண்ணை முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு கரும் குதிரையுடன் ஒப்பிடுகிறது. இரவில் ஒளி வீசும் நக்ஷத்திரங்களுடன் கூடிய கருமையான வானை இது குறிப்பிடுகிறது. (ரி.வே.X. 68.11)

கரும் பாதையில், நீராவியை ஊடுருவிக் கொண்டு விண்ணின் புன்சிரிப்பு தென்படுவதாக இன்னுமொரு ரிக் கூறகிறது. இது இரவில் வானில் காணப்படும் மேகங்களை யும், மின்னலையும் குறிப்பதாகும். (ரி.வே.II. 4.6) 'ஒளி வீசுதல்' எனப் பொருள்படும் வடமொழி வினை வேர்ச் சொல்லான

'திவ்' என்பதிலிருந்து இச்சொல் (திவம்/தியெளஸ்) உருவ உள்ளது.

## 2.2. வருணன்

வேத நூல்கள் வணங்கும் தெய்வங்களுள், வலி வாய்ந்த போர் வீரனாக இந்திரனும், தலைசிறந்த அற ஆட்சியாளராக வருணனும், இரு முக்கிய தெய்வங்கள வேதம் கூறுகிறது. அக்கினி வருணனுடைய முகமாகவு ஸூரியன் வருணனுடைய கண்ணாகவும் ரிக் வே சொல்லுகிறது.

"எப்பொழுதும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டி கும் மனித வர்க்கத்தை, ஒளிவீசும் வருணன் ஸூரியனுடை கண்களால் நோக்குகிறான்" என்று ஒரு ரிக் கூறுகிற (ரி.வே. I. 50.6). ஆனால் சாயானர் இதற்கு உரை எழு பொழுது, வருணன் என்பது தெய்வத்தைக் குறிக்கவில்ல அது மூடுபவன் அல்லது (கெடுதலைத்) தவிர்ப்பவன் என் பொருளில் ஸூரியனுக்கு உரிச்சொல் ஆகும் என் கூறுகிறார்.

பல ரிக்குகள் வருணனையும் மித்திரனையும் சேர் ஜோடியாகவே பேசுகின்றன. வருணனும் மித்திர ஸூரியனுடைய கிரணங்களையே கைகளாக நீட் கொண்டு போகிறார்கள். பூமியில் வேள்விகள் நடக் பொழுது, மித்திரனும் வருணனும் அங்கு வந்து, தர்ப்பையி உட்கார்ந்து, ஸோம ரசத்தைக் குடிப்பது வழக்கம்.

வருணன், பொன்னாலான மேலங்கியைப் போர்த் கொண்டு, ஒளிவீசும் ஆடைகளுடன் விளங்குகிறான் என் ஒரு ரிக் கூறுகிறது. சில ரிக்குகள் வருணன், பளபளவெ மின்னும் நெய்யாலான ஆடைகளை உடுத்தி வருவதா பேசுகின்றன. இது வேள்விகளில் செய்யப்படும் ெ ஆஹுதிகளைக் குறிப்பதாகும். வருணன் சிவந்தமே

டையவன், வழுக்கைத் தலையன், மஞ்சள் நிறக் கண்களை டையவன், கிழவன் என்றெல்லாம் ஒரு வேத நூல் ருணிக்கிறது. (சதபதப் பிராம்மணம் XIII.*3.6.5*) ஸூரியனைப் பால ஒளிவீசும் வருணனுடைய தேர் தோலால் ஆன டிவாளம், சாட்டை, ஆஸனம், இவற்றுடன், நன்கு ட்டப்பட்ட குதிரைகளால் இழுத்துச் செல்லப்படுகிறது ன்று சில ரிக்குகள் பேசுகின்றன.

வருணன், தன்னுடைய வீட்டில் உட்கார்ந்து கொண்டு, டந்தது, நடப்பது, நடக்கப்போவது, ஆகிய எல்லாச் செயல் ளையும் பார்க்கிறான். மித்திரன், வருணன் இவர்களுடைய ருப்பிடம், மிக உயரத்தில் அமைந்து, ஆயிரம் தூண்களால் ாங்கப்பட்டு, ஆயிரம் நுழை வாயில்கள் உள்ளதாக ருக்கிறது. காலையில் ஸூரியன் தன் வீட்டிலிருந்து கிளம்பி, த்திரன், வருணன் இவர்களுடைய வீட்டிற்குச் சென்று, வர்களிடம் மனிதர்களுடைய செயல்களைப் பற்றிக் றுகிறான். உலகத்தின் அரசனான வருணன், சுவர்கத்தின் டுவில் உட்கார்ந்து, தன்னைச் சுற்றியுள்ள தண்டனை காடுக்கும் இடங்களைப் பார்வையிடுகிறான். (சதபதப் ராம்மணம் XI. *6.1*)

வருணனுக்கும் மித்திரனுக்கும் உளவாளிகள் ருப்பதாக ரிக்வேதம் கூறுகிறது. வருணனுடைய ளவாளிகள் அவனைச் சுற்றி உட்கார்ந்து இரு லகங்களையும் நோக்கிக் கொண்டே இருக்கிறார்கள். ருணனும் மித்திரனும் தத்தம் உளவாளிகளைத் னித்தனியே மனிதர்களுடைய வீடுகளுக்கு அனுப்புகிறார் ள். அறிவாளிகளான அவர்களை எவரும் ஏமாற்ற டியாது. வருணனுடைய ஆட்கள் விண்ணிலிருந்து கீழிறங்கி லகம் பூராவும் சுற்றுகிறார்கள் என்றும், ஆயிரம் கண்கள் காண்ட அவர்கள் உலகத்தை முழுவதும்? நன்கு வனிக்கிறார்கள் என்றும் அதர்வன வேதம் பேசுகிறது. ளவாளிகள் நக்ஷத்திரத்தைக் குறிக்கின்றன என்று ஒரு

கருத்து நிலவுகிறது; ஆனால் அதற்கு ரிக் வேதத்தில் ஆ
இல்லை; உளவாளிகளுக்கும் இரவுக்கும் விசேஷத் தொ
இருப்பதா கவும் தெரியவில்லை. பாரசீகச் சமய நூல
ஜெண்ட் அவெஸ்தாவும் மித்திரனுக்கு உளவா
இருந்ததாகச் சொல்வது குறிப்பிடத்தக்கது.
மொழிகளிலும் உளவாளிகளைக் குறிக்கும் சொல்
மாதிரியாக இருக்கிறது. ரிக் வேதத்தில் கூறப்படும்
சிறகுகள் கொண்ட வருணனுடைய தூதன் ஸூரியன
குறிக்கிறது என்பதில் ஐயமில்லை. (ரி.வே.X. 123.6)

ரிக் வேதம் வருணனையும் இன்னும் சில முக்
தெய்வங்களையும் அரசன் என்று குறிப்பிடுகிறது. வரு
மனிதர்களுக்கும் தேவதைகளுக்கும் அரசனாக விளங்கி
(ரி.வே.II. 27.10). உயிருள்ள பிராணிகளுக்கெல்லாம்
அரசன். ரிக் வேதம் அடிக்கடி 'எல்லா உலகி
சக்கிரவர்த்தி' எனப் பொருள்படும் 'ஸாம்ராட்'
சொல்லை வருணனைக் குறிக்க உபயோகிக்கிறது.

வருணனுடைய ஆட்சியைப் பற்றிக் கூறும் பொ
'மாயா' எனும் சொல்லை ரிக் வேதம் அடி
கையாளுகிறது. மனிதர்களின் தவறுக்காக வரு
மாயையை உபயோகிக்கிறான். ஒரு ரிக் பேசுகிறது: "இ
வரம் பெற்ற மகிமை பொருந்திய வருணனுடைய
மாபெரும் மாயச் செயலை நான் கூறுகிறேன்: விண்
நின்று கொண்டு, அவன், ஸூரியனை ஒரு அளவு கோ
கொண்டு, பூமியை அளக்கிறான்." (ரி.வே. V. 8.5.5) வரு
ஆணையால், ஸூரியன் காலையில் பூமியின் கி
எல்லையில் உதித்து, பூமியைக் கடந்து, மாலையில் மே
எல்லையில் அஸ்தமிப்பதை ரிக் வேதம்மெரு கூட்டி அ
எடுத்துச் சொல்லுகிறது.

இன்னுமொரு ரிக் கூறுகிறது: "மித்ரா—வருணர்க
நீங்கள் விண்வெளியில் உங்கள் மாயையை நி

நாட்டுகிறீர்கள்; பிரமிப்பூட்டும் ஆயுதமான ஸௌரியன் வெளிச்சமாக வெளி வருகிறான். நீங்கள் அவனை விண் வெளியில் மேகத்தாலும் மழைப் பெருக்காலும் மறைக்கிறீர்கள்; ஓபர்ஜன்யனே! (உன் ஆணையால்) தேனிலும் இனிய நீர்த்துளிகள் ஓடுகின்றன." (ரி.வே.V. 6.3.4)

ஒரு ரிக் 'வருணமிவ மாயினம்' என்ற சொல், தெய்வங்களுக்குள் பிரத்யேகமாக மாயச் செயல்களைப் புரிபவன் (மாயின்) என்று வருணனைக் குறிக்கிறது. (ரி.வே. IV. 48.14)



இந்திரன் போலன்றி வருணனைப் பற்றி ரிக் வேதத்திலும், மற்ற வேதநூல்களிலும் கதைகளும், வரலாறுகளும் காணப்பட வில்லை. ஆனால் வருணன், மித்திரனுடன் சேர்ந்து, இயற்கையின் சட்ட திட்டங்களையும், அறநெறியையும் நிலை நாட்டுவதாகப் பல இடங்களில் ரிக்வேதம் கூறுகிறது. அவன் விண்ணையும் மண்ணையும் நிலைநாட்டி எல்லா உலகிலும் வசிக்கிறான். மித்திரனும் வருணனும் சேர்ந்து உலகெல்லாம் ஆட்சி புரிகிறார்கள். வருணனுடைய ஆணைப்படி, விண்ணும் மண்ணும், ஒன்றிலிருந்து மற்றொன்று பிரிக்கப்பட்டு, தனித்தனியே, நிறுவப்பட்டிருக்கின்றன. (ரி.வே.VI. 70.1) மித்திரனுடன் சேர்ந்து வருணன் விண்ணையும், மண்ணையும் நடுவிலுள்ள காற்று மண்டலத்தையும் தாங்குகிறான்.



ஒரு ரிக் கூறுகிறது. "அறிவாளியான அரசன் வருணன் விண்ணில் ஒரு பொன்னாலான ஊஞ்சலைப் பதித்து அதற்கு ஒளியைக் கொடுத்தான்." (VII. 87.5) இங்கு பொன்னூஞ்சல் ஸௌரியனைக் குறிக்கும்.

ஒரு சுவையான ரிக் வருணனின் சாதனைகளைப் பட்டியல் போடுகிறது: "வருணன் மரங்களுக்கு மேலே காற்றைப் பரப்பினான்; அவன் பசுக்களிடம் பாலைப் பெருக்கினான்; குதிரைகளுக்கு வேகமான ஓட்டத்தைக்

கொடுத்தான்; மனத்தில் புத்தியையும், நீரில் நெருப்பையும் விண்ணில் ஸூரியனையும், மலையில் ஸோமக் கொடியையும் வைத்தான்," (ரி.வே.V. 85.2)

"அரசன் வருணன், ஸூரியன் பிரயாணம் செய்வதற்காக, ஒரு விசாலமான பாதையை நிர்மாணித்தான்." (ரி.வே.I. 24.8)

வருணனைப்பற்றிய ரிக்குகள் சிலவற்றில் 'ரிதம்' என்ற வடமொழிச் சொல் காணப்படுகிறது. ரிதம் என்பது இயற்கையின் நியதிகளையும், சாச்வதமான சட்டதிட்டங்களையும் குறிக்கும். "ஸூரியனுடைய குதிரைகளைப் பிரயாணத்திற்காக அவிழ்த்து விட்டபொழுது, மித்திரன் வருணன் இவர்களுடைய ஆணை (ரிதம்), நிறுவப்பட்டது. (ரி.வே.V. 62.1) காற்று வருணனின் மூச்சாக வேதம் பேசுகிறது. "பசும் புற்தரைகளில் தன் உணவைத் தேடும் ஒரு வன விலங்கைப் போல, வருணனின் மூச்சான காற்று வெளியில் ஓசை செய்கிறது. (ரி.வே.VII. 87.2)

மற்றுமொரு ரிக் கூறுகிறது:

"விண்வெளியில் உயரத்தில் பதிக்கப்பட்டு, இரவில் ஒளி வீசும் நக்ஷத்திரங்கள் பகலில் எங்கே போயின? இரவு பூராவும் சந்திரன் பிரகாசமாக ஒளி வீசிச் செல்கிறான். வருணனுடைய கட்டளைகள் உறுதியானவை." (ரி.வே.I. 24.10) இன்னுமொரு ரிக் சொல்லுகிறது." "வருணன் இரவுகளைக் கட்டித்தழுவி, தன் மாயச் செயலால், காலைப் பொழுதுகளை நிறுவுகிறான்; அவனை எல்லோராலும் காண முடிகிறது. அவனுடைய கட்டளைகளைப் பின்பற்றி அவனுக்குப் பிரியமானவர்கள் மூன்று சந்திப் பொழுதுகளை வளர்க்கிறார்கள்." (ரி.வே.VIII. 41.3) இங்கு மூன்று சந்திப்பொழுதுகள் என்பதை சாயனர் காலை, நடுப்பகல் மாலை என விளக்குகிறார். வருணனுக்குப் பிரியமானவர்கள் என்பது இரவுகளைக் குறிக்கும். இந்த ரிக்குகளிலிருந்து

வருணன் பகலுக்கும் இரவிற்கும் அதிபதி என்பது தெளிவாகிறது.

வருணன் இரவு நேரத்து விண் வெளியுடன் அதிகத் தொடர்பு கொண்டுள்ளதாகப் பிற்கால வேத நூல்கள் கூறுகின்றன. மித்திரன் பகலைப் படைத்ததாகவும் வருணன் இரவை உண்டாக்கியதாகவும் ஒரு வேதநூல் கூறுகிறது. (தைத்திரிய ஸம்ஹிதை VI. *4.8.3*). மற்றுமொரு வேத நூல் இதை மாற்றிச் சொல்லுகிறது. பூவுலகம் மித்திரன் என்றும் விண்ணுலகம் வருணன் என்றும் அது உறுதிபடக் கூறுகிறது. (சதபதப் பிராம்மணம் XII. ***9.2.12***)

அரசர்களான வருணன், மித்திரன் அர்யமா ஆகியோர் ருதுக்களையும், மாதங்களையும், பகலையும் இரவையும் உண்டாக்கியதாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே. VII. ***66.11***)

வருணன் தண்ணீருக்கு அதிபதி என்பதை ரிக்வேத காலத்திலேயே காணலாம். ஒரு ரிக் கூறுகிறது: "எல்லா வற்றையும் தாங்கும் வருணன் ஆறுகளை ஓடும் படி செய் கிறான்; அவைகளும் அவன் ஆணைப்படியே செல்லு கின்றன. அலுப்புத்தட்டாமலும், எப்பொழும் நிற்காமலும் அவைகள் ஓடிக்கொண்டே இருக்கின்றன. நம்மைச் சுற்றிக் காற்றில் பறக்கும் பறவைகளைப் போல அந்த ஆறுகள் வேகமாகப் போகின்றன". (ரி.வே.II. ***28.4***). வருணனுடைய சக்தியைப் புகழ்ந்து இன்னுமொரு ரிக் கூறுகிறது; "மிகுந்த அறிவாற்றல் படைத்த தெய்வமான வருணனுடைய சக்தி வாய்ந்த மாயச் செயல்களை எவராலும் தடுக்க முடியாது; ஏனெனில், தெளிவான நீரோட்டமுள்ள ஆறுகள், வெள்ளப் பெருக்கெடுத் தோடினாலும், அவைகள் போய் விழும் எந்தக் கடலையும் நிரம்பி வழியச் செய்ய முடியவில்லை." (ரி.வே.V.***85.6.***)

வருணனும் மித்திரனும் ஆறுகளின் தலைவர்களாக வேதம் பேசுகிறது. ரிக் வேதத்தில் சில ரிக்குகளில் மட்டுமே

வருணன் கடலுடன் சம்பந்தப்பட்டிருக்கிறான். மருத்துக்கள் விண்களிலும், அக்கினி பூமியிலும், காற்று ஆகாயத்திலும் இருக்க, வருணன் கடலில் இருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது (ரி.வே.I.161.14). மனிதர்களின் பொய்களையும் பார்த்துக் கொண்டு, வருணன் தெளிவாகவும், இனிப்பாகவும் உள்ள தண்ணீரில் இருக்கிறான் என்று ஒரு ரிக் கூறுகிறது (ரி.வே.VI 49.3)

மித்திரனுடன் கூட வருணனை மழைக்காக அடிக்கடி வேதம் துதிக்கிறது. ஒரு ரிக் கூறுகிறது. 'வருணன் ஒ ஜாடியை (மேகத்தை)க், கவிழ்த்து அதிலிருந்து தண்ணீ விண்ணிலும் மண்ணிலும் காற்றிலும் விழும்படி செய் பூமியை ஈரமாக்குகிறான்; அப்பொழுது மலைகளை மேகங்கள் மூடுகின்றன! (ரி.வே.V. 85.3.4).

புஷ்டி தரும் பாலைச் சுரக்கும் பசுக்கள் ப வருணனிடம் இருக்கின்றன. மழை கொட்டும் ஆகாயத் டனும், பெருக்கெடுத்தோடும் வெள்ளத்துடனும், வருண மக்களுக்குப் பரிசுகளைக் கொண்டு வருகிறான். வருணனு மித்திரனும் புல் வெளிகளை மழைநீரால் செழிப்பாக வளர செய்யட்டும் என்றும், காற்று மண்டலத்தை இனிமையா நீரால் நிரப்பட்டும் என்றும் ஒரு ரிக் வேண்டுகிற வருணனும் மித்திரனும் மழையை விண்ணிலிருந்து கீ மக்களின் நலனுக்காக அனுப்புகிறார்கள் என்று ப ரிக்குகள் கூறுகின்றன. மித்திரனும் வருணனும் மழையை கொடுக்கும் சக்தியை ஒரு முழு ஸூக்தமும் புகழ்கிற (ரி.வே.V. 63) பொன்னாலான வருணனுடைய வீ தண்ணீரில் இருப்பதாக அதர்வண வேதம் கூறுகிறது. யஜு வேதம் அவனை 'சிசு' என்று கூறி, அவள் தாயா தண்ணீரில் தன் இருப்பிடத்தை நிர்மாணித்துக் கொண் தாகப் பேசுகிறது, (வாஜஸநேயி ஸம்ஹிதை X. 7). மற் மொரு வேத நூல் தண்ணீரை வருணனின் மனைவியா கூறுகிறது. (தைத் திரேயஸம்ஹிதை V. 5.4.1)

வருணனுடைய கட்டளைகள் மாற்றமுடியாதவை, மீற
டியாதவை. மற்ற தெய்வங்களும் அவன் கட்டளைகளை
ன்பற்றுகின்றன. ஒரு ரிக் சொல்லுகிறது. "வருணன்
லகையெல்லாம் ஒரு ஆடையாகச் சுற்றிக் கொள்ளுகிறான்;
வன் எல்லாத் தெய்வங்களையும், மக்களின் செய்கைகளை
ம் ஆராய்கிறான்; வருணனுடைய இருப்பிடத்தின்
ன்னால் எல்லாத் தெய்வங்களும் அவனுடைய கட்டளை
ளைப் பின்பற்றுகின்றன. (ரி.வே.VIII. 41.7)

வருணனும் மித்திரனும் இயற்கையின் நியதிகளுக்கும்
தம்) ஒளிக்கும் அதிபதிகளாக விளங்குகிறார்கள்; அவர்கள்
யற்கையின் சீரான சட்ட திட்டங்களை ரிதத்தாலேயே
லை நாட்டுகிறார்கள். "அவர்கள் இருவரும் இயற்கையின்
ரான சட்ட திட்டங்களை மிகவும் விரும்பி, அவைகளை
புன்புடன் பாதுகாத்து, அவர்களுடைய வலிமை வாய்ந்த
க்தியைப் பெற்றார்கள்." (ரி.வே.I. 2.8)

"ஆகாயத்தில் பறக்கும் பறவைகளும், ஓயாமல்
பெருக்கெடுத்தோடும் ஆறுகளும் வருணனுடைய உயர்ந்த
டத்தையோ, அவன் சக்தியையோ, எட்டியதில்லை. கடும்
யல் காற்றைத் தடுக்கும் இந்த மலைகளாலும் வருணனின்
ல்லையை அணுகமுடியவில்லை." (ரி.வே.I. 24.6)

"வருணன் விண் வெளியில் பறக்கும் பறவைகளின்
ாதையை அறிவான்; கடலுக்கதிபனான அவன் அதன் மேல்
போகும் கப்பல்களை அறிவான்; எங்கும் பரவி உயரமாகவும்
வலிமையாகவும் வீசும் காற்றின் பாதையை அவன்
அறிவான்; மேலுலகில் வசிக்கும் தெய்வங்களை அவன்
அறிவான். இயற்கையின் சீரான சட்ட திட்டங்களுக்கினங்க,
அறிவாளியான வருணன் தன் மக்களிடையே உட்கார்ந்து
ால்லாவற்றையும் ஆள்கிறான். அங்கிருந்து பார்த்துக்
கொண்டே அவன் நடந்ததும் இனி நடக்கப் போவதுமான
ால்லா அற்புதங்களையும் காண்கிறான்". (ரி.வே.I. 25.7, 9.11)

அவனன்றி எந்தப் பிராணியும் கண்ணிசைக்கக் முடியாது. மனிதன் செய்வதையும், நினைப்பதையும், தீ மிடுவதையும் வருணன் அறிவான். (அதர்வ வேதம் IV. 16

அறநெறி ஆட்சி செய்வதில் அவன் மற்ற தெய் களுக்கு மேலாக விளங்குகிறான் அவனுடைய கட்ட களை மீறினால் அவன் கடும் சினம் கொ தண்டனையை விதிக்கிறான். பாவிகளையும், பெ பேசுபவர்களையும் வருணனும் மித்திரனும் பாசங்கள (கயிற்றால்) கட்டுகிறார்கள். ஒரே ஒரு இடத்தில், வேதத்தில், பாசம் என்ற சொல்லை அக்கினியு சம்பந்தப்பட்டிருக்கிறது. மற்ற எல்லா இடங்களி ரிக்வேதம் பாசம் என்ற சொல்லை வருணனுக்குத்த பிரத்யேகமாக உபயோகப்படுத்தி இருக்கிறது. பாவி தங்களுடைய தப்புகளை உணர்ந்து, வருந்தினால், வரு அவர்களை மன்னிக்கத்தயாராக இருக்கிறான். ரிக் வேதத் மனிதர்கள் பாவங்களை அகற்றும் படி, மற்ற தெய்வங்க விட வருணனையே அதிகமாக வேண்டுகிறார்கள். வரு மக்களை அவர்கள் செய்த பாவங்களிலிருந்து விடுவிப் மட்டுமல்லாமல், அவ்வர்களுடைய தகப்பன் செ பாபங்களிலிருந்தும் விடுதலை அளிக்கிறான். (ரி.வே.VII. 8 மக்கள் தெரியாமல் செய்த தவறுகளை அவன் மன் கிறான். உலக வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள மக்கள், மற்ற தெய்வங்களிடம் வேண்டுகிறார்கள்; ஆன வருணனை வணங்கும் ஸூக்தங்களில், செய்த தவறு மன்னிப்பு கேட்காத ஸூக்தம் ஒன்று கூடக் காண முடியா

வருணனிடம் ஆயிரக்கணக்கான மருந்து இருக்கின்றன; அவன் மரணத்தை விரட்டுகிறா பாபங்களிலிருந்து விடுதலை அளிக்கிறான். (ரி.வே.I. 24 அவனால் ஆயுளைக் குறைக்கவும் முடியும், ஆயு அதிகரிக்கவும் முடியும். அவன் சாகாமைக்குக் காப்போன (அம்ருதஸ்ய கோபாம்) இருந்து கொண்டு மக்களுக்

சாகாவரம் அளிக்க வல்லவனாக விளங்குகிறான். (ரி.வே.VIII. 42.2) மரணத்திற்குப் பிறகு நம் முன்னோர்கள் போன வழியிலேயே போய், அங்கு இரண்டு அரசர்களான யமனும் வருணனும் நல்லாட்சி செலுத்துவதைக் காணுங்கள் என்று ஒரு ரிக் இறந்தவனிடம் கூறுகிறது. (ரி.வே.X. 14.7)

வருணன் தன்னை வணங்குபவர்களுடன் நட்போடு பழகுகிறான். அவர்கள் அவனுடைய மாளிகையில் அவனைச் சந்திக்கிறார்கள். சில சமயம் அவர்கள் அவனை மனக் கண்ணால் பார்க்கிறார்கள்.

ரிக் வேதம் பல இடங்களில் வருணனை மித்திரனுடன் சேர்த்தே பேசுகிறது. பல ஸூக்தங்கள் அவர்கள் இரு வரையும் சேர்த்தே போற்றுகின்றன. ஆனாலும் அவர்கள் இருவரில் வருணன் மித்திரனை விட முக்கியமான தெய்வமாக விளங்குகிறான். அவர்களிருவருக்கும் ஸூரியனுடன் நெருங்கிய தொடர்பு உண்டு.

ரிக் வேதத்தில் போற்றப்படும் எல்லா தெய்வங்களிலும், வருணனும் இந்திரனும் மிகவும் முக்கியமானவர்களாக விளங்குகிறார்கள். வருணன் ஒரே சீராகத் திரும்பத்திரும்ப வரும் விண்ணொளியுடன் சம்பந்தப் பட்டிருக்கிறான்; அறநெறிக் கோட்பாடுகளையும், இயற்கையின் சட்ட திட்டங்களையும் நிலை நாட்டுவதில் வருணன் தலை சிறந்து விளங்குகிறான். அவனுடைய குணாதிசயங்கள் கதை களுக்கும் வரலாறுகளுக்கும் இடமளிக்கவில்லை. இயற்கையின் போராட்டங்களில் ஈடுபடும் தெய்வமான இந்திரனை, வேதகால மக்கள் சிறந்த போர்வீரனாகவும் அரசனாகவும் கருதினார்கள். இடியுடன் கூடிய மழையான இயற்கைச் சக்தியுடன் இந்திரன் நெருங்கிய தொடர்புள்ள வன். இந்த இயற்கைச் சக்திகள் கால அளவில் ஒரே சீராக வராமல் எப்பொழுதாவது நடக்கும் நிகழ்சிகளாகும்; அவைகள் தன்மைகளிலும் மாறுபட்டுச் சில சமயம் அதிக

மழையையும் சில சமயம் குறைந்த அளவு மழையையும் கொடுக்கும். அதே மாதிரி இந்திரனுடைய குணாதிசயங் களிலும் வேறுபாடு காணப்படுகிறது; அதோடு மற்றத் தெய்வங்களை விட அதிகமாக இந்திரன் தொடர்புள்ள கதைகளையும் வரலாறுகளையும் ரிக் வேதத்திலும் மற்ற ம நூல்களிலும் காணலாம்.

வருணன் தான் ரிக் வேத ஆரம்ப காலத்தில் தெய்வங் களுக்குள் முதலாக விளங்கினான் என்றும், படிப்படியாக அவனுடைய முக்கியத்துவம் குறைந்து ரிக் வேதத்தின் நடுப்பாகத்திலும் கடைசியிலும் இந்திரன் முதலிடத்தைப் பெற்றான் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். பிற்கால வேத நூல்களில் இந்திரன் முதலிடத்தை இழந்து பிரஜாபதி அவ்விடத்தைப் பெறுகிறார் என்றும் அவர்கள் கூறுகிறார்கள். அந்தணர்கள் புரியும் ஸந்தியா வந்தனத்தில் பின்வரும் மாலை உபஸ்தான மந்திரம் வருணனைத் துதிப்பதாக அமைந்துள்ளது:

1. யத் கிஞ் சேதம் வருண தைவ்யே ஜநேSபித்ரோஹம்
மனுஷ்யாஸ்—சராமஸி
அசித்தீ—யத்தவ தர்மாயுயோபிம மா நஸ் தஸ்மா—
தேனஸோ தேவ ரீரிஷ:
(ரி.வே.VII.89.5)

2. கிதவாஸோ யத்—ரிரிபுர்—ந தீவி யத்வாகா ஸத்ய—
முதயந் ந வித்ம
ஸர்வா தா விஷ்ய சிதிரேவ தேவதா தே ஸ்யாம
வருண ப்ரியாஸ:
(ரி.வே.V.85.8)

**பொருள்:**

1. வருணனே! மனிதர்களாகிய நாங்கள் தெய்வங் களுக்கு அறியாமையால் பல வஞ்சனைகளை

செய்துள்ளோம்; நீ நிலை நாட்டிய தருமத்தை மீறியுள்ளோம்; ஓ தெய்வமே அந்தப் பாவங்களுக்காக எங்களைத் துன்புறுத்தாது காத்தருளவேண்டும்.

2. சூநாடிகள் போன்றவர்கள், நல்லோர் நாடாத இடத்தில் என்மீது அநியாயமாகப் பல பழிகளைச் சுமத்தியுள்ளார்கள்; நான் அறிந்தே சில பாவங்களைச் செய்துள்ளேன்; இன்னும் சில பாவங்களை நான் அறியாமலே செய்துள்ளேன். இந்த எல்லாப் பாவங்களையும் சிதறிப் போகுமாறு நாசம் செய்துவிடு. வருணனே! நாங்கள் உனக்குப் பிரியமானவர்களாக எப்பொழுதும் இருக்க வேண்டும்.

பாரசீக நாட்டு மதத்தலைவர் ஜொராஸ்டர் எழுதியுள்ள ஜெண்ட் அவெஸ்தா என்ற மத நூலில், அஹுராமஜ்தா முக்கிய தெய்வமாகவும், அறநெறியின் அதிபதியாகவும் விளங்குகிறார். ஆராய்ச்சியாளர்கள் ரிக் வேத வருணனைப் பாரசீக அஹுரா மஜ்தாவுடன் ஒப்பிடுகிறார்கள்.

வருணன் என்ற சொல் 'விரு' (வ்ரு) என்ற வடமொழி வினை வேர்ச் சொல்லிலிருந்து வந்திருக்கிறது. வட மொழியில் இதற்கு 'மூடுவது' அல்லது 'சுற்றிக் கொள்வது' என்று பொருளாகும். 'வருணன் தன்னுடைய பாசங்களால் பாவிகளைச் சுற்றிக்கட்டி விடுகிறான்' என்று சாயனார் ஒரு ரிக்கின் உரையில் குறிப்பிடுகிறார். (ரி.வே.I. 89.3) மற்றுமொரு இடத்தில் சாயனார் இதற்கு 'இருளைப் போல் சுற்றிக் கொள்வது' என்று பொருள் கூறுகிறார். (தைத்திரீய ஸம்ஹிதை I. 8. 16.1)

இன்றும் வருணன் நீருக்கு அதிபதியாகவும் (தீர்த்த ராஜா) கடலுக்கு அரசனாகவும் விளங்குகிறான் இக் காலத்திலும் 'உதகசாந்தி' என்ற சடங்கில் குடத்தில் நீரை வைத்து மாவிலையாலும், தேங்காயாலும் மூடி, அதற்குப் பூஜை செய்து பிறகு வருண ஜபம் (வேத மந்திரத்தை)

ஓதுகிறார்கள். பிறகு குடத்திலுள்ள நீரை யாருக்காக சட செய்யப்படுகிறதோ அவர்களுக்கு அபிஷேகம் செய்கிறார் இன்றும் வரட்சிக் காலங்களில் மழைக்காக வருண ஜ செய்வதையும் நாம் பார்க்கிறோம்.

* * *

## 2.3. மித்திரன்

மக்கள் எல்லோரும் அவனிடம் நட்பு (மித்ரக்ரி பாராட்டி அவனை வழி படுவதால் அவனை மித்தி என்று அழைக்கிறார்கள் என ஸௌனகர் கூறுகிற (பிருஹத்தேவதா II. 49)

ரிக் வேதம் மித்திரன் – வருணன் இருவர்களை சேர்ந்தே பல இடங்களில் பேசுகிறது. மித்திரனைப் பற் தனியாக ஒரே ஒரு ஸூக்தத்தில் பாடுகிறது. அதிலு இன்னும் மற்ற சில ரிக்குகளிலும் மித்திரன் பே கொண்டே ஜனங்களை ஒன்று சேர்க்கிறான் என்று வே சொல்லுகிறது.

மித்திரனைப் பற்றித் தனியாகப் பேசும் ஸூக்தம் (ரி. III. 59) அவனைப்பற்றிய சில குறிப்புகளைக் கொடுக்கிற மித்திரன் பூமியையும் மேலும் வானுலகையும் தாங்குகிறா அவன் எல்லா ஜீவராசிகளையும் கண்கொட்டாமல் பார்த் கொண்டு இருக்கிறான். மித்திரனால் காக்கப்பட்டவ கொல்லப்படுவதுமில்லை, வெல்லப்படுவதுமில்ல துன்பங்கள் அருகிலிருந்தோ தூரத்திலிருந்தோ அவன வந்தணுகா. பிறந்த பொழுதே மங்களமான புகழத்தக்கவ மான மித்திரன் நல்லாட்சி செலுத்தி அரசனாக இருந்தா புனிதமான, கனிவான, அவனுடைய அன்பில் அவன வழிபடுவோர் திளைக்கட்டும். வழிபடுவோர்க்கு அவ உயர்ந்த பிரகாசமான புகழை அளிக்கிறான். அவனுடை

புகழ் விண்ணையும் மண்ணையும் விட அதிகமாகப் பிரகாசிக்கிறது. மற்ற எல்லாத் தெய்வங்களையும் அவன் தாங்குகிறான். அவன் தெய்வங்களுக்கும் மனிதர்களுக்கும் உணவளிக்கிறான்.

அந்தணர்கள் செய்ய வேண்டிய காலை ஸந்தியா வந்தனத்தில் உபஸ்தான மந்திரம் ஸூரியனை மித்திரனாகத் துதிக்கிறது. பின்வரும் ரிக்குகளைப் பார்ப்போம்.

மித்ரோ ஜனான் யாதயதி ப்ரஜானன்
மித்ரோ தாதார ப்ருதீவீ—முத த்யாம் ।
மித்ர: க்ருஷ்டீரனிமிஷா பிசஷ்டே
ஸத்யாய ஹவ்யம் க்ருதவத்விதேம ॥

(ரி.வே.III. 59.1)

ப்ர ஸ மித்ர மர்த்தோ அஸ்து ப்ரயஸ்வான்
யஸ்த ஆதித்ய ஸிக்ஷதி வ்ரதேன ।
ந ஹன்யதே ந ஜீயதே த்வோதோ நைந—மம்ஹோ
அஸ்நோத்—யந்திதோ ந தூராத் ॥

(ரி.வே.III.59.2)

**பொருள்:**

1. மித்திரன் எல்லாவற்றையும் அறிந்துகொண்டு மக்களை இயக்குகிறான். மித்திரன் பூமியையும் வானையும் தாங்குகிறான். மித்திரன் ஜீவராசிகளைக் கண் கொட்டாமல் பார்க்கிறான் அழியாத பலனைப் பெறுவதற்காக, நாங்கள் அவனுக்கு நெய் நிறைந்த ஹவிஸை அளிக்கிறோம்.

2. ஓ மித்திரனான ஸூரிய பகவானே! எவன் நியமத்துடன் உன்னை வழிபடுகிறானோ அந்த மனிதன் தர்ம பலனைப் பெற்று முன்னணியில் விளங்கட்டும். உன்னால் காக்கப்பட்டவன் நோய் வாய்ப்பட்டு அழிவுறான்; அவனை மற்றவர் வெல்லமுடியாது; அருகிலிருந்தோ தூரத்திலிருந்தோ துன்பங்கள் அவனை அணுகா.

மித்திரனுடைய கட்டளையைப் பின் பற்றி, விஷ் மூன்று அடிகளை எடுத்து வைத்ததாக ஒரு ரிக் கூறுகி (ரி.வே. வாலகில்யர் 4.3). அக்கினி விடியற்காலை மித்திரனை உண்டாக்கியதாகவும், மூட்டியவுடன் அக்கினி மித்திரனாக விளங்குவதாகவும் ரிக்குகள் கூறுகின் இரவில் வருணன் மூடியதைக் காலையில் மித்திரன திறக்கும் படி சில ரிக்குகள் கூறுகின்றன. ரிக் வேதத்தி அதர்வண வேதத்திலும் மித்திரனைப் பகலோடும் வருண இரவோடும் சம்பந்தப்படுத்தி அங்கங்கே ஓரிர குறிப்புகள் இருக்கின்றன. இதை பிராம்மண நூல் விரிவுபடுத்திக் கூறுகின்றன. போர் முடிந்த பிறகு நில சமாதானத்திற்குத் தேவதையாகவும் மித்திரன் விள கிறான். மித்திரனைப் பற்றி வேதங்களில் குறைவ மந்திரங்களே உள்ள போதிலும், நாம் காணுவது எ வென்றால், மித்திரன் வருணனுடன் நெருங்கிய தொட உள்ள தெய்வம் என்றும், தன்னை அண்டிய மக்களு நட்புடனும், அன்புடனும், கனிவுடனும் அருள வழங்குகிறான் என்பதேயாகும்.

* * *

## 2.4. ஸூரியன்

வேத காலத்திலிருந்து இன்று வரை நம் கண் முன்னால் காணும் (பிரத்யக்ஷ) தெய்வமாக ஸூரியன் விளங்குகிறான். "இருப்பவைகளையும், இருந்தவைகளையும், இனி இருக்கப் போகிறவைகளையும், அசைபவைகளையும், அசையா தவைகளையும், உண்டாக்குபவனும் அழிப்பவனும் ஸூரியன் ஒருவனே என்று சிலர் கருதுகிறார்கள்." (பிருஹத் தேவதா I. 61)

ஸூரியன் எப்படிப் பிறந்தான் என்பதைப் பற்றி ரிக் வேதத்தில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. புருஷ ஸூக்தம், படைப்போனுடைய கண்ணிலிருந்து ஸூரியன் பிறந்தான் என்று சொல்லுகிறது. (ரி.வே. X. 90.13). இந்திரன் தனியாகவோ, விஷ்ணு அல்லது ஸோமன் அல்லது வருணனுடன் சேர்ந்தோ ஸூரியனை உண்டாக்கியதாக ரிக்குகள் கூறுகின்றன. சில இடங்களில் மித்ரா–வருணர்களும், சில இடங்களில் ஸோமனும், சில இடங்களில் அக்கினியும் ஸூரியனை உண்டாக்கியதாக வேதம் பேசுகிறது. இன்னுமொரு ரிக் அங்கிரஸ் மகரிஷியும் அவர் வம்சத்தாரும், வேள்விகளைப் புரிந்து. ஸூரியனை விண்வெளியில் உயரத்தில் பதித்தார்கள் என்று கூறுகிறது. அதர்வண வேதம் அவன் விருத்திரா ஸுரனிடமிருந்து பிறந்தான் என்று சொல்லுகிறது. (அ.வே. IV. 10.5)

பிருஹத்தேவதா என்ற நூல், விருஷாகபாயி, ஸூரியா, உஷஸ் என்று ஸூரியனுக்கு மூன்று மனைவிகள் எனக் கூறுகிறது. (II. 8) ஆனால் ரிக் வேதம் பத்தாவது மண்டலத்தில் ஸூரியா ஸூரியனுடைய மகள் என்ற குறிப்பைக் காண்கிறோம். ஸூரியன், தகப்பன் ஸ்தானத்தில் இருந்து கொண்டு ஸூரியாவைத் திருமணம் செய்து கொடுத்தார் என்று ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.X. 85.9). உஷஸ் ஸூரியனின் மனைவி என்று ரிக் வேதம் ஓரிடத்தில்

கூறுகிறது. (ரி.வே. VII. 75.5). பின்னால் வந்த இதிஹாஸ புராண நூல்களின் படி, ஸூரியனுக்கு ஸம்ஜ்ஞா, சாயா ஸுவர்சலா என்று மூன்று மனைவிகள் இருந்ததாகத் தெரிகிறது.

ஸூரியனுடைய போற்றத்தகுந்த ஒளி அக்கினி பகவானின் முகம் போல விண்ணில் பிரகாசிக்கிறது. ஸூரியனின் விழியைப் பற்றிய குறிப்புகளை நாம் வேதத்தில் பார்க்கிறோம். மித்ரா—வருணர்களின் விழியாகவும், அக்கினி பகவானின் விழியாகவும் ஸூரியனை, வேதம் பேசுகிறது. விடியற்காலை, எல்லாத் தெய்வங்களின் விழிகளையும் கொண்டு இருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. இறந்த மனிதனின் விழி ஸூரியனிடம் போவதாக ஒரு ரிக் கூறுகிறது. ஸூரியன் "கண்களின் நாயகன்" எனவும், எல்லா ஜீவராசிகளின் ஒரே கண்ணாகவும், விண்ணுக்கும் மண்ணுக்கும் நீருக்கும் அப்பால் பார்ப்பவன் என்றும் அதர்வண வேதம் பேசுகிறது. அவன் நெடுந்தூரம் பார்ப்பவன் என்றும், எல்லாவற்றையும் பார்ப்பவன் என்றும், உலகை யெல்லாம், கவனித்து அறியும் உளவாளி என்றும், மக்களின் நல்லதும் கெட்டதுமான செயல்களைப் பார்ப்பவன் என்றும் வேதம் சொல்லுகிறது. இப்படியாக ஸூரியனுக்கும், விழிகளுக்கும் ஒரு தொடர்பு காணப்படு கிறது. ஸூரியனால் எழுப்பப் பட்டு மக்கள் தத்தம் அன்றாட அலுவல்களைக் கவனிக்கிறார்கள். மக்கள் எல்லோருக்கும் பொதுவான அவன், அவர்களை எழுப்புவதற்காகவே உதயமாகிறான். அவன் அசையும் பொருட்களுக்கும் அசையாப் பொருட்களுக்கும் ஆன்மாவாக விளங்குகிறான். ஏழு குதிரைகளாகவோ அல்லது ஒரு குதிரையாலோ இழுக்கப்பட்ட தேரில் அவன் சஞ்சரிக்கிறான்.

வருணன் ஸூரியனுக்குப் பாதை அமைத்துக் கொடுத்ததாக ஒரு ரிக்கும், மித்ரா—வருணர்கள், ஆதித்யர்கள் மற்றும் அர்யமான் எல்லோருமாக சேர்ந்து அவனுக்குப்

பாதை அமைத்ததாக மற்றுமொரு ரிக்கும் கூறுகின்றன. பூஷன் அவனுடைய தூதன். உஷஸ் ஸூரியனையும், அக்கினியையும், வேள்வியையும் கொண்டு வந்ததாக இரண்டு ரிக்குகள் கூறுகின்றன. உஷஸின் மடியிலிருந்து ஜுவலித்துக் கொண்டே ஸூரியன் ஆகாயத்தில் மேலே ஏறுகிறான் என்று ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.VII. 63.3).

ரிக்வேதத்தில் பல இடங்களில் ஸூரியனுக்கு ஆதித்யன் (அதிதியின் மகன்) என்ற மற்றொரு பெயர் காணப்படுகிறது. ஆனால் ஒரே ஒரு இடத்தில் ஸூரியனை ஆதித்தியர்களிட மிருந்து பிரித்து வேறாகவும் வேதம் கூறும். (ரி.வே.VIII. 35 13.15). தியௌஸ் அவனுடைய தகப்பன். தெய்வங்கள் எல்லாம் கடலில் மறைந்திருந்த அவனை எடுத்து வளர்த்தார்கள். அக்கினியின் மற்றொரு உருவமாக அவனைத் தெய்வங்கள் விண்ணில் பதித்தார்கள்.

ரிக் வேதத்தில் பல இடங்களில் ஸூரியனை ஒரு பறவைக்கு ஒப்பிடுகிறார்கள். 'பறவையைப் போல' என்ற உவமை சில ரிக்குகளில் பார்க்கிறோம். இன்னும் சில ரிக்குகள் ஸூரியனை ஒரு பறவையாகவே பேசுகின்றன. "ஏழு குதிரைகளால் இழுக்கப்படும் ஸூரியன், அவனுடைய நீண்ட பயணத்தில், விரிவாகப் பரப்பப்பட்ட இடத்தில் செல்கிறான். வேகமாகப் பறக்கும் மருந்து, கீழே ஸோமரசத்திற்குப் பாய்ந்து வருகிறது. தன்னுடைய கால் நடைகளுக்கிடையே சென்று கொண்டிருக்கும் இளம் அறிவாளி ஒளியுடன் பிரகாசிக்கிறான்." (ரி.வே.V. 45.9) இந்த ரிக்கில் "பருந்து", "அறிவாளி" என்ற சொற்கள் ஸூரியனைக் குறிக்கின்றன. "கால்நடைகள்" ஸூரியனுடைய கிரணங் களைக் குறிக்கின்றன.

சில இடங்களில் அவனை ஒரு எருதுக்கு வேதம் ஒப்பிடுகிறது. ஒரு ரிக் அவனைக் குதிரைக்கு ஒப்பாகப் பேசுகிறது. "தெய்வங்களுடைய விழியைத் தாங்கிக் கொண்டு,

சுபமான பெண்மணி, வெண்மையானதும், பார்ப்பதற்கு அழகானதுமான குதிரையை இழுத்துச் செல்கிறாள்; தன் கிரணங்களால் தெளிவாக்கப்பட்ட உஷஸ், ஒளி வீசிக் கொண்டு, வியக்கத் தகுந்த பொக்கிஷத்தை உலகுக்கெல்லாம் கொண்டு வருகிறாள்." (ரி.வே.VII. 77.3) இங்கு தெய்வங்களின் விழியும், வெண் குதிரையும் பொக்கிஷமும் ஸூரியனைக் குறிக்கும். சுபமான பெண்மணி உஷஸைக் குறிக்கும்.

சில ரிக்குகள் ஸூரியனை விண்ணில் பதிக்கப்பட்ட பொன்னாலான மணியாகப் பேசுகின்றன. இன்னும் சில இடங்களில் அவனை ஒளிவீசும், ஆகாயத்தில் பதிக்கப் பட்டிருக்கும் கல்லாக ரிக்குகள் குறிப்பிடுகின்றன.

ஓரிடத்தில் அவனைத் தேரின் சக்கரமாகவும், மற்று மோரிடத்தில் அவனை மித்ரா—வருணர்களால் விண்ணில் வைக்கப்பட்ட பளபளப்பான தேராகவுமே பார்க்கிறார்கள்.

ஸூரியன் எல்லா உலகுக்கும் தெய்வங்களுக்கும் ஒளியைக் கொடுக்கிறான். அவன் வெளிச்சத்தால் இருளைப் போக்குகிறான். அவன் இருளை ஒரு தோலைப் போல சுருட்டுகிறான். "கிழக்கே உதித்து, எல்லோராலும் பார்க்கப்பட்டு, மேலெழும்பும் ஸூரியன் பார்க்க முடியாதவைகளையும், இருளின் பிசாசுகளையும் அழிக்கிறான்." (ரி.வே.I. 191.8). ஸூரியனின் கடும் வெப்பமும் கொளுத்தும் வெய்யிலும் ரிக் வேதத்தில் அதிகமாகக் காணப்படவில்லை. இது அதர்வண வேதத்திலும், பிராம்மண நூல்களிலும் தென்படுகிறது.

ஸூரியன் நாட்களை அளக்கிறான்; அவன் வாழ்க்கையின் நாட்களை அதிகரிக்கிறான். அவன் இருளையும், நோய்களையும், கெட்ட கனவுகளையும் அகற்றுகிறான். எல்லா உயிர்களும் ஸூரியனை நம்பி வாழ்கின்றன. ஸூரியன் ஆகாயத்தைத் தாங்குகிறான். அவனுடைய மஹிமையால் அவன் மற்ற எல்லாத் தெய்வங்களுக்கும் புரோகிதனாக விளங்குகிறான்.

ஸூரியனை இந்திரன் வென்றதாக ஒரு வரலாறு இருக்கிறது: "ஒரு சூதாட்டத்தில் எப்படி ஒரு ஆட்டக்காரர் தான் வென்றதையெல்லாம் சேர்த்துக் குவிப்பாரோ, அதே மாதிரி, இந்திரன், மற்றவர்களையெல்லாம் ஜயித்து ஸூரியனையும் வென்றான். முற்காலத்திலும், தற்காலத்திலும், உன்னுடைய இந்த மாபெரும் காரியத்தை வேறு எவரும் சாதிக்க முடியாது." (ரி.வே.X. 43.5). மற்றும் சில இடங்களில், இந்திரன் ஸூரியனுடைய தேரின் சக்கரத்தைத் திருடியதாக ரிக்குகள் பேசுகின்றன. இவைகளுடைய உள்ளுறைப் பொருளை இரண்டு விதமாகக் கூறலாம். ஒன்று, இது ஸூரியக் கிரஹணத்தைக் குறிப்பதாக இருக்கலாம். மற்றது, அடர்ந்த கரு மேகங்கள், ஸூரியனை மறைத்து, பூமி நீரிலிருந்து அவன் கிரஹித்த நீராவியை மழையாகப் பொழிவதைக் குறிக்கலாம்.

அந்தணர்களுக்கு விதிக்கப்பட்ட நித்தியகர்மாவான மாந்யாஹ்னிகத்தின் உபஸ்தானத்தில் பின் வரும் மந்திரங்கள் ஸூரியனைத் துதிக்கின்றன.

1. உத்வயம் தமஸப்பரி பஸ்யந்தோ ஜ்யோதிருத்தரம்।
   தேவம் தேவத்ரா ஸூர்ய—அகன்ம ஜ்யோ
   திருத்தமம் ॥ (ரி.வே I. 50.10)

2. உதுத்யம் ஜாத வேதஸம் தேவம் வஹந்தி கேதவ:।
   த்ருசே விச்வாய ஸூர்யம் ॥ (ரி.வே. I. 50.1)

3. சித்ரம் தேவானாம் உதகாத நீகம் சக்ஷுர் மித்ரஸ்ய
   வருணஸ்யாக்னே:

   ஆ ப்ரா த்யாவாபிரதிவீ அந்தரிக்ஷம் ஸூர்ய
   ஆத்மா ஜகத: தஸ்துஷஸ்ச ॥ (ரி.வே. I. 115.1)

4. தச்சக்ஷுர் — தேவஹிதம் புரஸ்தாத் சுக்ர முச்சாத்।
   பச்யேம சரத: சதம், ஜீவேம சரத சதம்;
   (ரி.வே. VII.66.16) நந்தாம சரதசதம்

மோதாம சரதச்சதம், பவாப சரதச் சதம்,
ச்ருணவாம சரத: சதம்,
ப்ரப்ரவாம சாத: சதம், அஜீதாஸ்ம சரத: சதம்.

பொருள் :

1. தெய்வமான ஸூரியன் இருளை விழுங் கொண்டு உதயமாகிறான்; அவன் உயர்ந்த ஜோதி வடிவ உள்ளான்; அவன் மற்ற எல்லாத் தெய்வங்களை இரக்ஷிக்கிறான்; அவனைப் பார்க்கும் நாம் உத்தமமா ஆன்மஜோதியையே அடைந்தவர்களாவோம்.

2. எல்லாவற்றையும் அறிகின்ற தெய்வமா ஸூரியனைக் கிரணங்கள், உலகோரின் தரிசனத்திற்கா உயரத்தாங்கிச் செல்லுகின்றன.

3. அவன் எல்லாத் தெய்வங்களுடைய வடிவம விசித்திரமாக உள்ளான்; மித்திரனுக்கும், வருணனுக் அக்கினிக்கும் கண் போன்ற அவன் உயரச் செல்லுகிறா அசையும் பொருள்களுக்கும் அசையாப் பொருள்களுக் ஆத்மாவாகிய ஸூரியன் விண்ணுலகம், மண்ணுலக நடுவிலுள்ள காற்று மண்டலம் அனைத்தையும் வியாபி கிறான்.

4. கிழக்கில் உதித்து, தேவர்களுக்கு நன்மை செய்வது கண் போன்றதுமான அந்த ஸூரிய மண்டலத்தை நூறாண் கண்டு வணங்குவோம்; அங்ஙனம் நூறாண்டு வாழ்வோ நூறாண்டு உற்றார் உறவினருடன் கூடிக் குலவுவோ நூறாண்டு மகிழ்வோம்; நூறாண்டு புகழுடன் வாழ்வோ நூறாண்டு இனியதையே பேசிக் கேட்போம்; நூறாண் காலம் தீமைகள் எங்களை வெல்லாமல் வாழ்வோம்.

வேதகாலத்திலும், பிற்காலத்திலும், தற்காலத்திலு ஸூரியன், பிரத்தியக்ஷ தெய்வமாகப் போற்றப்பட் வணங்கப்பட்டு வருகிறான்.

* * *

## 2.5 ஸவிதா

வேதகாலத்திலும், பிற்காலத்திலும் ஸவிதா ஸூரியனின் மற்றொரு பெயராகவே விளங்குகிறது. வால்மிகி ராமாணத்தில் உள்ள ஆதித்திய ஹிருதயம் என்று துதியில் "ஆதித்ய: ஸவிதா ஸூர்ய: கக: பூஷா கபஸ்திவான்," என்ற ஸூரியனுடைய மற்ற பெயர்களின் வரிசையில் ஸவிதா சேர்ந்துள்ளது. ஆனாலும் வேதகாலத்தில் ஸவிதாவிற்கும் ஸூரியனுக்கும் ஒரு நுண்மையான வேறுபாடு இருப்பதைக் காணலாம். இதை சற்று விரிவாக ஆராய்வோம்.

யாஸ்கர், இருள் நீங்கிய பிறகு விண்ணில் தென்படுவது தான் ஸவிதா என்று கூறுகிறார். (நிருக்தம் XII. 12).

"எவனொருவன், பகலை உண்டு பண்ணும் ஸூரியனை இழுக்கிறானோ (பிரஸௌதி), அவனே ஸவிதா" என்று ஸௌனகர் கூறுகிறார். (பிருஹத்தேவதா II. 62).

ரிக் வேதத்திற்கு உரை எழுதிய ஸாயனர் உதயத்திற்கு முன் உள்ள சூரியன் ஸவிதா எனப்படுவான் என்று கூறுகிறார். (ரி.வே. V. 81.4. ஸாயனரின் உரை).

இனி ரிக் வேதமே என்ன சொல்லுகிறது என்று பார்ப்போம். "மிகுந்த அருளுடைய தெய்வமான ஸவிதா எல்லா ஜீவ ராசிகளையும் (அதிகாலையில்) எழுப்பியும் (இரவில்) தூங்கப் பண்ணியும், உலகில் ஆட்சி புரிகிறான்." (ரி.வே.IV. 53.6). இங்கு ஸவிதா உதயமாவதற்கு முன் உள்ளதும், அஸ்தமிக்கும் சமயத்தில் இருப்பதும் ஆன ஸூரியனைக் குறிக்கிறது என்று தெரிகிறது. தூங்கச் செய்பவனும் ஸவிதா. எழுப்புகிறவனும் ஸவிதா என்ற இதே கருத்தை இன்னுமொரு ரிக்கும் கூறுகிறது. (VII. 45.1)

ஸவிதா தேவதையாக விளங்கும் ஒரு அழகான ஸூக்தத்தில் அஸ்தமிக்கும் ஸூரியனுக்குப் பொருந்தும் பல

குறிப்புகளைக் காணலாம். (ரி.வே.II. 38). "வேகமாக ஓ குதிரைகளை ஸவிதா அவிழ்த்து விடுவான்; விரை செல்லும் தேரை அவன் நிறுத்துவான், பாம்புகளைப் போ சறுக்கிக் கொண்டே போகும் அவைகளை அவ கட்டுப்படுத்துவான். அவனுடைய ஆட்சியை நெருங்கி இ பின்பற்றுகிறது. வரண்ட பிரதேசங்களில் வன விலங் தங்கள் பங்குக்கான நீரைத் தேடிப் போகின்றன; காடு பறவைகளுக்கு ஒதுக்கப்பட்டன; தெய்வமான ஸவிதாவி இந்தக் கட்டளைகளை யாரும் மீற முடியாது. அ வேளையில், வருணன், ஓய்வில்லாத அவசரத்துடன், நீ உள்ள தன் இருப்பிடத்திற்கு விரைகிறான்; பிறகு, ஒவ்வொ பறவையும் தன் கூட்டைத் தேடுகிறது; விலங்கு தங்களுடைய இருப்பிடத்திற்குச் செல்லுகின்றன; இப்படி ஸவிதா ஒவ்வொரு பிராணியையும் அதனதன் இடத் இருக்கச் செய்கிறான்."

ஸவிதா தேவதையாக விளங்கும் ஸூக்தங்களில் ப அதிகாலை வேளையிலோ அல்லது மாலை வேளையிலே ஓதப்படுவதாக அமைந்திருக்கின்றன. அவன் இரண் கால்கள் உள்ளதும் நான்கு கால்கள் உள்ளதுமா ஜீவன்களை ஓய்வுக்குக் கொணர்ந்து எழுப்பவும் செய்கிறா அவன் சுற்றித்திரிபவனை ஓய்வுக்குக் கொண்டு வருகிறா அவன் ஆணைப்படி இரவு வருகிறது; நெசவுவேலை செய் பெண், தான் பாதி நெய்ததைச் சுருட்டுகிறாள்; எ வேலையில் தேர்ந்த தொழிலாளி முடியாத வேலைை கீழே வைக்கிறான். பின் வேத நூல்களில் மேற்கு தி அவனுக்காக ஒதுக்கப்பட்டது. (சதபதப் பிராம்மணம் III. 3.18)

இரு பிறப்பாளர்களுக்கு விதிக்கப்பட்ட நித்திய கர் வான சந்தியாவந்தனத்தில் காயத்திரி ஜபம் முக்கிய பகு யாகும். காயத்திரி மந்திரத்திற்கு ஸவிதா தேவதையா இருக்கிறான். இந்தக் கர்மாவை எல்லோரும் மும்மு

காலையில் ஸுரிய உதயத்திற்கு முன்பும், நடுப்பகலிலும், மாலை ஸுரிய அஸ்தமனத்திற்கு முன்பும் செய்ய வேண்டும். இந்த சமயங்களில் ஸுரியன் ஸவிதாவாக விளங்குகிறான் என்பது தெளிவாகிறது. ரிக் வேதத்திலும் இதற்கு ஆதாரம் காணப்படுகிறது. "ஓ ஸவிதா! நீ ஒவ்வொரு நாளும், மேலுலகிலிருந்து, தினம் மூன்று வேளை, உன்னுடைய அருளைக் கீழே அனுப்புவாயாக". (ரி.வே.III. 56.6)

'உண்டாக்குதல்' என்ற பொருள்படும் வடமொழி வினைச் சொல்லாகிய 'ஸு' என்பதிலிருந்து ஸவிதா என்ற சொல் பிறந்தது. ரிக்வேதத்தில் ஸவிதா என்ற சொல் வரும் இடங்களில் இந்த 'ஸு'வின் பரிணமங்களைக் காணலாம்.

மேலே சொல்லப்பட்ட குறிப்புகளிலிருந்து, ஸவிதா ஸுரியனின் மற்றொரு பெயர் என்றும், ஆனால் அது ஸ்ுரியனுக்கு சில சமயங்களில் தான் பொருந்தும் என்றும் தெளிவாகிறது. பொழுது புலர்ந்து ஸுரியன் உதயமாவதற்கு முன் கீழ்வானம் பொன் நிறமாகப் பளபளக்கிறது; அதேமாதிரி, அந்தி வேளையில் ஸுரியன் அஸ்தமிப்பதற்கு சற்று முன், மேல் வானம் உருக்கி வார்த்த பொன்னைப் போல தக, தகவென மின்னுகிறது. இந்தப் பொன் நிறமான ஸுரியனைத் தான் ஸவிதா என்று வேதம் கூறிப் போற்றி வணங்குகிறது. இந்த இரண்டு வேளைகளிலும் தான் வேள்விகளைப் புரிகிறார்கள் என்பதால், ஸவிதாவிற்கு வேதகால தெய்வங்களின் நடுவில் ஒரு முக்கிய ஸ்தானம் இருக்கிறது என்பதும் புலனாகிறது.

இது தவிர, ஸவிதா எல்லா உயிர்களையும், உலகின் நடவடிக்கைகளையும் தூண்டும் தெய்வமாக இருக்கிறார். வான வீதியில் மற்ற எல்லா கோள்களையும் விட ஸவிதா வினால் உந்தப்பட்டுக் கிளம்பும் ஸுரியனின் உலா மிக முக்கியமாக விளங்குகிறது. வேதகால ரிஷிகளின் கருத்தின் படி, உருவகப் படுத்தப்பட்ட ஸுரியனின் தெய்வீக சக்தியாக

ஸவிதா விளங்குகிறான். வேதகால மக்கள் ஸவிதாவை உயிர்களை ஊக்குவிப்பவனாகவும், அவர்களைத் தட்டி எழுப்புவனாகவும், அவர்களுடைய செயல்களைத் தூண்டுபவனாயும், அவர்களுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டுபவனாகவும், கருதி வழி பட்டார்கள்; எல்லா மந்திரங்களுக்கும் ஆணி வேராக விளங்கும் காயத்திரி மந்திரத்திற்குத் தேவதையாக ஸவிதா விளங்குகிறான் என்பதிலிருந்தே அவனுடைய முக்கியத்துவம் நன்கு புலனாகிறது.

ஸவிதா பொன்னான தெய்வம் என்றும், அவனுடைய விழிகளும், முடியும், நாக்கும், பொன்னாலானவை என்றும் ரிக்வேதம் சொல்லுகிறது. அவன் சிகப்பு நிற ஆடையை உடுத்துகிறான். அவனுடைய தேரும் பொன்னாலானது.

அவன் மகத்தான பொன் நிற ஒளியுடன் விளங்குகிறான். அவன் காற்றையும், விண்ணையும், மண்ணையும், உலகிலுள்ள எல்லா பாகங்களையும் பிரகாசிக்கும் படி செய்கிறான். அவன் வலிவான, பொன்னான தன் கைகளை உயரத்தூக்கி, உலகின் எல்லைகள் வரை நீட்டி, உயிர்களை எல்லாம் எழும்பி, அருள் பாலிக்கிறான். அவன் தன்னுடைய பொன் தேரில், மேலே போகும் பாதையிலும், பிறகு கீழே போகும் பாதையிலும் போய்க் கொண்டே எல்லா உயிர்களையும் நோக்குகிறான்.

விடியற்காலையின் மங்கல் ஒளியைத் தொடர்ந்து பிறகு பகலில் அவன் நல்ல ஒளி வீசுகிறான். அவன் உலகிலுள்ள எல்லா இடங்களையும் அளக்கிறான்; மேலே உள்ள மூவ்வுலகிற்கும் செல்லுகிறான்; ஸூரியனுடைய கிரணங்களுடன் சேர்ந்து கொள்ளுகிறான். "ஸூரியனுடைய கிரணங்களால் பிரகாசித்துக் கொண்டு, மஞ்சள் நிற முடியுடைய ஸவிதா, கிழக்கிலிருந்து தன்னுடைய ஒளியை மேலே தூக்கிய வண்ணம் இருக்கிறான்.' (ரி.வே.X. 139.1). வெகு நாட்களாக

இருக்கும் அவனுடைய பாதை புழுதி இல்லாமலும், பிரயாணம் செய்ய எளிதாகவும் இருக்கிறது.

இறந்தவர்களுடைய ஆன்மாவை நல்லோர் இருக்கு மிடத்திற்கு அழைத்துச் செல்லும் படி ஒரு ரிக் அவனை வேண்டுகிறது. (ரி.வே.X. 17.4). அவன் தேவர்களுக்கு இறவாமையையும், மனிதர்களுக்கு நீண்ட ஆயுளையும் தருகிறான். நீண்ட பயணத்திற்குப் பிறகு ரிபுக்கள் ஸவிதாவின் இருப்பிடத்தை அடைந்தபொழுது, அவன் அவர்களுக்கு சாகாமையை அருளினான். (ரி.வே. (I.110.2.3.)

கெட்ட கனவுகளை அகற்றி, மக்களைக் குற்றமற்ற வர்களாகச் செய்யும் படி ஸவிதாவை, ஸூரியனைப் போலவே, ஒரு ரிக் வேண்டுகிறது. அவன் பேய் பிசாசு களையும், அரக்கர்களையும் விரட்டுகிறான் என்கிறது மற்றொரு பாடல்.

ஸவிதா நிர்ணயிக்கப்பட்ட ஆணைகளைப் பின் பற்றுகிறான். காற்றும், நீரும் அவனுடைய ஆணைகளுக்குக் கீழ்ப்படிகின்றன. ஸவிதா ஆறுகளை ஓடும்படி செய்கிறாள்; அவன் ஆணையால் அவைகள் அகலமாக விரிந்து ஓடுகின்றன. (ரி.வே.III.33.6). மற்றத் தெய்வங்கள் அவளைப் பின்பற்றுகிறார்கள். இந்திரன், வருணன் முதலிய தெய்வங்கள் கூட ஸவிதாவின் விருப்பத்தையே மீற முடியாது. அஷ்ட வசுக்களும், அதிதி தேவதையும், இந்திரன், வருணன், அர்யமான் முதலானவர்களும் கூட ஸவிதாவின் பெருமைகளைப் புகழ்ந்து பாடுகிறார்கள். (ரி.வே.VII. 38.3.4) விரும்பும் செல்வங்களுக் கெல்லாம் அதிபனாக இருந்து கொண்டு, அவள் விண்ணிலிருந்தும் மண்ணிலிருந்தும் அருள் புரிகிறாள். அக்கினியைப் போல அவனும் வீட்டுடன் தொடர்புள்ளவன். அவன் விண்ணையும் மண்ணையும் தாங்குகிறான். முன்பு அவன் பூமியைக் கயிறுகளால் பிணைத்து நிறுத்தினான்; அவன் வான வெளியைத்

தூண்கள் இல்லாமலேயே நிற்கும்படி செய்தான். (ரி.வே. 149.1)

'அபாம் நபாத்' என்ற வடமொழிச் சொல்லிற்கு நீர் பிள்ளை, பேரன், சந்ததி என்று பொருள். (அத்தியாயம் ஐப் பார்க்கவும்.) இந்தச் சொல் அக்கினி பகவானை குறிக்கும். ஆனால் ரிக்வேதத்தில் இரண்டு இடங்களில் சொல் ஸவிதாவைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இரண் இடங்களிலும் ஸவிதாவை நீரின் மகன் என்று வே கூறுகிறது. (ரி.வே.I. 22.6;X. 149.2) மழையை உண்டாக்குவத ஸவிதா நீரின் மகன் என்றும், அவன் விண் வெளியி இருந்து கொண்டு மேகங்களை மழையாகப் பொழியும்ப செய்கிறான் என்றும் யாஸ்கர் கூறுகிறார். (நிருக்தம் X.3 ஒரு ரிக் ஸவிதாவைப் பிரஜாபதி என்று குறிப்பிடுகிற பின் வந்த பிராம்மண நூல்கள் பிரஜாபதியும் ஸவிதாவு ஒரே தெய்வம் என்று சொல்லுகின்றன.

வேதகால தெய்வங்களில், புத்துணர்ச்சியை ஊட் விக்கும் ஒரே தெய்வமாக ஸவிதா விளங்குகிறாள். இ காயத்ரி மந்திரத்தில் தெளிவாகக் காணலாம். ஸவி தேவதையாக விளங்கும் காயத்ரி மந்திரத்தின் பொரு வருமாறு: "தெய்வமாகிய ஸவிதாவுடைய மிகச் சிறந் ஜோதிஸ் வருபத்தைத் தியானிப்போம். இதன் பயனாக அவ நமது உள்ளத்தைத் தூண்டிச் சிறப்பாகச் செயல்பட அரு வேண்டும்." (ரி.வே.III. 62.10). இதில் குறிப்பிடத்தக்க என்னவெனில் தியானிப்பது ஸவிதாவின் ஒளி என்பது ஆனால் புத்தியைத் தூண்டுவது தெய்வமாகிய ஸவிதாவே என்பதும் தான். ஸூரியனின் நிகரற்ற ஒளியை மனத்தி இருத்தி, வேறு எண்ணங்களை அறவே நீக்கித் தியான செய்வது எளிது அல்லவா?

ஸந்தியா வந்தனத்தின் முடிவிலும் ஸவிதாவையே வேண்டுகிறோம். மந்திரம் வருமாறு:

அத்யா நோ தேவ ஸவித: ப்ரஜாவத் ஸாவீ;
ஸௌபகம் ।
பரா துஷ்வப்னியம்: ஸுவ ॥
விஸ்வானி தேவ ஸவிதா: துரிதானி பராஸுவ ।
யத் பத்ரம் தன்ம ஆ ஸுவ ॥ (ரி.வே. V. 82.4.5)

இதன் பொருள் வருமாறு: "ஸவித்ரு தேவனே! இப்பொழுது எங்களுக்கு சந்ததிகளுடன் கூடிய சௌபாக்கியங்களை அருளி, கெட்ட கனவுகளைப் போக்க வேண்டும். ஸவித்ரு தேவனே! எல்லாத் துன்பங்களையும், வருத்தங்களையும் அகற்றி, எது உயர்ந்த நன்மையோ அதை நான் அடைய அருள வேண்டும்." இதில் சிந்திக்கத்தக்கது என்னவென்றால் எந்த ஒரு குறிப்பிட்ட பொருளையோ, விஷயத்தையோ கேளாமல், நமக்கு எது நல்லது என்பதை ஸவிதாவே நிர்ணயித்து அதை அருள வேண்டும் என்பது தான். நாம் ஏதோ ஒன்றைக் குறிப்பிட்டுக் கேட்டால், அது நமக்குத் துன்பமாக முடியலாம்; ஆனால் ஸவிதாவே ஒன்றை நமக்கு நல்லது என்று நிர்ணயித்துக் கொடுத்து விட்டால் அது நல்லதாகவே இருக்கும். சமயச் சிந்தனையின் வளர்ச்சியில் இக்கருத்து நல்ல முதிர்ச்சியைக் காட்டுகிறது. மிகப் பழைய நூலாகிய ரிக் வேதத்திலேயே இக்கருத்து பாடப் பெற்றது சிறப்புடையதாகும்.

அவனுடைய சட்ட திட்டங்களால் ஸவிதா மித்ரனாக ஆகிறான். சில இடங்களில் அவன் பாகனாக ஆகிறான். ரிக்வேதம் பல இடங்களில் ஸவிதாவையும் ஸூரியனையும், வித்தியாச மில்லாமல் கலந்தே பேசுகிறது.

இப்படியாக ஸவிதா வேதகாலத்திலும், இன்னும் என்றும் ஒரு முக்கியமான தெய்வமாக விளங்குகிறாள்.

* * *

## 2.6 பூஷன்

பூமிக்கு வலுவை (புஷ்டி)த் தந்து, தன் கிரணங்களால் இருளை நீக்கி அதை நன்கு வளர்க்கிறான் (போஷயதி) என்பதால் அவனுக்கு பூஷன் என்ற பெயர் வந்தது என்று சௌனகர் கூறுகிறார். (பிருஹத் தேவதா II. 63) பன்னிரண்டு ஆதித்தியர்களில் பூஷனும் ஒருவன் ஆவான்.

'ஆடுகளால் இழுக்கப்பட்ட பூஷா, நமக்கு உகந்த மனைவிகளைக் கொடுக்கட்டும்' என்று ஒரு ரிக் வேண்டுகிறது. (ரி.வே.IX. 67.10) அவன் தேரோட்டிகளில் மிகச் சிறந்தவன் என்றும், இந்திரனுடைய நண்பனாக இருந்து கொண்டு எதிரிகளை அழிப்பதாகவும் ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.VI. 56.2). பூஷன மேலுலகில் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டதாக ஒரு ரிக் சொல்லுகிறது. (ரி.வே.II. 40.4)

ஈமக்கிரியைகளில் பூஷனுக்குப் பெரும் பங்கு உண்டு. ரிக் வேதத்தில், பின் வரும் வேண்டுகோளைக் காணலாம். "உலகுக்கெல்லாம் காப்போனான பூஷன் இறந்தவருடைய ஆவியைத் தூக்கிச் செல்லட்டும்; அவனுக்குப் போக வேண்டிய இடம் தெரியும். அவன் அந்த ஆவியை முன்னோர்களிடம் ஒப்படைக்கட்டும்; அக்கினி இறந்தவனைக் கனிவான தெய்வங்களுக்குக் கொடுக்கட்டும். ..... தெய்வமான ஸவிதா முன்னால் இறந்த நல்லோர் இருக்குமிடத்திற்கு அந்த ஆவியைத் தூக்கிச் செல்லட்டும். பூஷனுக்கு இந்த இடங்கள் எல்லாம் தெரியும்; அவன், பயமும், ஆபத்தும் இல்லாத வழிகளில் எங்களைக் கூட்டிச் செல்லட்டும். அருள் வழங்குபவனும், ஒளி வீசுபனும், வீரனும், அறிவாளியும், கவன முள்ளவனும் ஆன பூஷன் எங்களுக்கு முன் செல்லட்டும். விண்ணுக்கும் மண்ணுக்கு வெகு தொலைவில் உள்ள வழிகளில் போவதற்காகவே பூஷன் பிறந்துள்ளான்; எல்லோரும் ஒன்று கூடும் இடங்களை அவன் நன்கு அறிந்து, அவ்விடங்களுக்கும் போய்த் திரும்புகிறான்." (ரி.வே.X. 17.3.6)

'எல்லாத் தெய்வங்களுக்கும் பிரியமானதும், பூஷனுக்குச் சொந்தமானதுமான இந்த ஆடு, வேகமாகச் செல்லும் குதிரையை, இந்திரனுக்கும் பூஷனுக்கும் பிரியமான இடத்திற்குக் கூட்டிச் செல்லுகிறது. (ரி.வே.I. *16 2.3*). ஏற்றமாக உள்ள மலைப்பாதைகளில் ஆடு, உறுதியான நடையுடன், தடுக்கி விழாமல் ஏறிச் செல்லும்; ஆகையால் தான் ஆடு இழுக்கும் தேரில் போகும் பூஷன் மலைப் பாதைகளை நன்கு அறிவான் போலும்!

வழிகளையும் பாதைகளையும் நன்கு அறிந்த பூஷன் பாதைகளைக் காப்போனாக இருக்கிறான். ரிக் வேதத்தில் பாதையில் போகும் மக்கள் பூஷனை வேண்டுகிறார்கள்: 'எங்களுடைய பாதைகள் நீண்டு போகாமல் அவற்றைக் குறைக்கவும்; வழியில் குறுக்கிடும் தடுப்புகளை அகற்றவும் எங்களைக் கடிக்க வழியில் காத்திருக்கும் கெட்ட ஓநாயை விரட்டி விடு. வழியில் தென்படும் தந்திரமுள்ள திருடனைத் துரத்திவிடு.' (ரி.வே.II. *42.1.3*). முதல் ரிக்கில் 'விமுசோ நபாத்' என்ற சொல் பூஷனாக குறிக்கிறது.' 'விடுதலைக்கு மகன்' என்று இதற்குப் பொருள். இன்னுமொரு இடத்திலும் விமுசோ நபாத் என்ற சொல்லைக் காண்கிறோம். (ரி.வே.VI. 55.1) இதுவும் பூஷனைக் குறிக்கிறது. ஸாயனர் இதை இருவிதமாக விளக்குகிறார். முதலிடத்தில் அவர் இதற்கு 'மேகத்தின் மகன்' என்று பொருள் கூறுகிறார். நல்ல மழை பெய்து, பயிர்கள் வளர்ந்து, நாட்டில் செழிப்பு ஏற்படும் பொழுது செழிப்புக்கத் தெய்வமான பூஷனின் தொடர்பு இருப்பதால் இப்பெயர் வந்தது. படைக்கும் பொழுது பிரஜாபதி, எல்லா ஜீவராசிகளையும் தன்னிடமிருந்தே உண்டாக்குகிறார் என்றும், பூஷா அப்பிரஜாபதியின் மகன் என்றும் மேலும் ஸாயனர் கூறுகிறார். இரண்டாவது இடத்தில் ஸாயனர் மக்களுக்கு வேண்டிய அளவு சுயேச்சையை அளிக்கிறார் என்று விளக்குகிறார்.

அதர்வ வேதத்தில் 'விமுசோ நபாத்' ஆன பூஷனைப் பாவங்களிலிருந்து விடுவிக்கும் படி வேண்டுகிறார்கள். (அ.வே. VI. 112.3). ஸாயனர் ஒரு ரிக்கின் உரையில் இதையே கூறுகிறார். (ரி.வே.VIII. 4 15.16).

ரிக் வேதத்தில் எதிரிகளைத் துரத்தி, பாதைகளைத் தடையில்லாமல் செய்து, செல்வங்களை அடைய, வழி வகுக்கும் படி பூஷனை வேண்டுகிறார்கள். (ரி.வே.VI. 53.4). இதையே மற்றுமோர் ரிக்கிலும் காணலாம். (ரி.வே.I. 42. 7.8)

பூஷன் பாதைகளை நன்கு அறிவாராகையால், ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் பொருள்களை வெளிக்கொணர்ந்து அவைகளை எளிதில் கண்டு கொள்ளச் செய்யும் படி, அவனை வேண்டுகிறார்கள். (ரி.வே.VI. 48.15).

குகையில் ஒளித்து வைக்கப்பட்டுப் புல் தரையில் படுத்திருக்கும் ஓர் அரசனை ஒளி வீசும் பூஷன் கண்டுபிடித்ததாக ஒரு ரிக்கில் காண்கிறோம். (ரி.வே. I. 23.14). இங்கு அரசன் என்பது ஸோமனைக் குறிப்பிடுகிறது. இதனால் காணாமல் போன பொருள்களைக் கண்டுபிடிக்க, மக்கள் பூஷனை வேண்டுவது வழக்கத்தில் இருந்தது.

மக்கள் பூஷனைத் தங்களுடைய ஆடு மாடுகளுடனும், குதிரைகளுடனும் கூடச் சென்று, அவைகளைக் காக்கும் படி வேண்டுகிறார்கள். (ரி.வே.VI. 54. 5.6). பின்னும் பூஷனிடம் கோருகிறார்கள்: "எங்களுடைய ஆடு மாடுகளில் ஒன்றும் காணாமல் போகாதிருக்கட்டும்! அவைகளுக்கு அடிபடாமல் இருக்கட்டும்! குழிகளில் விழுந்து கால்களை ஒடித்துக் கொள்ளாமல் இருக்கட்டும்! அவைகளை நல்லபடியாகத் திருப்பிக் கூட்டி வர வேண்டும்; காணாமல் போன ஆடு மாடுகளை எங்களிடம் திருப்பிக் கொடுத்து விடு!" (ரி.வே.VI. 54. 7.10). பசு மாடுகளைச் சரியான வழியில் ஓட்டிச் செல்லப் பூஷன் கையில் ஒரு அங்குசத்தை வைத்திருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.VI. 53.9). 'ஆடு

மாடுகளைக் காப்போன்' என்ற பட்டத்தை அவனுக்கு அளிக்கிறார்கள். (ரி.வே.VI. 58. 2)

பயிர்த்தொழில் செய்பவர்கள் வயலை உழும் பொழுது, ஏரை நேராகச் செலுத்தும்படி பூஷனை வேண்டுகிறார்கள். (ரி.வே.VI. 57. 7). செழுமைக்குத் தெய்வமான பூஷனைப் பயிர் நடுவதற்கு முன் வேண்டுவது பொருத்தமே.

ஒரு ரிக்கில் செம்மறியாட்டு ரோமங்களிலிருந்து ஆடைகளை நெய்து, அவைகளை நேர்த்தியாகச் செய்யும் படி பூஷனைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். (ரி.வே.X. 26.6)

சில ரிக்குகள் பூஷனின் செல்வத்தைக் குறிப்பிடு கின்றன. 'செல்வத்திற்கெல்லாம் நாயகனான வலிமையுள்ள பூஷன் செழிப்பின் உற்ற நண்பனாக விளங்குகிறான்; அவன் தலையைச் சற்றே அசைத்துச் சீரான தாடியை ஆட்டுகிறான்; அவனை எளிதில் ஏமாற்ற முடியாது. ஓ பூஷனே! உன்னுடைய அந்த வெள்ளாடுகள் உன்தேரை எங்கள் பக்கம் திரும்பட்டும்! பழங்காலத்தில் பிறந்து, உறுதியான மனப்பான்மையுடன் இருக்கும் நீ வேண்டுபவர்களின் தோழனாக விளங்குகிறாய்.' (ரி.வே. X. 26. 7.8)

பூஷன் தயிருடன் கலந்த கூழை விரும்பிக் குடிப்பதாகச் சில ரிக்குகள் பேசுகின்றன. (ரி.வே.VI. 56.1). இதே உணவைப் பூஷனுடன் கூட இந்திரனுக்கும் சில சமயங்களில் அளிக்கிறார்கள். (ரி.வே.III. 52.7)

இப்படியாக ரிக் வேதகாலத்தில் பூஷன் செல்வத்தை யும் செழிப்பையும் வழங்குபவனாகவும், ஆடு மாடுகளைக் காப்போனாகவும், எல்லாப் பாதைகளையும் நன்கு அறிந்த வனாகவும், இறந்தவர்களை அவர்களுடைய உலகிற்கு அழைத்துச் செல்பவனாகவும், தெய்வங்களுக்கு நடுவில் ஓரளவு முக்கியமான இடத்தைப் பெறுகிறான். ஆனால் ரிக் வேதத்திற்குப் பிறகு, மற்ற வேதங்களுடைய

காலத்திலேயே, அவனுடைய முக்கியத்துவம், படிப்படி
கக் குறைந்து, புராண காலகட்டத்தில் அவனைப் பற்றி
குறிப்பைக் காண்பதே அரிதாக ஆகிவிட்டது.

* * *

## 2.7. விஷ்ணு

ரிக் வேதத்தில் விஷ்ணுவைப் பற்றி சொல்லப்படு
முக்கியமான சம்பவம் அவர் எடுத்து மூன்று காலடிக
ஆகும். இதைப்பற்றிப் பல இடங்களில் வேதம் ப
விவரங்களைக் கொடுக்கிறது.

இன்றும் திருமணம் போன்ற சடங்குகளிலு
ஹோமங்களிலும் பின்வரும் ரிக் வேத மந்திரம் ஓதப்ப
கிறது:

இதம் விஷ்ணுர் விசக்ரமே
த்ரேதா நிததே பதம்
ஸமூடமஸ்ய பாம் ஸுரே
(ரி.வே. I. 22.17)

இதன் பொருள் வருமாறு:

"இம் மூன்று உலகங்களையும் விஷ்ணு மும்மு
காலடி ஊன்றி நடந்தார்; பூமியிலுள்ள புழுதி எல்லா
அவருடைய கால்களை வருடின."

விஷ்ணு, பூதாகாரமான உருவத்தை எடுத்து, இந்
பூமியை எல்லாம் ஒரு காலடியில் அடக்கி, ஊன்றி நடந்தா
இரண்டாவது காலடி ஊன்றி விண்வெளியில் நடந்தா
மூன்றாவது காலடியைச் சுவர்க்க லோகத்தில் ஊன்
அதையே தன் இருப்பிடமாகக் கொண்டார். பூமியில் அவ
முதல் காலடிவைத்த வேகத்தில் புழுதி கிளம்பி அவ

கால்களை வருடி ஒத்தடம் கொடுத்தது. அவருடைய கால்களைத் தொட்டதால் புனிதமடைந்த புழுதி இப் பூவுலகையெல்லாம் புனித மாக்கியது.

மற்றுமொரு வேத மந்திரமும் இப்பொழுதும் சடங்குகளில் அடிக்கடி ஓதப்படுகிறது.

"தத் விஷ்ணோ: பரமம் பதம்
ஸதா பச்யந்தி ஸூரய:
தி வீவ சக்ஷுர் ராததம்"
(ரி.வே.I. 22.20)

இதன் பொருள் வருமாறு:

"விஷ்ணுவினுடைய அந்த உயர்ந்த இருப்பிடத்தை நித்திய ஸூரிகள் எப்பொழுதும் பார்த்துக்கொண்டே இருக்கிறார்கள்; அந்த இருப்பிடம் விண்வெளியின் ஒரு கண்ணாக விளங்கியது."

விஷ்ணு மூன்றாவது காலடியைச் சுவர்க்கத்தில் ஊன்றி அந்த உயர்ந்த இடத்தையே தன் இருப்பிடமாகக் கொண்டார் என்றோம். பூமியில் வேள்விகளைப் புரிந்து தவத்திலும் சிறந்து நல்ல முறையில் வாழ்ந்த நித்திய ஸூரிகள் எப்பொழுதும் கண் கொட்டாமல் அந்த உயர்ந்த இடத்திலுள்ள விஷ்ணுவையே நோக்கிக் கொண்டிருக் கிறார்கள். அந்த உயர்ந்த இருப்பிடத்திலிருந்துகொண்டு விஷ்ணு கீழே பூமியில் உள்ள எல்லா ஜீவராசிகளையும், அவர்களுடைய ஒவ்வொரு செயலையும், சாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார். உயிர்துறந்து, தங்களுடைய விசேஷ தவவலிமையால் விஷ்ணு பதத்தை அடைந்த மக்களும் கீழே பூமியை நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அந்த விஷ்ணுவின் இருப்பிடம் விண் வெளியில் பதிக்கப்பட்ட ஒரு கண் போல விளங்கியது.

இன்னுமொரு ரிக்கிலிருந்து பின் வரும் செய்திகளை அறிகின்றோம்:—

"விஷ்ணுவிற்கு மிகப் பிரியமான மாளிகையி தெய்வங்களிடம் ஈடுபாடு கொண்ட மக்கள் மகிழ்வுட வசிக்கிறார்கள்; அந்த இடம் எனக்குக் கிட்டட்டும்; ஏனெனி அகலமாகக் கால்களை வைக்கும் அவருக்கு அருகி உயரமான இடத்தில் அவர் காலடி ஊன்றிய சுவட்டில், தே பொங்கும் கிணறு இருக்கிறது." (ரி.வே.I. 154.5)

விஷ்ணுவைப் பற்றியும் அவர் பதித்த மூன் காலடிகளைப் பற்றியும் இன்னும் சில குறிப்புகள் இ ரிக்குகளில் உள்ளன. விஷ்ணு உலகத்தைக் காப்பவர்; யாரு அவரை ஏமாற்ற முடியாது; அவர் தன்னுடைய கட்டளை களை நிலைநாட்டுகிறார். உயிருள்ள பிராணிகள் எல்லா அவர் ஊன்றிய மூன்று காலடிகளுக்குள் வசிக்கின்றன அவர் ஒருவர் மட்டுமே எல்லா ஜீவ ராசிகளும் வசிக்கு இவ்வுலகை அளந்திருக்கிறார். அவர் காலடி ஊன்றி மூன்று இடங்களும் இனிமை நிரம்பியவையாகவும் அழியாதவையாகவும், மகிழ்ச்சி உள்ளவையாகவு இருக்கின்றன; அவர் மட்டுமே தனியாக நின்று இ மூவுலகத்தையும் தாங்குகிறார். (ரி.வே. I. 22. 18.19; I. 15 1.4)

விஷ்ணு காலடி ஊன்றிய முதல் இரண்டு இடங்களு மக்கள் கண்களுக்குப் புலப்படுகின்றன; ஆனால் மிகுந் உயரத்தில் வைத்த அவருடைய மூன்றாவது காலடியை மனிதர்களும் பறவைகளும் கூடப் பார்க்க முடியாது. (ரி.வே I. 155.5)

விஷ்ணுவின் இந்த மூன்று காலடிகளின் உள்ளுறை பொருளைப் பற்றிய ஆராய்ச்சியில் மூன்று விதமான கருத்துக்கள் உலவுகின்றன.

முதல் கருத்தின்படி இது காலையில் ஸூரியன் உதிப்பது, நடுப்பகலில் விண்வெளியின் உச்சிக்குச் செல்வது, மாலையில் அஸ்தமிப்பது என்ற ஸூரியனின் மூன்று நிலைகளை விஷ்ணுவின் மூன்று காலடிகள் குறிப்பதாகும். பெரும்பாலான பண்டைய, தற்கால ஆராய்ச்சியாளர்கள் இக்கருத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். ஆனால் இக்கருத்தில் ஒரு குறைபாடு தென்படுகிறது. இக்கருத்தின்படி ஸூரியனுடைய உயர்ந்த இடம் நடுப்பகலில் அவருடைய இரண்டாவது நிலை ஆகும். ஆனால் வேத ரிக்கின்படி விஷ்ணுவின் மூன்றாவது காலடி தான் உயர்ந்த நிலையாகச் சொல்லப்படுகிறது.

இரண்டாவது கருத்தின்படி, விஷ்ணுவின் மூன்று காலடிகள் ஸூரியன் மூவுலகுகளையும் சஞ்சரிப்பதைக் குறிப்பதாகும்.

மூன்றாவது, விஷ்ணுவின் மூன்று காலடிகள், தீ, மின்னல், ஸூரியன் ஆகிய ஒளியின் மூன்று நிலைகளைக் குறிப்பனவாகும். தீ பூமியிலும், மின்னல் பூமிக்கும் ஆகாயத்திற்கும் நடுவிலும், ஸூரியன் விண்வெளியிலும் காணப்படுவதால் மூன்று காலடிகளுக்கும் பொருத்தமாக உள்ளது. ஸூரியனுடைய உயர்ந்த நிலை விஷ்ணுவின் உயர்ந்த மூன்றாவது காலடியை ஒத்திருக்கிறது.

எதற்காக விஷ்ணு இம்மாதிரி மூன்று காலடிகளை எடுத்து வைத்தார்? இதற்கு விடையை ரிக் வேதத்தில் சில இடங்களில் காண்கிறோம். மக்கள் தங்கள் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் வாழ விஷ்ணு மூன்று காலடிகளை வைத்ததாக இவை கூறுகின்றன.

பிற்காலத்தில் இதிஹாஸ புராணங்களில் விஷ்ணு வாமனவதாரம் எடுத்து, மூன்று காலடி மண்ணை யாசித்து, பிறகு பிரம்மாண்டமாக வளர்ந்து, பூமியையும் வானத்தையும் இரண்டு காலடிகளாக அளந்து, மூன்றாவது காலடியை

மகாபலி சக்கரவர்த்தி தலை மேல் வைத்த வரலாறு ரி
வேதத்தின் இந்தக் குறிப்பிலிருந்து வளர்ந்திருக்கிறது. ரி
வேதத்தில் விஷ்ணுவின் குட்டையான உருவத்திற்குச் சான்
ஒன்றும் காணப்படவில்லை. ஆனால் பின் வந்த வே
நூல்களின் படி விஷ்ணு குட்டையான உருவம் எடுத்
மூன்று காலடிகள் வைத்து, பூமியைத் தந்திரமா
அஸுரர்களிடமிருந்து மீட்டு தேவர்களுக்குக் கொடுத்தா
என்ற வரலாறு காணப்படுகிறது. (சதபதப் பிராம்மணம்
2.5.5.; தைத்திரீய ஸம்ஹிதை II 1 3.2.) ரிக் வேதத்திற்கு
பிற்கால வாமனாவதாரத்திற்கும் இடையில் உள்ள நிலையா
இது அமைந்திருக்கிறது.

ரிக் வேதத்தில் பல இடங்களில் விஷ்ணுவின் புக
பாடப் பெறுகிறது. ஒரு ஸூக்தத்தில் ரிஷி கூறுகிறா
"இதுவரை பிறந்தவர்கள், இனிப் பிறக்கப் போகிறவர்கள்
இவர்களில் யாரும் விஷ்ணுவின் மஹிமையையு
உயர்வையும் அடைய முடியாது விஷ்ணுதான் இந்த உயர்ந்
வானத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறார். விஷ்ணுவிடத்தி
இனிமையான சாப்பாடும், பால் சுரக்கும் பசுக்களு
நிறைவாக உள்ளன. விஷ்ணு தான் ஸூரியன், விடிய
காலை, அக்கினி, ஆகிய மூவரையும் உண்டாக்கி, மக்கள்
வேள்வி புரிய உதவினார். விஷ்ணு எதிரிகளின் தந்திர
களையும் மாயைகளையும் சமாளித்து அவர்களைத்
தோற்கடித்தார். இந்திரனுடன் சேர்ந்த விஷ்ணு சம்பரன்
என்ற அசுரனின் தொண்ணூற்று ஒன்பது அரண்மனை
களையும் அழித்தார். (ரி.வே.VII. 99).

விஷ்ணுவிற்கும் இந்திரனுக்கும் உள்ள நட்பைப்பற்றி
ரிக் வேதம் பல இடங்களில் பேசுகிறது. மற்ற தெய்வங்
களுடன் சேர்ந்து, உயர்ந்த ஆளும் சக்தியான விஷ்ணு
இந்திரன் புகழைப் பாடியதாக ஒரு ரிக் சொல்லுகிறது.
(ரி.வே.VIII. 15.9). இந்திரன் விருத்திராஸுரன் என்ற கொடிய

அரக்கனைக் கொல்வதில் விஷ்ணு உதவியதாக ஒரு ரிக் கூறுகிறது. (VI. 20.2)

காட்டுப் பன்றி உருவத்தில் இருந்த விருந்திராஸுரனை இந்திரன் கொல்லும் பொழுது விஷ்ணு உதவியாதா. ரிக் வேதம் கூறுகிறது. (ரி.வே. I. 61.7; VIII. 66.10). பின் வந்த வேத நூலில் தண்ணீரிலிருந்து பூமியை மேலே தூக்கிய காட்டுப் பன்றி பிரஜாபதியின் ஓர் உருவம் என்று கூறுகிறது. (தைத்திரீய ஸம்ஹிதை VII. 1.5.1). இந்த வரலாறே பிற்காலத்தில் இதிஹாஸ புராணங்களில் விஷ்ணுவின் வராஹாவதாரமாக வளர்ந்தது.

இந்த இரண்டு அவதாரங்களைத் தவிர, இன்னும் இரண்டு அவதாரங்களுக்கான குறிப்புகள் சில வேத நூல் களில் காணலாம். சதபதப் பிராம்மணம் ஒரு மீன் மனுவை வெள்ளத்திலிருந்து காப்பாற்றியதாகக் கூறுகிறது. ( I. 8.1.2) இதே மீன் மகாபாரதத்தில் பிராஜாபதியின் ஒரு உருவமாக மாறி, புராணங்களில் விஷ்ணுவின் மத்ஸ்யாவதாரமாக ஆகிறது. சதபதப் பிராம்மணத்தில், பிரஜாபதி, தனக்குப் பிள்ளைகளை உண்டுபண்ணும் சமயத்தில், ஒரு ஆமையாக மாறித் தண்ணீரில் மிதந்து கொண்டிருந்தார். (VII. 5.1.5) தைத்திரீய ஆரண்யகத்திலும் இதைக்காணலாம். (I. 23.3) இது புராணங்களில் விஷ்ணுவின் அவதாரமாக மாறி, தேவர்களும் அஸுரர்களும் அமிர்தத்திற்காகக் கடலைக் கடையும் பொழுது, மத்தாக இருந்த மேரு மலையைத் தாங்க உதவியது.

சதபதப் பிராம்மணம் விஷ்ணுவின் தலை, அவருடைய வில்லாலேயே துண்டிக்கப்பட்டு, ஸூரியனாக ஆகிறது என்று, சொல்லுகிறது. (XIV. 1.1.) பின்னர் தெய்வங்களின் மருத்துவர்களான அசுவினி தேவதைகள் விஷ்ணுவிற்கு வேறு தலையைப் பொருத்தி விட்டார்கள் என்று வேதம் அறிவிக்கும்.

விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் இரண்டாவது பெயரா
இருக்கும் விஷ்ணு என்ற சொல்லிற்கு ஸ்ரீ ஆதிசங்
பகவத்பாதர் எழுதிய உரையில் 'எங்கும் வியபித்தவர்' என்
பொருள் கூறியிருக்கிறார். 'விச்' என்ற வடமொழி வினை
சொல்லிற்கு 'நுழைவது' என்று பொருள் ஆகும். (வி
நாதோர் பிரவேசனாத் – விஷ்ணு புராணம் 3 1
இவைகள் பிற்கால நூல்களானாலும் பொருளில் மாற்
இல்லை. எங்கும் நுழைபவர் என்ற பொருளிலிரு
விஷ்ணு என்ற சொல் ஸூரியனையே குறிக்கும் என
கருத்து சில பண்டிதர்களிடையே நிலவுகிறது. இத
ஆதாரமாக பின்வரும் வரியைக் குறிப்பிடுகிறார்க
'விஷ்ணு: நிருச்யதே ஸூர்ய: ஸர்வம் ஸர்வாந்தாச்
(சௌனகர்–பிருஹத் தேவதா II. 69). இதன் பொருள்
வருமாறு:

'எல்லாமாகவும் எல்லாவற்றிற் குள்ளுறைபவனாக
இருக்கும் ஸூரியனே தான் விஷ்ணு என்று சொல்லப்
கிறார்.'

* * *

## 2.8 விவஸ்வான்

அவன் இரவிற்கும் பகலுக்கும் ஒளி கொடுப்பத
(விவஸ்தே) அவனுக்கு விவஸ்வான் என்ற பெயர் வந்தத
சதபதப்பிராம்மணம் கூறுகிறது. (ச.பி.X. 5.2.4). விவஸ்வா
உதிக்கும் ஸூரியனைக் குறிப்பதாக ஒரு ஆராய்ச்சியா
கருதுகிறார்; பெரும்பாலோர் விவஸ்வான் பொதுவ
ஸூரியனைக் குறிப்பதாகவே எண்ணுகிறார்கள். ரி
வேதத்திற்கு முற்பட்ட காலத்தில் மக்கள் அவன
வழிபட்டார்கள்; ரிக் வேதத்தின் ஆரம்ப காலத்திலே
அவனுடைய வழிபாடு மிகக்குறைந்து விட்டது; முழு

வேத்திலும் ஒரு ஸூக்தம் கூட அவனைத் துதிப்பதாக அமைய வில்லையாதலாலும் ஒரு சில ரிக்குகளில் மட்டுமே அவன் பெயரைச் சொல்வதாலும் இக்கருத்து நிலவுகிறது. இன்னும் ஒரு ஆராய்ச்சியாளர் விவஸ்வானுக்கும் ஒளிக்கும் அதிகத் தொடர்பு இல்லை என்றும், அவன் தான் முதலாக வேள்விபுரிந்தவன் என்றும், மனித குலத்திற்கே முதலானவன் என்றும் கருதுகிறார். வேத காலத்திற்குப் பிறகு விவஸ்வான் ஒரு தனிக்கடவுளாக எந்த நூலிலும் காண வில்லை; ஸூரியனைக் குறிப்பதாகவே அவன் பெயரைப் பார்க்கிறோம்.

அசுவினி தேவதைகளும், யமனும் விவஸ்வானுடைய மகன்கள் என்று ரிக்வேதம் கூறுகிறது. வேதகாலத்திலேயே, விவஸ்வான் மனித குலத்தின் மூத்தவனான மனுவின் தகப்பனாக விளங்குகிறான்; இதைப் பிற்கால நூல்கள் அடிக்கடி குறிப்பிடுகின்றன.

விவஸ்வானுடைய திருமணத்தைப் பற்றி ஒரு சுவையான குறிப்பை ரிக்வேதத்தில் காணலாம். துவஷ்டா தன் மகள் ஸரண்யுவின் திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்கிறான். மணமகன் விவஸ்வான். இதைக் கேள்வியுற்ற மக்கள் எல்லோரும் திருமணத்தைப் பார்க்க வந்து குழுமியிருக்கிறார்கள். திருமணம் நடந்தேறியது. விவஸ்வான் மணமகளைத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்லும் பொழுது, அவள் காணாமல் போய் விடுகிறாள். சாகாவரம் பெற்ற அந்த மணப் பெண்ணைச்சாகும் தன்மை வாய்ந்த மக்களிடமிருந்து அவர்கள் மறைக்கிறார்கள். பிறகு அவள் மாதிரியே ஒரு பெண்ணை உருவகப்படுத்தி, அவளை விவஸ்வானுக்குக் கொடுத்தார்கள். சரண்யூ அசுவினி தேவதைகளைப் பெற்றெடுக்கிறாள். பிறகு அவ்விருவரையும், யமன், யமீ ஆகிய தன் இரு குழந்தைகளையும் துறந்து விட்டுப் போய் விடுகிறாள். ரிக் வேதம் கூறும் இக்கதை தெளிவாகவே இல்லை; உரை ஆசிரியர்களும்,

ஆராய்ச்சியாளர்களும் கூட இதை விரிவாக்கமு தெளிவாக்கமும் செய்யவில்லை. (ரி.வே.X. 17.1.2)

மேலே கூறப்பட்டது ரிக்வேதத்தில் உள்ள க இதையே சற்று மாறுதலாக சௌனகர் சொல்லுகிற 'துவஷ்டா தன் மகள் ஸரண்யூவை விவஸ்வானுக்கு ம புரிவிக்கிறார். ஸரண்யூ யமன், யமீ என்ற இரட்டையர்கள பெற்றாள். பிறகு அவள் தன் போலவே ஒரு பெண்ண உருவாக்கி (இதைத்தான் இக்காலத்தில் குளோனிங் clon என்று கூறுகிறார்களோ?) அவளிடம் யமனையும், யமீயை ஒப்படைத்து விட்டுத் தன்னை ஒரு பெண் குதிரைய மாற்றிக் கொண்டு, வெளியேறினாள். திரும்பிய விவஸ்வா இது தெரியாமல், மாற்றுப் பெண்ணுடன் குடித்தன நடத்தினாள். அவர்களுக்கு மனு என்ற மகன் பிறந்தா பிற்காலத்தில் அவன் ஒரு மகத்தான ராஜரிஷியாக ஆனா ஸரண்யூ பெண் குதிரையாகத் தன்னை மாற்றிக் கொண் போன விஷயம் தெரிய வந்ததும், விவஸ்வான், தன்ன ஒரு ஆண்குதிரையாக மாற்றிக்கொண்டு, ஸரண்யூவை தேடிச் சென்று, அவளைக் கண்டு கொண்டான். அவளு ஆண்குதிரை வடிவிலிருக்கும் தன் புருஷனைத் தெரிந் கொண்டு காமத்துடன் அவளை அணுகினான். அந்த தொடர்பில், இரட்டையர்கள் ஆன அசுவினி தேவதைக உண்டானார்கள்:" (பிருஹத் தேவதா VI. *162.163*, VII. *1.8*)

முதன்முதலாக அக்கினி பகவான் தன்னை மாத ஸ்வானுக்கும், விவஸ்வானுக்கும் காட்டிக் கொண்டதாக ஒ ரிக் கூறுகிறது; அச்சமயம் விண்ணும் மண்ணும் நடுங்கின அக்கினி பகவான் அந்த அதிர்ச்சியைத் தாங்கிக் கொண்டா (ரி.வே.I. *31.3*)

ஒரு ரிக் கூறுகிறது: "பத்து விரல்களுடன் கூடிய இ கைகளையும் கூப்பி விவஸ்வான் இந்திரனை வேண்டுகிறான்; இந்திரனும் விண்ணிலிருந்து மூன்

சுத்திகளுடன் கூடிய தண்ணீர்க் குடத்தைக் கவிழ்த்தான். (ரி.வே.VII. 61.8). இது மழை பெய்வதைக் குறிக்கிறது; மூன்று சுத்திகள் என்பது இடி, மின்னல், புயலுடன் கூடிய மழையாக இருக்கலாம்.

ஸோமனுடன் விவஸ்வானுக்கு நெருங்கிய தொடர்பு உள்ளது. ஸோமன் விவஸ்வானுடன் சேர்ந்து வசிக்கிறான். விவஸ்வானுடைய பெண்கள் (விரல்கள்) ஸோமனைக் கழுவுகின்றன. விவஸ்வானுடைய துதிகள் சிவப்பு நிறமுள்ள ஸோம ரசத்தை ஓடும்படி செய்கின்றன. அந்த ஏழு சகோதரிகளும் (ஆறுகளும்), தங்களுடைய துதிகளால், ஸோமனை விவஸ்வானுடைய பாதையில் போகும்படி செய்கிறார்கள். விவஸ்வானுடைய அருளாசியைப் பெற்று, ஸோமரசம் சல்லடை மூலமாக வெளிவந்து, காலை ஸூரியனுடைய வெளிச்சம் போலப் பிரகாசமாக விளங்கு கிறது.

'மனத்தை விட வேகமாகப் போகும் அசுவினி தேவதைகளின் தேரைப் பூட்டியவுடன், விடியற்காலை தென்படுகிறது; விவஸ்வான் சுபமான இரவு பகலை உண்டாக்குகிறான்' என்று ஒரு ரிக் விவஸ்வானுக்கு அசுவினி தேவதைகளுடன் உள்ள தொடர்பைக் கூறுகிறது. (ரி.வே.X. 39.12)

'கூர்மையாகத் தயாரிக்கப்பட்ட விவஸ்வானுடைய ஆயுதங்கள் எங்களை முதுமைக்கு முன் அழிக்காமல் இருக்கட்டும்' என்று ஒரு ரிக் வேண்டுகிறது. (ரி.வே.VIII. 56.20)

ரிக் வேதத்தில் சில இடங்களில் விவஸ்வான் என்ற சொல் 'ஒளிவீசும்' என்ற பொருளில் அக்கினியுடனும், உஷஸுடனும் சேர்ந்து காணப்படுகிறது.

* * *

## 2.9 ஆதித்தியர்கள்

ஒரு குழுவாக எண்ணப்பெறும் ஆதித்தியர்க மொத்தம் எத்தனை தெய்வங்கள் என்பது வேத நூல்களி தெளிவாகக் காணவில்லை. ஆதித்தியர்களுக்கான ஓ ஸூக்தத்தில் ரிக் வேதம் முதல் ரிக்கிலேயே ஆ பெயர்களைக் குறிப்பிடுகிறது. இவர்கள் மித்திரன், அரியம பகன், வருணன், தக்ஷன், மற்றும் அம்சன் ஆகும் (ரி.வே 27.1). ஆனால், பெயர்களைக் குறிப்பிடாமல், ரிக் வேத பத்தாவது மண்டலத்தில், ஓரிடத்தில் ஆதித்தியர்க மொத்தம் ஏழு என்றும், இன்னுமோரிடத்தில் எட்டு என்று பேசுகிறது. முதன் முதலாக சதபத பிராம்மணத்தி ஆதித்தியர்கள் மொத்தம் பன்னிரண்டு என்பதை காண்கிறோம். பிற்கால இதிஹாஸ—புராண நூல்கள், எல்ல இடங்களிலும், ஆதித்தியர்கள் மொத்தம் பன்னிரண் என்றே சொல்லுகின்றன.

மேலே கூறிய ஆறு தெய்வங்களைத் தவி மார்த்தாண்டன், தாதா, இந்திரன், விவஸ்வான், ஸூரியன் ஸவிதா முதலிய தெய்வங்களை சில வேத நூல்கள் சி சில இடங்களில் ஆதித்தியர்களுடைய குழுவி சேர்க்கின்றன.

இது சம்பந்தமாக ரிக்வேதம் பேசுகிறது: 'அதி தன்னுடைய உடம்பிலிருந்து எட்டு மகன்களைப் பெற்றா அவர்களில் மார்த்தாண்டனை மட்டும் கீழே தள்ளி விட் மிகுந்த ஏழு மகன்களுடன், அவள் தெய்வங்களைப் பார்க் சென்றாள். பிறகு அங்கு மார்த்தான்டனையும் கொண் வந்தாள்; அவன் உயிர் பெற்றெழுந்து மறுபடியும் மரித்தா (ரி.வே.X. 72.8.9) இது அஸ்தமிக்கும் ஸூரியனை குறிப்பதாகும் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

ரிக் வேதம் ஒரே ஒரு ஆதித்தியனைப் பேசும் பொழு அது வருணனாக அமைகிறது; வருணன் தான் ஆதித்தி

களுக்குத் தலைவனாக விளங்குகிறான். இரண்டு ஆதித்தியர் களைக் குறிப்பிட்டால் அவர்கள் வருணனும் மித்திரனும் ஆவார்கள். மூன்றாக இருந்தால் இவர்களுடன் அரியமன் சேருகிறான், ஐந்தாக இருந்தால் இவர்களுடன் ஸவிதாவும், பகனும் சேருகிறார்கள்.

ஆதித்தியர்கள் என்று மொத்தமாகச் சொன்னால், அவர்கள் விண்ணிலிருந்து வெளிச்சத்தைக் கொடுக்கும் தெய்வங்கள் ஆவர்; இங்கே தனித்தனியாக ஸூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், உஷஸ் என்று குறிப்பிடவில்லை.

ரிக்வேதத்தில் ஆதித்தியர்களைப் பற்றி ஒரு ஸூக்தம் கூறுகிறது: 'தெய்வங்களான ஆதித்தியர்கள் பிரும்மாண்ட மானவர்களாகவும், கம்பீரமானவர்களாகவும், நம்பக் கூடிய வர்களாகவும், அனேக கண்களைப் படைத்தவர்களாகவும் இருக்கிறார்கள்; அவர்கள் தீயவர்களை ஏமாற்றுகிறார்கள், மனிதர்களுடைய மனத்திற்குள் நோக்கி, நல்லது கெட்டதைப் பார்க்கிறார்கள்; வெகு தொலைவில் இருப்பது கூட அவர் களுக்கு அருகில் இருப்பது போலத் தென்படுகிறது. அசைபவை, அசையாதவை ஆகிய எல்லாவற்றையும் தாங்கும் தெய்வங்களான ஆதித்தியர்கள் எல்லா ஜீவராசிகளையும் ரக்ஷிக்கிறார்கள். நீதி நெறி முறைகளுக்கு உட்பட்டு அவர்கள் மக்களிடமிருந்து கடன்களைத் திரும்பப் பெறுகிறார்கள். (ரி.வே. II. *27 3.4.*)

இன்னுமொரு ரிக் கூறுகிறது: 'தெய்வங்களே! நீங்கள் எளியோர் பக்கம் இருக்கிறீர்கள்; நீங்கள் நல்லோரையும் தீயோரையும் நன்கு பாகுபாடு செய்கிறீர்கள்!' (ரி.வே.VIII. *18.15*)

ஏமாற்றுபவர்களையும், பொய் பேசுபவர்களையும் ஆதித்தியர்கள் தண்டிக்கிறார்கள். செய்த பாவங்களை மன்னிக்கும்படி அவர்களை மக்கள் வேண்டுகிறார்கள். அவர்கள் எதிரிகளுக்கு விலங்குகளைப் பூட்டுகிறார்கள்.

ஒரு ரிக் சொல்லுகிறது: 'தெய்வங்களான ஓ ஆதித்தி களே! துன்பங்களைத் துரத்துவதில் நீங்கள் வல்லவர்க பறவைகள் தங்களுடைய குஞ்சுகள் மேல் காக்கும் இறக் களை விரிப்பது போல, நீங்கள் எங்கள் மேல் உங்களுடை பாதுகாப்பைப் பரப்புங்கள்! (ரி.வே.VIII. 47.2). மற்றுமொ ரிக்: 'தேர்களை ஓட்டுபவர்கள் மோசமான பாதைகளை தவிர்ப்பது போல, துயரங்கள் எங்களை விட்டு விலகட்டு (ரி.வே.VIII. 47.5). மற்றும் ஒரு ரிக் பேசுகிறது: ' ஆதித்தியர்களே! உங்களை நம்பி வாழும் தாங்கள் போரிடு கவசம் தரித்த மனிதர்களை ஒத்திருக்கிறோம்; நீங்க எங்களைப் பெரிய தவறுகளிலிருந்தும், சிறி பிழைகளிலிருந்தும் காப்பாற்றுகிறீர்கள்! (ரி.வே.VIII. 47.8)

மக்கள் ஆதித்தியர்களிடமிருந்து பலவிதமான வரங்களைக் கோருகிறார்கள்: எளிதில் தகர்க்க முடியாத வீடுகளையும், நீண்ட ஆயுளையும், உயர்ந்த பதவியையும் எல்லாச் செல்வங்களையும், சபைகளில் புகழப் படுவதையும் செய்த பாவங்களுக்கு மன்னிப்பையும், அவர்கள் வேண்டுகிறார்கள். (ரி.வே.II. 27). மூன்று வேலிகள் உள்ளதும் எதிரிகளால் அணுகமுடியாததும், புகழத்தக்கதும், மக்கள் நிரம்பி உள்ளதும் ஆன வீட்டை ஒரு ரிக்கில் வேண்டுகிறார்கள். (ரி.வே.VIII. 18.21). 'கடும் பசியுள்ள ஓநாய்களின் வாயிலிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்' என்று ஒரு ரிக் வேண்டுகிறது. (ரி.வே.VIII. 56.14)

ரிக் வேதம் ஆதித்தியர்களைப் பிரகாச முள்ளவர் களாகவும், பொன்நிற முள்ளவர்கள் என்றும், பல கண்களை உடையவர்களாகவும், எப்பொழுதும் கண்கொட்டாமலும் தூங்காமலும் விழித்திருப்பவர்களாகவும் வருணிக்கிறது. மேலும் அவர்களைச் சக்தி வாய்ந்த அரசர்களாகவும், வெல்ல முடியாதவர்களாகவும் நீதி நெறிமுறை களுக்குட்பட்டவர்களாகவும், குற்ற மற்றவர்களாகவும், பாவமே செய்யாதவர்களாகவும், புனிதமானவர்களாகவும் வேதம் பேசுகிறது.

இந்தக் குழுவிலுள்ள முக்கியமான தெய்வங்களைத் தனித்தனியாகப் பார்த்து விட்டோம். மற்ற சிறிய தெய்வங்களை இங்கு கவனிப்போம்.

ரிக் வேதம் அரியமனின் பெயரை சுமார் 100 முறை கூறுகிறது, ஆனாலும் அவனுக்காக ஒரு சிறப்புக் குணத்தையும் வேதம் எங்கும் கூறவில்லை பெரும்பாலான இடங்களில் அவன் மீத்திரனுடனும் வருணனுடனும் சேர்ந்தே இருக்கிறான். சில இடங்களில் தோழன் என்ற பொருள் படும்படி ரிக் அமைகிறது. ஆக, தோழன் என்ற பொருள் படும் முக்கியமான ஆதித்தியனான மித்திரனுக்கும் அரியமனுக்கும் வேறுபாடே காண முடியவில்லை.

ரிக் வேதத்தில் பகனைப் பற்றிய ஒரே ஸூக்தம் பேசுகிறது; 'நாங்கள் வலிமை உள்ளவனும், விரைவில் வெல்லுபவனும், எல்லாவற்றையும் தாங்குபவனும் அதிதியின் மகனுமான பகனை அழைக்கிறோம்; எளியவர் களும், சக்தி வாய்ந்தவர்களும், ஏன், அரசனும் கூட, தங்களுக்கு பகனைக் கொடுங்கள் என்று கேட்கிறார்கள். ஓ வழிகாட்டியான பகனே! எங்களுக்கு செல்வங்களையும், ஆடுமாடுகளையும், குதிரைகளையும், வீரர்களையும் கொடு! எங்களைக் காலையிலும், நடுப்பகலிலும், மாலையிலும், தெய்வங்களின் அன்பினால், மகிழ்ச்சியாக இருக்க அருள்வாயாக. வழிபடுவோருக்கு ஆனந்தத்தை அளிக்கட்டும்; ஓ பகனே! நீ எங்கள் தலைவனாக இருப்பாயாக. வலிமையுள்ள குதிரைகள் ஒரு தேரை இழுப்பது போல, எல்லா விடியற்காலைகளும், பொக்கிஷங்களைக் கண்டு பிடிக்கும் பகனை இங்கு கொண்டு வரட்டும்! (ரி.வே. VIII. 41)

பகன் என்ற சொல்லிற்கு 'கொடுப்பவர்' என்ற பொருளாகும். ரிக் வேதத்தில் பகன் என்ற சொல் தெய்வத்தைக் குறிப்பது மட்டுமல்லாமல், சில இடங்களில் செல்வத்தையும் குறிக்கிறது.

உஷஸ் பகனுடைய சகோதரி. பகன் முற்பகனுக்கு அதிபதி என்று யாஸ்கர் கூறுகிறார். (நிருக்தம் XII. 13)

அம்சன் என்ற சொல் பகன் என்ற சொல்லைப் போலவே 'பங்கு' என்றும் 'பிரித்துக் கொடுப்பவர்' என்றும் பொருள்படுகிறது. ரிக்வேதத்தில் வெகு குறைவாகவே சொல்லப்படும் இந்தத் தெய்வத்திற்கு ஒரு தனிச் சிறப்புக் காணவில்லை.

ரிக் வேதம் தக்ஷனைத் தெய்வமாக ஒரு சில இடங்களில் மட்டும் பேசுகிறது. ஆனால் அதை முக்கியமாக அக்கினிக்கும் ஸோமனுக்கும், உரிச் சொல்லாக, வேதம் உபயோக்கிறது. உரிச்சொல்லாக இருக்கும் பொழுது அதன் பொருள் 'தேர்ச்சி பெற்ற, நுட்பமான வேளைத்திறன் படைத்த, சக்தி வாய்ந்த, கூர்மையான புத்தி உள்ள,' என்றெல்லாம் கொள்ளலாம். தக்ஷன் தெய்வமாக விளங்கும் பொழுது இதே குணங்களைப் படைத்தவன் என்று சொல்லலாம்.

ஒரு ரிக் பேசுகிறது: 'அதிதி தக்ஷனைப் பெற்றான்; அதிதி தக்ஷனிடமிருந்து பிறந்தான்.' (ரி.வே.X. 72.4). இதைப் படிக்கும் நம் மனதில் வியப்பும் கேள்வியும் எழு முன்னர், வேத நூல்களின் சொல்லியல் வல்லுனரான (etymologist) யாஸ்கர், தன் நூலான நிருக்தத்தில், எல்லோருக்கும் தோன்றும் கேள்வியைக் கிளப்புகிறார்: அவர் வினவுகிறார்: 'இது எப்படி முடியும்?' ஒருக்கால் ஒரு ஜன்மத்தில் அதிதி தக்ஷனுக்குத் தாயாகவும் வேறு ஒரு ஜன்மத்தில் அதிதி தக்ஷனுக்கு மகளாகவும் இருந்திருக்கலாம் என்ற, முழுவதும் திருப்தி அளிக்காத, விளக்கத்தைத் தருகிறார் யாஸ்கர். தன்னுடைய உரையில் யாஸ்கர் கூறியதை ஸாயனர் அப்படியே சொல்லி விட்டு அத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறார். வேதத்தில் பல இடங்களைப் பேல, இதுவும் ஒரு புரியாத புதிராக விளங்குகிறது.

ஒரு ரிக் கூறுகிறது: 'இருப்பவைகளும், இல்லாதவைகளும், மேலுலகத்திலுள்ள தெய்வங்களும், அதிதியின் கர்ப்பத்தில், தக்ஷன் பிறந்த இடத்தில், இருந்தார்கள்' (ரி.வே. X. 5.7). இதுவும் ஒரு புதிராக இருக்கிறது. இதிலிருந்து அதிதியும் தக்ஷனும் உலகுக் கெல்லாம் பெற்றோர்கள் என்று சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

சதபத பிராம்மணம் தக்ஷனே தான் பிரஜாபதி என்று கூறுகிறது. (ச.பி.II. 4.4.2.)

* * *

## 2.10 உஷஸ்

'வேதக் கவிதையின் மிக நளினமான படைப்பு உஷஸ், மற்ற இலக்கியங்களிலும், வேறு எந்த மத வருணனைப் படைப்பும், இந்த அளவு மனதைக் கவரும் ரம்மியம் உள்ளதாய் அமையவில்லை. மத குருமார்களின் ஊகங்களால், அவளுடைய உருவத்தின் பிரகாரசம் மங்குவதில்லை; வேள்விகளைப் பற்றிய குறிப்புகளால் உருவகமும் கெடுவதில்லை.' இவ்வாறாக வேதப்படைப்பான உஷஸிற்கு உயர்ந்த புகழை அள்ளி வீசுகிறார் மேல் நாட்டு வேதநூல் விற்பன்னர் ஏ.ஏ. மாக்டானல்.

---

* *Ushas is the most graceful creation of vedic poetry and there is no more charming figure in the descriptive religious lyrics of any other literature. The brightness of her form has not been dimmed by priestly speculation nor has the imagery, as a rule, has been marred by reference to sacrifices-Vedic Mythology. (A.A.Macdonnel. P.46)*

பளபளவெனப் பொழுது விடியும் அதிகாலை நேரத்தை நளின நங்கையாக உருவகப்படுத்தி, அவளைப் பற்றிய வருணனைகளில் உள்ளத்தைப் பறிகொடுத்த வேதரிஷிகள் இந்த ரிக்குகளில் கற்பனையின் உச்சியை எட்டிப் பிடித்திருக்கிறார்கள், அவைகளில் சிலவற்றைப் பார்ப்போம்.

'ஒரு நாட்டியக் காரியைப் போல, அவள் வேலைப்பாடுகளுடன் கூடிய உடுப்புகளை அணிகிறாள்; ஒரு பசுமாடு தன்னுடைய மடியை விருப்பத்துடன் கொடுப்பது போல, அவள் தன் மார்பகங்களைக் காண்பிக்கிறாள். பசுமாடுகள் தங்களுடைய தொழுவத்தைத் திறப்பது போல விடியற்காலை இருளைத் திறக்கிறது.' (ரி.வே.I. *92.4*)

'நீ நன்றாக இருப்பதை நாங்கள் பார்க்கிறோம்; உன்னுடைய ஒளி வெகுவாகப் பிரகாசிக்கிறது: உன் கிரணங்களும் உன் சௌந்தர்யங்களும் விண்ணுக்குப் பறந்து செல்கின்றன. தெய்வமான காலை வேளையாகிய நீ, நன்கு அலங்கரித்துக்கொண்டு, ராஜகம்பீரமாய்ப் பிரகாசித்துக் கொண்டு, உன்னுடைய மார்பகங்களைக் காண்பிக்கிறாய்.' (ரி.வே.VI. *64.2*)

'தன்னுடைய தாயால் நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்ட ஒரு அழகான மணப் பெண்ணைப் போல நீ உன்னுடைய உருவத்தை, மற்றவர்கள் பார்க்கும்படியாகக் காண்பிக்கிறாய். நல்லாசி பெற்றவளாய் இருக்கிறாய்; ஓ விடியற் காலையே, இன்னும் அகண்டு ஒளி வீசுவாயாக; வேறு எந்த விடியற்காலையும் நீ அடைந்ததை எட்ட வில்லை! (ரி.வே.I. *123.11*)

'விண்ணின் மகளான அவள், வெளிச்சத்தினாலான ஆடைகளை உடுத்தி, கிழக்குத் திசையில் தோன்றுகிறாள்; விண்ணிள் எல்லா திசைகளையும் நன்கு அறிந்து, அவள் சீரான பாதையைப் பின்பற்றுகிறாள்.' (ரி.வே.I. *124.3*)

'பார்ப்பதற்கு அகண்டமான அவள், உறவினர்களையோ, தெரியாதவர்களையோ, தன்னுடைய வெளிச்சத்திலிருந்து தடுப்பதில்லை. அப்பழுக்கில்லாத தன்னுடைய உருவத்தில் பெருமையுடன், அவள், மிகுந்த ஒளியுடன் பிரகாசித்துக் கொண்டு, உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்ற வேறுபாடில்லாமல் எல்லோர்க்கும், தன் ஒளியை வழங்குகிறாள்! (ரி.வே.I. *124.6*)

'குளித்தவுடன் பிரகாசிக்கும் மங்கையைப் போல, அவள் எல்லோரும் தன்னை நன்கு பார்ப்பதற்காக, நிமிர்ந்து நிற்கிறாள். தீமைகளையும் இருளையும் போக்கி, விண்ணின் குழந்தையான விடியற்காலை, நம்மிடையே, ஒளியுடன், வந்திருக்கிறாள். ஒரு கற்புள்ள மங்கை போல, விண்ணின் மகள், ஆண்களுக்கு எதிரில், நெற்றியைக் கீழ்ப்பக்கமாக சாய்த்துக் குனிகிறாள். தன்னை வழிபடுபவர்களுக்கு வேண்டிய வரங்களை அளித்து, அந்தப் பெண், பழைய நாட்களைப் போல, திரும்பவும் பகல் வெளிச்சத்தைக் கொணர்கிறாள்.' (ரி.வே.V. *80.5.6*).

'அவள் பழமையானவள் தான்; ஆனாலும் அவள் திரும்பத்திரும்பப் புதிதாகப் பிறக்கிறாள்; அதே ஆடையை உடுத்தித் தன் அழகைப் பெருக்கிக் கொள்ளுகிறாள். கை தேர்ந்த வேடன் ஒருவன் பறவைகளைத் துண்டம் துண்டாக வெட்டுவது போல, இந்தத் தெய்வம் மனிதர்களுடைய ஆயுளைச் சிறிது சிறிதாகக் குறைக்கிறது' (ரி.வே.I. *92.10*)

'இது வரை எல்லா நாட்களும் தெய்வமான உஷஸ் பிரகாசித்துக் கொண்டிருந்தாள்; இன்னும் செல்வங்களுடன் கூட ஒளி வீசுகிறாள். இதே மாதிரி வரும் நாட்களிலும் அவள் பிரகாசிப்பாள்; சாகாவரம் பெற்ற அவள், கிழத்தன்மை அடையாமல், தன் சொந்த பலத்துடன், நகருகிறாள்.' (I. *113.13*)

'.....கடந்துபோன எண்ணிலங்காத காலைகளின் கடைசியாகவும், இனிவரும் ஒளியுள்ள காலைகளின் முதலாகவும், உஷஸ் உதயமாகிறாள்.' (ரி.வே.I. 113.15)

'ஒரு நல்ல மூதாட்டியைப் போல, உஷஸ் எல்லாவற்றையும் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டு வருகிறாள். எல்லா ஜீவராசிகளையும் அவள் எழுப்பி, காலுள்ளவைகளை நகரும் படியும், பறவைகளைப் பறக்கும் படியும் செய்கிறாள்.' (ரி.வே.I. 48.5)

'சிறந்தவளே! நீ உதயமாகும் பொழுது எல்லா உயிர் வாழும் ஜந்துக்களின் மூச்சுக்காற்றும், உயிரும் உன்னுள் அடங்கி இருக்கிறது, ......' (ரி.வே.I. 48.10)

'ஆகாயத்தின் விளிம்பில் அவள் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கிறாள்; தெய்வமான அவள் இருளின் திரையைத் தூக்கி எறிந்துவிட்டாள். உலகத்தையெல்லாம் எழுப்பிக் கொண்டு, அவள் சிவப்பு நிறக்குதிரைகள் பூட்டிய நல்ல தோர் தேரில் வருகிறாள்.' (ரி.வே.I. 113.4)

'வேள்வித் தீயின் சுடர்கள், பிரகாசமாக எரிந்து கொண்டு, மேலே எழுகின்றன; அவைகளுடன், நாம் மகிழ்ச்சியாக ஓதும் பாசுரங்களும் புனிதமான எண்ணங்களும் மேலே செல்லட்டும். மிகுந்த பிரகாரசமாக இருக்கும் காலை வேளைகள் இருள் மூடியிருந்த நேர்த்தியான செல்வங்களைக் காண்பிக்கட்டும்.' (ரி.வே.I. 123.6)

'விண்ணின் எல்லைகளைக் கண்டுபிடித்து, அவள் உதயமாகிறாள்; அவள் தன் சகோதரியை வெகு தூரத்திற்குத் துரத்தி விடுகிறாள். மனிதர்களின் ஆயுளைக் குறைத்துக் கொண்டு, அவள் தன் காதலனின் ஒளியுடன் பிரகாசிக்கிறாள்' (ரி.வே.I. 92.11) இங்கு இரவைச் சகோதரியாகவும் சூரியனைக் காதலனாகவும் கவி குறிப்பிடுகிறார்.

'உணவு உண்பதற்காக அவிழ்த்து விடப்பட்ட ஆடு மாடுகளின் கூட்டங்களைப் போல இருக்கும் உன்னுடைய புனிதமான கிரணங்களை எங்களுடைய கண்கள் பார்க்கின்றன. உஷஸ் அகன்ற வெட்ட வெளியைப் பூராவும் நிரப்பி விட்டாள்.' (ரி.வே.IV. 52.5)

'மாடுகள் மந்தையாகப் போவது போலவும், ஆற்று வெள்ளம் தண்ணீரை உருட்டிச் செல்வது போலவும் இருக்கும் தன்னுடைய கிரணங்களைப் பரப்பிக் கொண்டு, ஒளி வீசும், புனிதமான உஷஸ் பிரகாசிக்கிறாள். ஒரு பொழுதும் தெய்வங்களின் ஆணைகளை மீறாத அவளை ஸூரிய கிரணங்களுடன் நாம் பார்க்கிறோம்.' (ரி.வே.I. 92.12)

'வெளிச்சத்தின் சிவந்த கிரணங்கள் வேகமாக மேலே கிளம்பின; சிவந்த பசுமாடுகளைத் தேரில் பூட்டுவதற்குத் தயாராக வைத்திருக்கிறார்கள். முன் போலவே உஷஸ் எல்லாவற்றையும் தெளிவாகப் பார்க்கும் படி செய்திருக்கிறாள்; சிவந்த நிறமுள்ள அவைகள் பிரகாரமான ஒளியை அடைந்திருக்கின்றன! (I. 92.2). இங்கே பசுமாடுகள் காலையின் சிவந்த மேகங்களைக் குறிக்கின்றன.

'எல்லாச் செல்வங்களையும் பெற்றவனே! வேள்விகளில் தாராளமாக ஆஹுதிகளைக் கொடுப்பவர்களை எழுப்பிவிடு; கொடுக்காதவர்கள், எழுப்பப்படாமல், தூங்கட்டும். உன்னை வணங்குபவர்கள் மேல் ஒளிவீசுவாயாக. மகிழ்ச்சியுடன் பாசுரம் பாடுபவனின் ஆயுளின் ஒரு நாளை எடுத்துக் கொண்டே, நன்றாகப் பிரகாசி. (ரி.வே.I. 124.10)

சில சமயங்களில் மனிதர்களே முதலில் எழுந்து உஷஸை வரவேற்கிறார்கள்! 'வஸிஷ்ட குலத்தைச் சேர்ந்த வேதியர்கள், தங்களுடைய பாசுரங்களுடனும், புகழ்ச்சிகளுடனும், உஷஸை வரவேற்க முதலில் விழித்திருக்கிறார்கள். உஷஸ், சுற்றிலுமுள்ள எல்லா இடங்களையும் பிரித்து, அங்கு

உள்ள எல்லா ஜீவராசிகளையும் காண்பிக்கிறாள்.' (ரி. VII.80.1)

'விண்ணின் மகளே! நன்றாக ஒளிவீசு! உன் பணி புரிவதில் தாமதம் செய்யாதே. உயர்குலத்திலுதித்தவ குதிரைகளுடன் குதூகலமாக வருபவளே! ஸூரிய தன்னுடைய கொடூரமான சூட்டினால் உன்னை திருடனையோ, எதிரியையோ போல, எரிக்கா இருக்கட்டும்.' (ரி.வே.V.79.9)

கெட்ட கனவுகளைத் தடுக்கிறார்கள் உஷஸ் எ தேவி. அவள் பேய் பிசாசுகளை விரட்டுகிறாள். அ சுவர்க்கத்தின் கதவுகளைத் திறக்கிறாள். ஒவ்வொரு நா குறிப்பிட்ட இடத்தில் அவள் உதயமாகிறாள். நீதிநெறி ஆணைகளையும், தெய்வங்களின் கட்டளைகளையும் அ ஒரு பொழுதும் மீறுவதில்லை. போக வேண்டிய வழி அவள் நன்கு அறிவாளாகையால் அவள் எப்பொழு வழி தவறியதில்லை. வழிபடுவோரை எழுப்பி, வேள் தீயை மூட்டச்செய்து அவள் தெய்வங்களுக்கு உதவுகி ஸோமரசம் குடிப்பதற்கு எல்லாத் தெய்வங்களையும் அழை வரும் படி உஷஸை ஒரு ரிக் வேண்டுகிறது. இன்னும் ரிக் எல்லாத் தெய்வங்களும் உஷஸுடன் விழித் கொள்வதாகக் கூறுகிறது.

ஜாஜ்வல்மாக ஒளி வீசும், நன்கு அலங்கரிக்கப்ப பிரம்மாண்டமான தேரில் அவள் வருகிறாள். சி குதிரைகள் அவள் தேரை இழுக்கின்றன; அ குதிரைகளை எளிதில் ஓட்ட முடிகிறது. சிவப்பு நிறமு மாடுகள் அவனுடைய தேரை இழுப்பதாகவும் சில ரிக் கூறுகின்றன. குதிரைகளும் மாடுகளும் காலையின் சி கிரணங்களைக் குறிப்பதாக இருக்கலாம்; ஆன பொதுவாக மாடுகள் காலையின் சிவந்த மேகங்கள குறிப்பதாக உரையாசிரியர்கள் கூறுகிறார்கள்.

'தெய்வங்களின் கண்ணைத் தான் ஏற்று, மங்களமான அந்தப் பெண், வெண்மையாவும் அழகாகவும் உள்ள அவளுடைய குதிரையைக் கூட்டி வருகிறாள்; தன்னுடைய கிரணங்களால் பிரபலமாகி, வியக்கத்தக்க செல்வங்களுடன் அவள், உலகெல்லாம் நன்கு காணும்படி, பிரகாசிக்கிறாள்.' (ரி.வே.VII. 77.3) இங்கு தெய்வங்களின் கண்ணும் வெண்மையான குதிரையும் ஸூரியனைக் குறிக்கின்றன.

'ஒரு வாலிபன் பருவ மங்கையைப் பின்பற்றுவது போல, ஸூரியன் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கும் தெய்வமான உஷஸைப் பின் தொடர்கிறான்; அப்பொழுது, தெய்வங்களைத் தொழும் மனிதன், நல்ல செல்வத்திற்காக, மங்களமான தெய்வத்தின் முன் பல தலைமுறைகளாக ஏற்படுத்தப்பட்ட சடங்குகளைப் புரிகிறான்.' (ரி.வே.I. 115.2)

அவள் ஸூரியனின் மனைவி. ஒரு ரிக், அவள் ஸூரியனையும், அக்கியையும், வேள்வியையும் உண்டாக்கியதாகக் கூறுகிறது. ஆதித்தியர்களில் ஒருவனான பகனுக்கு அவள் சகோதரி; வருணனுடைய உறவினர்; இரவின் சகோதரி. பல இடங்களில் அவளை விண்ணின் மகள் எனக் குறிப்பிடுகிறார்கள். 

'விண்ணில் பிறந்த அவள் வெட்கத்தில் முகம் சிவக்கிறாள்; சட்ட திட்டங்கள் கட்டளையின்படி அவள் ராஜகம்பீரத்துடன் உதயமாகிறாள். வெறுக்கத்தக்க இருளையும், தீயோர்களையும் வெளிக் கொணர்ந்து; அங்கிரஸ் வம்சத்தவர்களின் உத்தம குணங்களைக் கொண்டவளாய், அவள் பாதைகளைத் திறந்து விடுகிறாள்.' (ரி.வே.VII. 75.1). அங்கிரஸ் வம்ச மகரிஷிகள் தான் முதன் முதலில் வேள்வியைப் புரிந்தார்கள் என்று வேத நூல்கள் கூறுகின்றன; அங்கிரஸ் வம்சத்தின் பல மகரிஷிகள் வேத மந்திரங்களுக்கு ரிஷிகளாக விளங்குகிறார்கள். 'பாதைகளைத் திறந்து விடுகிறாள்' என்றால் மக்கள்

நடமாடுவதற்காக பாதைகளுக்கு வெளிச்சம் கொடுக்கிற
என்று பொருளாகும்.

விடியற்காலையில் வேள்வித் தீ தவறா மூட்டப்படுவதால், உஷஸை அக்கினியுடன் சேர்த் அடிக்கடி வேதம் பேசுகிறது. 'வேள்வித்தீயை மூட் பொழுது, உஷஸ் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கிறா அச்சமயம் ஸூரியனும் உதயமாகிறான். இருவரும் வெ தூரத்திற்கு ஒளியைப் பரப்புகிறார்கள். தெய்வமான ஸவி ஒவ்வொரு நான்கு கால் பிராணியையும், ஒவ்வொ இருகால்கள் உள்ள மனிதனையும் சுறுசுறுப்பாக இய அனுப்புகிறாள்.' (ரி.வே. I. 124.1) 'கிழக்கிலிருக்கும் இந்த இ பெண் நம்மேல் ஒளியை வீசுகிறாள்; பிரகாசமான சிவ எருதுகளைப் பூட்டுகிறாள். அவள் ஒளிக் கிரணங்கள வீசுவாள்; வெளிச்சம் விரைவாக இங்குவரும்; ஒவ்வொ வீட்டிலும் அக்கினியை மூட்டியிருப்பார்கள்.' (ரி.வே.I. 124.

'ஓ உஷஸே! நீ அக்கினியை மூட்டும்படி செய் படைக்கப்பட்ட எல்லா ஜீவராசிகளையும் அடையாள காட்டுகிறாய். மனிதர்களைத் தட்டி எழுப்பி, அவர்களை தெய்வ வழிபாடு செய்யத் தூண்டுகிறாய்; இதனால் தெய்வங்களுக்கு ஒரு உயர்ந்த சேவையைப் புரிகிறாய்.' (ரி.வே. I. 113.9)

அக்கினியும், ஸூரியனைப் போலவே, உஷஸி காதலன் என்று வேதம் கூறுகிறது. 'பிரகாசமாகவு நேர்த்தியாகவும் உள்ள உஷஸின் காதலனான அக்கி விண்ணையும், மண்ணையும் மேலுலக வெளிச்சத்தா நிரப்புகிறான். பிறந்தவுடன், அவன் வலிமையா விண்ணையும் மண்ணையும் சூழ்ந்து கொள்ளுகிறான் தெய்வங்களுக்கு தகப்பனாக இருந்து கொண்டு அதே சமய அவன் அவர்களுடைய மகனாகவும் இருக்கிறான் (ரி.வே.I. 69.1)

அதிகாலையின் தெய்வங்களான இரு அசுவினி தேவதைகளுடன் உஷஸ் தொடர்பு கொள்வது இயற்கையே. அவர்கள் அவளுடன் கூடப் போகிறார்கள்; அவர்களிரு வரும் அவளுடைய நண்பர்கள். அவர்களை எழுப்பும்படி உஷஸை மக்கள் கேட்டுக் கொள்ளுகிறார்கள்; உஷஸுடைய பாசுரங்கள் அவர்களை எழுப்புவதாகவும் ஒரு ரிக் கூறுகிறது. அசுவினி தேவதைகளின் தேரைக் குதிரைகளுடன் பூட்டும் பொழுது, விண்ணின் மகளான உஷஸ் பிறக்கிறாள். ஒரு ரிக் சந்திரனை உஷஸுடன் சம்பந்தப்படுத்துகிறது; திரும்பத்திரும்பப் புதிதாகப் பிறக்கும் சந்திரன், உஷஸுக்கு முன்னால், பகல் வருவதை அறிவித்துக் கொண்டே செல்லுகிறாள்.

பல தெய்வங்கள் உஷஸை உண்டாக்கியதாக வேதம் கூறுகிறது. அதில் இந்திரனும் ஒருவன். 'எல்லாக் குதிரைகளும், தேர்களும், கிராமங்களும், ஆடுமாடுகளும் அவனுடைய ஆதிக்கத்திற்கு உட்பட்டு இருக்கின்றன; அவன் ஸூரியனையும், உஷஸையும் படைத்தான். அவன் தண்ணீருக்கு அதிபதி. ஓ மக்களே! அவன் தான் இந்திரன்! (ரி.வே.II. 2.12.7). இந்திரன் அவ்வப்பொழுது மழையை உண்டாக்குவதால் அவனைத் தண்ணீருக்கு அதிபதி என்று வேதம் குறிப்பிடுகிறது.

அதே சமயம் இந்திரன் உஷஸை அடித்து, அவளைத் தேரிலிருந்து விரட்டி பயத்துடன் ஓடச் செய்து, அவளுடைய தேரை உடைத்து நொறுக்கியதாகவும் வேதம் கூறுகிறது. (ரி.வே. IV.30 8.11) இந்த நிகழ்ச்சியை இன்னும் சில ரிக்குகளும் குறிப்பிடுகின்றன. இதனுடைய உட்பொருள் ஸூரியனுடைய வெப்பமான கிரணங்கள் தோன்றியவுடன், குளுமையான விடியற்காலை மறைந்து விடுகிறது என்பதே ஆகும்.

சந்திரன் உஷஸைப் பிரகாசமாகப் படைத்தான் என்றும் அவளை ஜோதி மயமான ஸூரியனுக்கு மணம் புரிவித்தான்.

என்றும் வேதம் கூறுகிறது. மற்றுமொரு இடத்தில் அக்கினி உஷஸை ஸூரியனுக்கு மணம் செய்வித்ததாக வேதம் சொல்லுகிறது. பிருஹஸ்பதி உஷஸையும், அக்கினியையும் விண்ணையும் படைத்ததாக ஒரு ரிக் கூறுகிறது.

மற்றுமொரு ரிக் கூறுகிறது: 'சாச்வதமான நீதி நெறிகளின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்ட மகரிஷிகளின் முன்னோர்கள், தெய்வங்களுக்குத் தோழர்களாக இருந்து கொண்டு, இருளில் மறைந்திருந்த வெளிச்சத்தைக் கண்டு பிடித்து, பயனுள்ள சொற்களுடன் உஷஸைப் படைத்தார்கள்.' (ரி.வே.VII. 76.4)

மக்கள் செல்வங்களையும், குழந்தைகளையும் நீண்ட ஆயுளையும் கொடுக்கும்படி உஷஸை வேண்டுகிறார்கள். நிறையத் தானங்களைக் கொடுக்கச் செல்வந்தர்களின் மனதைத் திருப்பும் படியும் அவர்கள் உஷஸைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். ஒரு தாயாருக்கு மகன்கள் போலத் தாங்கள் அவளுக்கு இருக்க வேண்டும் என்று ஒரு ரிக்கில் மக்கள் உஷஸை வேண்டுகிறார்கள். இறந்தவர்களின் ஆன்மா ஸூரியனிடமும், உஷஸிடமும் செல்லுகிறது. நம் முன்னோர்கள் சிவந்த காலையின் மடியில் உட்கார்ந்திருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. வணங்குபவர்களுக்கு வாரி வாரி வழங்குவதில் வல்லவள் உஷஸ்.

அன்றும், இன்றும், என்றும் பொலிவுடன் பிரகாசிக்கும் உஷஸ்ஸைப் பற்றிய ரிக் வேதப் பாசுரங்கள் உள்ளத்தை அள்ளும் படியாகவும், உலக இலக்கியத்திலேயே சிறந்த படைப்புக்கள் ஆகவும் அமைந்திருக்கின்றன என்றால் அது மிகையாகாது.

* * *

## 2.11 அசுவினி தேவதைகள்

அசுவினி தேவதைகளின் பிறப்பைப் பற்றி ஏற்கனவே விவஸ்வானுடைய வரலாற்றில் பார்த்தோம். குதிரைகள் உருவத்தில் இருந்து விவஸ்வானும் ஸரண்யூவும் பெற்றெடுத்த இரட்டையர்களான அசுவினி தேவதைகளும் குதிரை வடிவில் இருந்தது இயற்கையே அவர்களுக்கு நாஸத்தியன், தஸ்ரன் என்ற தனித்தனிப் பெயர்கள் இருந்தும் இருவரையும் சேர்ந்தே அசுவினி தேவதைகள் என்று குறிப்பிடுவது வழக்கம். சில சமயங்களில் ரிக் . வேதம் இருவரையும் சேர்ந்தே நாஸத்தியர்கள் என்று சொல்லுவதும் உண்டு.

ரிக் வேதத்தில் ஸூக்தங்களின் கணக்குப்படி பார்த்தால், இந்திரன், அக்கினி, ஸோமன் ஆகிய மூன்று தெய்வங்களுக்குப் பிறகு நான்காவது முக்கிய தெய்வங் களாக அசுவினி தேவதைகள் விளங்குகிறார்கள். ரிக் வேதத்தில் மொத்தம் 50 ஸூக்தங்கள் முழுமையாக இத் தேவதைகளைப் புகழ்ந்து பாடுவதாக அமைந்துள்ளன. அவர்கள் தெய்வங்களுள் முக்கிய அங்கம் வகிக்கிறார்கள்.

அவர்கள் இரட்டையர்கள் என்றும் இணை பிரியாதவர் கள் என்றும் ரிக் வேதம் கூறுகிறது. எப்பொழுதும் இரண்டாக இருக்கும் சில உயிருள்ளவற்றுடனும் சில உயிரற்றவைகளுடனும் ரிக் வேதம் அசுவினி தேவதைகளை ஒப்பிடுகிறது. தீயை மூட்ட உபயோகிக்கும் இரு கற்கள், மக்கள் மத்தியில் உள்ள அறிவாளிகளான ஒரு தம்பதி, இரு கொம்புகள், இரு சக்கரவாகப் பறவைகள் தேரின் இரு சக்கரங்கள், சங்கமிக்கும் இரு ஆறுகள் முதலியவைகளுக்கு ரிக் வேதம் இத் தேவதைகளை ஒப்பிடுகிறது. இது தவிர, இன்னும் அழகாக வேதம் கூறுகிறது. 'உடம்புக்கு உதவும் இருகரங்களைப் போலவும், செல்வத்தை நோக்கி அழைத்துச் செல்லும் இரு கால்களைப் போலவும் நீங்கள் வாருங்கள்.

தேனைப் போல இனிமையான சொற்களைப் பேசும் இரு உதடுகள் போலவும், நம்மைப் போஷிக்கும் பெண்ணின் மார்பகங்கள் போலவும், நம் உயிரைக் காக்கும் இரு மூக்கோட்டைகள் போலவும், தெளிவாகக் கேட்கும் நம் இரு காதுகள் போலவும் இருங்கள். விண்ணையும் மண்ணையும் போலக் காற்று மண்டலத்தை நடுவில் தாங்குங்கள்..... (ரி.வே.II. 39)

இன்னும் ஓர் இடத்தில் வேதம் அசுவினி தேவதைகளை, இரு அன்னப் பறவைகளுடனும், இருமான்களுடனும், புல் தரையில் மேய்ந்து கொண்டிருக்கும் இரு மாடுகளுடனும் ஒப்பிடுகிறது. (ரி.வே.V. 78. 1.3) மற்றுமோர் ஸூக்தத்தில் வேதம் இவர்களை ஓர் ஏரில் பூட்டப்பட்ட இரு காளைகளுடனும், ஒரு பறவையின் இரு இறக்கைகளுடனும் ஒரு குட்டையைக் கடக்கும் மனிதனின் இரு கால்களுடனும் ஒப்பிடுகிறது. (ரி.வே. X. 106)

சிற்சில சமயங்களில் அவர்களைத் தனித்தனியாகவும் வேதம் குறிப்பிடுகிறது. அவர்களில் ஒருவனை வெற்றி வீரன் என்றும் மற்றவனை விண்ணின் மைந்தன் என்றும் ஒரு ரிக் பேசுகிறது. (ரி.வே.II. 181.4). யாஸ்கர் அவர்களில் ஒருவனை இரவின் மகனாகவும் மற்றவனை உஷஸின் மைந்தனாகவும் கருதுகிறார். (நிருக்தம் XII. 2)

அசுவினி தேவதைகள் வயதில் சிறியவர்கள், எல்லாத் தெய்வங்களிலும் இளமையானவர்கள். அதே சமயம் அவர்கள் பழமையானவர்கள். அவர்கள் பிரகாசமானவர்கள், ஒளிக்கு அதிபதிகள், பொன்போல ஜ்வலிப்பவர்கள், தேனின் வண்ணத்தை ஒத்தவர்கள். அவர்கள் பல உருவங்களை உடையவர்கள். பொலிவுடன் விளங்கும் அவர்கள் தாமரை மலர் மாலைகளை அணிகிறார்கள். அவர்கள் சுறுசுறுப்பானவர்கள், மனோ வேகமுள்ளவர்கள். அவர்கள் சிறந்த அறிவாளிகள், தெய்வங்களுக்குள் [illegible]

மற்ற எல்லாத் தெய்வங்களை விட அசுவினி தேவதைகளைத் தேனுடன் சம்பந்தப்படுத்திப் பல ரிக்குகள் பேசுகின்றன. 'பழக்கமான உதடுகளால் தேனை உறிஞ்சிக் குடியுங்கள்; உங்களுக்குப் பிரியமான தேரைத் தேனுக்காகப் பூட்டுங்கள். போகும் வழியில் தேனை உண்டு, புத்துணர்ச்சி பெறுங்கள்; போகும் வழிக்கும் தேனினால் புத்துணர்ச்சியை யூட்டுங்கள்; ஓ அசுவினி தேவதைகளே! தேனைச் சேமித்துவைக்கும் தோல் பையை இங்கு கொண்டு வாருங்கள். நேசமுள்ள உங்களுடைய அன்னப் பறவைகள் நிறையத் தேனை சேகரித்து வைத்துள்ளன; பொன் போலப் பிரகாசிக்கும் இறக்கைகளுடன் கூடிய, வலிமையான அப்பறவைகள் அதிகாலையில் விழித்து இருக்கின்றன. வெள்ளத்தில் நீந்தி, மகிழ்ச்சியுடன் உற்சாகத்தைக் கொடுக்கும் தேனை அருந்த, நீங்கள், ஈக்களைப் போல, வாருங்கள்.' (ரி.வே. VI. 45. 3.4)

எல்லாத் தெய்வங்களிலும் அசுவினி தேவதைகளை மட்டும் தேனின் மீது பிரியம் பிரியம் உள்ளவர்களெனவும் தேனைக் குடிப்பவர்கள் எனவும் வேதம் கூறுகிறது. ஒரு ரிக் அவர்களைத் தேனீக்களுடன் ஒப்பிடுகிறது; மற்றுமொரு ரிக் அவர்கள் தேனீக்களுக்குத் தேனைக் கொண்டு வருவதாகச் சொல்லுகிறது. மற்ற தெய்வங்களைப் போல, அசுவினி தேவதைகளும் ஸோமரஸம் குடிப்பதில் ஆவல் உள்ளர்களாக இருக்கிறார்கள்.

அசுவினி தேவதைகளுடைய தேர் ஸூரியன் போலப் பிரகாசமுள்ளதாகவும், பொன்னொளி கொண்டதாகவும் இருக்கிறது. அதனுடைய சக்கரங்கள், அச்சுகள், கடிவாளம் எல்லாம் பொன்னாலானவை. பல ஆபரணங்கள் அத்தேரை அலங்கரிக்கின்றன. அது மூன்று பாகங்களைக் கொண்டது; அதில் மூன்று ஆசனங்கள் உள்ளன; அதற்கு மூன்று சக்கரங்கள் இருக்கின்றன. மனதைவிடவும் காற்றைவிடவும்

வேகமாக அது செல்லுகிறது. கண் கொட்டுவதை விடவும் அது வேகமாகப் போகிறது. அத் தேரை ரிபுக்கள் நிர்மாணித்தார்கள். அவர்கள் ஸூரியாவின் திருமணத்திற்கு வந்த பொழுது, அவர்களுடைய தேரின் மூன்று சக்கரங்களில் ஒன்று காணாமல் போய் விட்டது!

அசுவினி தேவதைகளின் தேரை எது இழுத்தது என்பதை பற்றிப் பல கருத்துகளை வேதம் கூறுகிறது. தேரைக் குதிரைகள் இழுத்ததாகவும், அன்னப்பறவை, பருந்து முதலிய பறவைகள் இழுத்ததாகவும், எருமை மாடுகள் இழுத்ததாகவும் பலவாறாக வேதம் பேசுகிறது. ஒரு கழுதை தேரை இழுத்ததாகவும் சில ரிக்குகள் கூறுகின்றன! அவர்களுடைய தேர் மேலுலகின் எல்லைகளைத் தொடுகின்றன. ஸூரியனுடைய தேரும் உஷஸுடைய தேரும் சுற்றுவது போல, ஒரே நாளில் அசுவினி தேவதைகளின் தேரும் விண்ணையும் மண்ணையும் சுற்றுகிறது.

அசுவினி தேவதைகளின் இருப்பிடத்தை வேதம் பலவாறாகக் கூறுகிறது. அவர்கள் வெகு தூரத்திலிருந்தும், விண்ணிலிருந்தும், விண், மண் இரண்டு இடங்களிலிருந்தும், விண், காற்று மண்டலம் ஆகிய இடங்களிலிருந்தும், காற்று மண்டலத்திலிருந்து மட்டுமேயாகவும் வருவதாக ரிக்குகள் கூறுகின்றன. ஒரு ரிக்கில் அவர்கள் விண், மண், கடல் ஆகிய இடங்களிலிருந்து வருவதாக வேதம் சொல்லுகிறது. விண்ணின் கடலிலிருந்து அவர்கள் வருவதாகவும் ஒரு ரிக் பேசுகிறது. 'மேற்கிலிருந்து வாருங்கள், கிழக்கிலிருந்தும், கீழிருந்தும் வாருங்கள்! எல்லாப் பக்கங்களிலிருந்தும் செல்வங்களைக் கொண்டு வந்து குவியுங்கள்; ....' இவ்வாறாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.VII. 72.5). தெரியாதவை போலப் பல ரிக்குகள் எங்கிருந்து வருகிறீர்கள் என்று அவர்களையே கேட்கின்றன. அவர்களுக்கு மூன்று இருப்பிடங்கள் இருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது.

அசுவினி தேவதைகள் முதலில் விடியற்காலையில் தென்படுகிறார்கள். ஒரு ரிக் கூறுகிறது. 'விண்ணின் மைந்தர்களான ஓ அசுவினி தேவதைகளே! என்னுடைய சிவப்பு வண்ணப் பசுக்களின் கூட்டத்துடன் ஒரு கரு நிறப்பசுவைச் சேர்க்கும்படி நான் உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். என்னுடைய வேள்வியை மகிழ்ச்சியுடன் அனுபவியுங்கள்; நான் அளிக்கும் உணவைத் திருப்தியுடன் உண்ண வாருங்கள்; எங்களுடைய எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுங்கள்! எங்களை ஏமாற்றாதீர்கள்! (ரி.வே.X. 61.4) இங்கு கரும்பசு என்பது இரவின் இருளையும் சிவப்பு வண்ணப் பசுக்கள் அதிகாலையில் முதலில் தோன்றும் சிவந்த ஒளியையும் குறிப்பிடுகிறது என்று உரையாசிரியர்கள் கூறுகிறார்கள். இரவு பூராவும் கழிவதற்கு முன் சற்று இருளும் சற்று அதிகாலை வெளிச்சமும் கலந்து காணப்படுவதை ரிஷி இம்மாதிரி வருணிக்கிறார்.

அசுவினி தேவதைகளை எழுப்பும்படி உஷஸை ஒரு ரிக் வேண்டுகிறது; அவர்கள் தேரில் ஏறி உஷஸைப் பின் பற்றுகிறார்கள்; அவர்களுடைய தேர் பூட்டப்படும் பொழுது உஷஸ் பிறக்கிறாள் என்று கூறுகிறது மற்றுமொரு ரிக்.

ஒரு ரிக், அசுவினி தேவதைகளின் தேரை ஸவிதா விடியுமுன் அனுப்புவதாகக் கூறுகிறது. உஷஸ், ஸவிதா, அசுவினி தேவதைகள் ஆகிய மூன்று தெய்வங்களும் விடியற்காலையில் ஸூரியன் உதிக்கு முன் தோன்றுகிறார் கள் என்பது ரிக் வேதத்திலிருந்து தெளிவாகிறது.

அதிகாலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் அசுவினி தேவதைகளை வேள்விக்கு வரும்படி ரிஷிகள் வேண்டுகிறார்கள். 'மூன்று' என்ற எண்ணை எல்லா ரிக்குகளிலும் அசுவினி தேவதைகளுடன் சம்பந்தப்படுத்தி ஒரு முழு ஸூக்தமும் ரிக் வேதத்தில் உள்ளது. (ரி.வே.I. 34). அதிகாலைத் தெய்வங்களான அசுவினி

தேவதைகள் இருளையும் பேய் பிசாசுகளையும் விரட்டு கிறார்கள். அவர்கள் வெண் சிகப்பு நிறம் உள்ளவர்கள் என்று ஒருவேத நூல் கூறுகிறது. (ச.பி. V. 5.4.1)

கடலை அசுவினி தேவதைகளின் தாயாக ஒரு ரிக் கூறுகிறது; இது விண்ணின் கடல், அதாவது காற்று மண்டலம் என உரையாசிரியர் கூறுகிறார். பூஷன் அவர்களைத தகப்பனார்களாக ஏற்பதாக ஒரு ரிக் கூறுகிறது. உஷஸை அவர்களுடைய சகோதரியாக ஒரு ரிக் பேசுகிறது. ஸூரியனுடைய மகனான ஸூரியா அசுவினி தேவதைகளுடைய மனைவி என சில ரிக்குகள் கூறுகின்றன. அவள் ஸோமனுடைய மனைவி என வேறு சில ரிக்குகள் சொல்லுகின்றன. மணப் பெண்ணை மணமகன் வீட்டிற்குத் தங்களுடைய தேரில் கூட்டிச் செல்லும் படி அசுவினி தேவதைகளை வேண்டுகிறார்கள். மணமகளுக்கு மக்கட்பேறு அளிக்கும்படி அசுவினி தேவதைகளையும் மற்ற தெய்வங்களையும் ஒரு ரிக் வேண்டுகிறது.

அசுவினி தேவதைகள் ஒரு அலியின் மனைவிக்குக் குழந்தையைத் தந்ததாகவும் மலட்டுப் பசுவிற்கு மடியில் பாலைக் கொடுத்ததாகவும் ரிக் வேதம் கூறுகிறது.

கோஷா என்ற பெண்ரிஷி குஷ்ட ரோகத்தால் அவதியுற்று மணமாகாமல் தகப்பன் வீட்டிலேயே வெகு காலம் இருந்தாள். அவள் நீண்ட காலம் அசுவினி தேவதைகளைத் துதித்து வந்தாள். அவர்கள் அவளுடைய நோயைக் குணப்படுத்தி, அவளுக்கு இளமையையும் அழகையும் கொடுத்து, அவளுக்கு உகந்த கணவனையும் தந்தார்கள்.

ஸூரியனின் மகளான ஸூரியாவை மணக்கத் தெய் வங்களுக்குள் போட்டி இருந்தது. இதைக் கண்டு ஸூரியன் ஒரு பந்தயம் வைத்தான்; அவரவர் தேர்களில் வந்து யார் ஸூரியனை முதலில் அடைகிறார்களோ அவர்களுக்குத் தன்

மகளை மணம் செய்து கொடுப்பதாக அவன் அறிவித்தான். பந்தயம் துவங்கியது. அசுவினி தேவதைகள் போட்டியில் வெற்றி பெற்றார்கள். முடிவை ரிக் வேதமும் மற்ற வேத நூல்களும் இருவிதமாகக் கூறுகின்றன. போட்டியின் நிபந்தனைப்படி அசுவினி தேவதைகள் ஸூரியாவை மணந்ததாகச் சில இடங்களில் வேதம் பேசுகிறது. அசுவினி தேவதைகள், தங்களுடைய நண்பன் ஸோமன் (சந்திரன்) சார்பில் போட்டியால் கலந்து கொண்டதாகவும், ஸூரியாவைச் சந்திரனுக்கு மணம் புரிவிக்கும் படியும் ஸூரியனைக் கேட்டுக்கொண்டார்கள். ஏற்கனவே தன் மகளைச் சந்திரனுக்கு மணம் செய்து கொடுக்க விரும்பிய ஸூரியன், இதைத் கேட்டு, மகிழ்ச்சியுற்று, தன் மகளைச் சந்திரனுக்கே மணம் புரிவித்ததாகவும் சில ஸூக்தங்கள் கூறுகின்றன.

அசுவினி தேவதைகள் காதலர்களை ஒன்று சேர்ப்பதாக அதர்வ வேதம் கூறுகிறது.

ஆபத்தில் சிக்கியிருப்பவர்களுக்கு உடனே உதவி புரிந்து அவர்களை மீட்பது அசுவினி தேவதைகளின் குணாதிசய மாகும். இம்மாதிரியான உதவி செய்வதாக வேதம் அவர்களை அடிக்கடி புகழ்கிறது. கடலில் மூழ்கித் தத்தளிப்பவர்களுக்கு அவர்கள் உதவுகிறார்கள். அவர்களை வழிபடுபவர்கள் அவர்களைக் கடலிலிருந்தும் விண்ணிலிருந்தும் செல்வங்களைக் கொணரும்படி வேண்டுகிறார்கள். போர்களில் உதவிசெய்ய மக்கள் இந்திரனை வேண்டுகிறார்கள்; இதற்கு அவர்கள் பெரும் பாலும் அசுவினி தேவதைகளைக் கூப்பிடுவதில்லை. தங்கள் மருந்துகளால் எல்லாவிதமான நோய்களையும் குணப்படுத்தும் தெய்வீக மருத்துவர்கள் அசுவினி தேவதைகள். அவர்கள் குருடனுக்குக் கண் பார்வையை மீட்டுத் தருகிறார்கள்; தெய்வங்களின் மருத்துவர்களாகவும் இறவாமையைக் காப்போர்களாகவும், வழிபடுவோருக்கு

சாவைத் தடுப்பவர்களாகவும் அவர்கள் விளங்குகிறார்கள். கண் பார்வை நன்கு தெரியும் படியாகவும் நீண்ட ஆயுளைக் கொடுக்கும் படியாகவும், ஒரு ரிக் அவர்களை வேண்டுகிறது.

ரிக் வேதத்தில் அசுவினி தேவதைகள் செய்த வியக்கத்தக்க உதவிகளைப் பற்றிய வரலாறுகள் பல உள்ளன. அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

சியவானர் என்பவர் நீண்ட காலம் அசுவினி தேவதைகளை வழிபட்டுவந்தார். முதுமையால் அவர் தோலெல்லாம் சுருங்கித் தளர்ந்து விட்டது. போருக்குச் செல்லுபவன் கேடயத்தை எப்படி அணிந்து பிறகு கழட்டுவானோ அதே போல அசுவினி தேவதைகள் தளர்ந்த தோலை உரித்து, மினுமினுப்பான தோலையும், இளமையையும் அவனுக்குத் தந்தார்கள்; உதவிக்கு ஒருவருமில்லாமல் தனியே இருந்த அவனுக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்து, பல இளம் பெண்களை மனைவிகளாக்கினார்கள். (ரி.வே.I. 116.10). (மகாபாரதத்திலும் புராணங்களிலும் பிருகு மகரிஷியின் மைந்தனான சியவன மகரிஷியின் விரிவான வரலாறு உள்ளது. இதிலும் அசுவினி தேவதைகள் சியவன மகரிஷி முதுமையடைந்த பொழுது அவருக்கு இளமையைத் தந்ததாகக் குறிப்புகள் உள்ளன. இந்தச் சியவன மகரிஷியும், ரிக் வேதத்தில் உள்ள சியவானரும் ஒருவரே என்று ஸாயனார் கூறுகிறார். இளமையைப் பெற்ற சியவனரின் பெயரில் தற்காலத்தில் பிரசித்தி பெற்ற ஆயுர்வேத மருந்தான சியவனப்பிராஸம் விளங்குவது பொருத்தமே.)

விமதர் என்ற சிறுவயதான ஒரு ரிஷி கமத்தியூ என்ற அழகுவாய்ந்த அரச குமாரியைக் காதலித்தார்; அவளும் அவரை விரும்பினாள். ஆனால் அவளுடைய தகப்பனான அரசன் புருமித்திரனுக்கு இந்தச் சம்பந்தத்தில் விருப்பம் இல்லை. வேறு வழியில்லாமல் போகவே, விமதர் ரகஸ்யமாகக் கமத்தியூவைக் கடத்த முயற்சி செய்தார்.

ஆனால் அரசனுடைய படைகள் பின்பற்றி வந்து அவர் களைச் சூழ்ந்து கொண்டன. விமதர் அசுவினி தேவதை களைத் துதித்தார். அவர்கள் உடனே தங்கள் ரதத்தில் ஓடிவந்து, விமதரையும் கமத்தியூவையும் அரசனுடைய படைகளிலிருந்து மீட்டு, தங்கள் தேரிலேயே அவர்களை விமதருடைய வீட்டிற்குக் கொண்டு சேர்த்தனர். (ரி.வே.I. 116.1; I. 117.20; X. 65.12) .

அசுவினி தேவதைகள் துக்கிரர் என்ற மகரிஷியின் மகனான புஜ்ஜியுவைக் காப்பாற்றியதைப் பற்றிப் பல ரிக்குகள் பேசுகின்றன. கடலில் மூழ்கித் தத்தளித்த பொழுது புஜ்ஜியு அசுவினி தேவதைகளைத் துதித்தான். ஒருவிதக் காயமும் படாமல் கடல் அவனைத் தாங்கிச் சென்றது; வேகமாகப் பறக்கும் இறக்கைகள் கொண்ட பழுப்பு நிறக் குதிரைகளுடன் நன்றாக இணைக்கப்பட்டு மனோ வேகமாகப் போகும் தங்களுடைய தேரில் அவனை ஏற்றி, அசுவினி தேவதைகள், அலை மோதும் கடலிலிருந்து அவனைக் காப்பாற்றி, பாதுகாப்பான இடத்திற்குக் கொணர்ந்தார்கள். (ரி.வே.I. 117. 14.15)

புஜ்ஜியு கடலில் தடுமாடித் தத்தளித்த பொழுது, அசுவினி தேவதைகள், பறக்கும் பறவைகள் பூட்டப்பட்ட தேரில் வந்து அவனைக் காப்பாற்றி, அவனை அவனுடைய பெற்றோர்களிடம் அழைத்துச் சென்றதாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.I. 119.4) அடிக்கடலிலிருந்து அவனைக் காப்பாற்றி, புழுதி இல்லாத வாயு மண்டலங்கள் மூலமாக, அசுவினி தேவதைகள், தங்களுடைய பறவைகள் பூட்டப்பட்ட தேரில் தூக்கிச் சென்றதாக இன்னுமொரு ரிக் கூறுகிறது. (ரி.வே.VI. 62.6) நடுக்கடலில் எல்லோரும் புஜ்ஜியுவைக் கை விட்ட பொழுது, அசுவினி தேவதைகள் குதிரைகளுடன் வந்து, சிறிதும் அயராமல், அவனுக்குக் காயம் ஏற்படாமல், நீரிலிருந்து அவனைத் தூக்கிக் காத்து வியப்பு மிக்க செயல்களைப் புரிந்தார்கள். (ரி.வே.VII. 69.7)

தத்தியங் என்ற மகரிஷி அதர்வான் என்ற மகரிஷி மகன் ஆவார், அங்கிரஸ், அதர்வான் மற்றும் தத்திய ஆகிய மூவரும் மனிதவர்க்கத்திலேயே முதன் முத வேள்வி புரிந்தவர்கள் என்று வரலாறு கூறுகிறது. இந்தி தந்தியங்கிற்கு பிரவர்க வித்தை மது வித்தை என்ற இரண் வித்தைகளையும் ரகசியமாகச் சொல்லிக் கொடுத் பிறருக்கு அதைச் சொல்லிக் கொடுத்தால் அவன் தலை வெட்டி விடுவதாகச் சொல்லிச் சென்றான். அசுவி தேவதைகள் இந்த இரண்டு வித்தைகளையும் கற் கொண்டு அவை மூலம் மக்களுக்குப் பல உதவிகள் பு விரும்பினார்கள். தத்தியங்கு அந்த வித்தைகளை அசுவி தேவைகளுக்கு சொல்லிக்கொடுக்க விரும்பினான். ஆன இந்திரனின் பயமுறுத்தல் குறுக்கே நின்றது. அசுவி தேவதைகள் ஒரு உபாயத்தைக் கூறினார்கள். அவர் தத்தியங்கின் தலையைக் கொய்து அதை பத்திரப்படு வைத்து அதற்குப் பதிலாக ஒரு குதிரையின் தலை தத்தியங்கிற்கு வைத்து விடுவதாகக் கூறினார்கள். இத ஒப்புக்கொண்டு தத்தியங் குதிரைத் தலையுடன் அ வித்தைகளை அசுவினி தேவதைகளுக்குச் சொல் கொடுத்தான். இந்திரன் தத்தியங்கின் குதிரைத் தலை கொய்தான். அசுவினி தேவதைகள் தத்தியங்கி பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருந்த தலையை அவன் பொருத்தினார்கள். இந்திரன், கொய்தப்பட்ட குதி தலையின் எலும்புகளிலிருந்து வஜ்ஜிராயுதத் நிர்மாணித்து, விருத்திராசுரனைக் கொன்று வீழ்த்தினா

இந்த வேதகாலக்கதை சில மாறுதல்களுடன் ம பாரதத்தில் உள்ளது. எவ்வளவோ முயன்றும் இந்திர விருத்திராசுரனைக் கொல்ல முடியவில்லை இந்தி பிரம்மாவை அனுகினார். பிரம்மா இந்திரனை த முனிவரிடம் போய் அவர் முதுகெலும்பை யாசித்துப் பெ அதிலிருந்து வஜ்ஜிராயுதத்தை நிர்மாணித்து விருத்திரனை

சொல்ல வேண்டும் என்று கூறினார். இந்திரனும் அப்படியே செய்தான்.

விருஷாகிர் என்பவருடைய மகன் ரிஜ்ஜிராச்வன் என்ற ராஜரிஷி அசுவினி தேவதைகளின் தேரை இழுக்கும் ஒரு கழுதைக்கு உதவிய காரணத்தால் ரிஜ்ஜிராச்வன் தன் தந்தையின் சாபததைப் பெற்றுக் கண்பார்வையை இழக்க நேரிட்டது. அந்தக் கழுதை தன்னால் அல்லவோ இவருக்கு இந்தக் கஷ்டம் நேர்ந்தது என்று வருந்தி அசுவினி தேவதைகளை வேண்டியது. அத்தேவதைகள் மனம் இரங்கி ரிஜ்ஜிராச்வனுக்கும் கண்பார்வையை மீட்டுத் தந்தார்கள்.

ஒரு சமயம் கேலன் என்ற அரசன் எதிரிகளுடன் போரிட்டான். அப்பொழுது அவனுடைய உறவினளான விச்பலா என்ற பெண் அவனுக்கு உதவப் போரில் கலந்து கொண்டாள். சண்டை இருட்டின பிறகும் தொடர்ந்தது; இருட்டில் எதிரிகள் விச்பலாவின் காலை, ஒரு வேடன் பறவையின் சிறகைத் துண்டிப்பது போல, வெட்டி விட்டார்கள். விச்பலாவால் நடக்க முடியாமலும், தொடர்ந்து போர் செய்ய முடியாமலும் போயிற்று. இதைக் கண்ணுற்ற கேலனின் ராஜகுருவான அகஸ்தியர் அசுவினி தேவதைகளின் பராக்கிரமங்களைப் புகழ்ந்து, உணர்ச்சி மிகுந்த துதிகளைச் செய்தார். உடனே அத்தேவதைகள் விச்பலாவிற்கு ஒரு இரும்பு; காலைக் கொடுத்து அவன் மேலும் போரில் பங்கு கொள்ள உதவினார்கள். (ரி.வே.I. 112.10; I. 116.15; I. 117.11)

திவோதாஸன் என்ற புகழ்பெற்ற பேரரசனுடன் சம்பரன் என்ற அசுரன் போரிட்டான். போர் கடுமையாக நடந்து கொண்டிருந்தது. போரில் வெற்றியை வேண்டி, அரசன் அசுவினி தேவதைகளைத் துதித்தான். அவர்கள் சம்பரனைக் கொன்று வீழ்த்தினார்கள். பிறகு ஒரு சமயம் திவோ தாஸனுடைய அழைப்புக்கிணங்கி அசுவினி

தேவதைகள் அவனுடைய மாளிகைக்குச் சென்றார்கள். அப்பொழுது அவர்கள் ஒரு முள்ளம் பன்றியும் ஒரு காளை மாட்டையும் அவர்களுடைய தேரில் இணைத்துப் பூட்டி அதில் திவோ தாஸனுடைய வீட்டிற்குச் சென்றார்கள். வேகமாகப் போகும் காளையுடன் மெதுவாகப் போகும் முள்ளம் பன்றியை ஒரு வண்டியை இழுக்க இணைப்பது சரியல்லை, ஆனால் தங்களுடைய விசேஷ சக்தியால் அவைகள் ஒரே சீராக இணைந்து தேரை இழுக்க முடியும் என்று உலகிற்குக் காட்ட அசுவினி தேவதைகள் இம்மாதிரி செய்தார்கள். (ரி.வே. I. *112.14*; I. *116.18*) இது தவிர, இந்திரனும் சம்பரனுடைய தொன்னூற்றி ஒன்பது கோட்டைகளை இடித்ததாகவும், அவனை மலையிலிருந்து கீழே தள்ளியதாகவும் ரிக்குகள் சொல்லுகின்றன.

அசுரர்கள் ரேபா என்ற முனிவரைக் கத்தியால் குத்தி, கயிற்றால் கட்டி, கிணற்றில் தள்ளிவிட்டார்கள். பத்து இரவுகளும், ஒன்பது பகல்களும் கிணற்றிலேயே தண்ணீரில் தத்தளித்து இறந்தவராகக் கருத்தப்பட்ட முனிவரை, அசுவினி தேவதைகள் உயிர்ப்பித்து, ஜாடியிலிருந்து ஸோமரசத்தைக் கரண்டியில் எடுப்பது போல, கிணற்றிலிருந்து மேலே எடுத்தார்கள்.

தீ கொழுந்து விட்டெரியும் ஒரு படுகுழியில் அசுரர்கள் அத்திரி மகரிஷியையும் அவருடைய நண்பர்களையும் தள்ளிவிட்டார்கள். அப்பொழுது அசுவினி தேவதைகள் குளிர்ச்சியானதும் புத்துயிர் அளிப்பதுமான காற்றைக் கொணர்ந்து, தீயின் சுவலையிலிருந்து அவர்களைக் காப்பாற்றி, அந்திரிக்கு இளமையின் வலிமையைத் தந்து விடுவித்தார்கள்.

அசுவினி தேவதைகள் கக்ஷிவான் என்ற மகரிஷிக்கு உயர்ந்த அறிவையும் சிறந்த ஞானத்தையும் அளித்தார்கள். அவர்களுடைய குதிரையின் கால் குளம்பிலிருந்து நூறு குடம்

மதுபானத்தை, ஒரு சல்லடையிலிருந்து விழுவது போல, கீழே கொட்டும்படி செய்தார்கள். (ரி.வே.I. 116.7) இங்கு குதிரையின் கால் குளம்பு கார் மேகங்களையும் மதுபானம் மழையையும் குறிப்பதாகும்.

பராவிருஜன் என்று ஒருவன் குருடாகவும் முடவனாகவும் இருந்தான்; அசுவினி தேவதைகள் அவனுக்குப் பார்வையைக் கொடுத்து நன்றாக நடக்கவும் செய்தார்கள். ஓநாயின் வாயில் சிக்கிய பறவை ஒன்றை அசுவினி தேவதைகள் விடுவித்தார்கள். இது ஸூரியன் விழுங்கும் விடியற்காலைப் பொழுதைக் குறிக்கும் என்று யாஸ்கர் சொல்வதை ஸாயனார் உரையில் குறிப்பிடுகிறார். (ரி.வே.I. 112.8)

பேடு என்ற அரசன், பல வேள்விகளைப் புரிந்து, ராஜரிஷியாக விளங்கினான். அவனிடம் நல்ல குதிரைகளே இல்லாமலிருந்தது. அவன் தினமும் அசுவினி தேவதைகளைத் தொழுது வந்தான். மிகவும் மகிழ்ந்த தேவதைகள் அவனுக்கு வேகமாகப் போகும் ஒரு வெள்ளைக் குதிரையைக் கொடுத்தார்கள்; அதை இந்திரன் அசுவினி தேவதைகளுக்குக் கொடுத்திருந்தான். அது கம்பீரமாகக் கனைக்க வல்லது; அது எப்படிப்பட்ட கொடிய பாம்புகளையும் கொல்ல வல்லது; எல்லா எதிரிகளையும் அது வெல்லும் திறமை பெற்றது; அதன் கால்கள் உறுதியாக இருந்தன; அது எப்பொழுதும் புத்துணர்ச்சி பெற்று இருந்தது; அது போர்களில் எதிரிகளை வீழ்த்தி ஆயிரக் கணக்கான செல்வங்களைப் பேடுக்குப் பெற்றுக் கொடுத்தது.

விடியற்காலையின் தொடக்கத்தில் அசுவினி தேவதைகள் வானில் காணப்படுகிறார்கள். இயற்கை நிகழ்ச்சிகளில் விடியற் காலையை உஷஸ் என்ற தெய்வமாகவும், காலையை ஸூரியன் என்ற தெய்வமாகவும் வேதம் வணங்குகிறது. விடியற்காலையின் முன் பாதியில்

எழும் புத்துணர்ச்சியை அளிக்கும் தெய்வங்களாக அசுவினி தேவதைகளையும், பின் பாதியில் எழும் புத்துணர்ச்சியை அளிக்கும் தெய்வமாக ஸவிதாவையும் வேதம் வணங்குகிறது. மனிதன் உறக்கம் நீங்கி, சோம்பல் முறித்து, காலைக் கடன்களை முடித்து, வேள்விகளிலும் மற்றுமுள்ள அலுவல்களிலும் ஈடுபடத் தொடங்கும் காலத்திற்கு அசுவினி தேவதைகளும் ஸவிதாவும் ஆட்சி செலுத்தும் தெய்வங்களாக விளங்குகிறார்கள். புத்துயிரும், புத்துணர்ச்சியும் தரும் விடியற்கால வேளையின் முதல் பாதிக்குத் தெய்வங்களாக விளங்கும் அசுவினி தேவதைகள் நாளடைவில் நோய்களையும், குறைபாடுகளையும் தீர்க்க வல்லவர்களாக வளர்த்தார்கள்.

இக்கால விஞ்ஞானக் கண்டுபிடிப்பின்படி எல்லா ஜீவராசிகளுக்கும் புத்துயிரளிக்கும் 'ஓஜோன்' (ozone) எனப்படுவது விடியற்காலையில் காற்றில் அதிகமாக உள்ளது. விடியற்காலையில் துயில் நீங்கி, காலைக் கடன்களை முடித்து, நம் அலுவல்களில் நாம் ஈடுபட்டால் அதிகப் பலன் கிடைக்கும் என்பதை நம்முன்னோர்கள் தம் உள்ளுணர்வில் அறிந்து, அந்த விடியற்காலையை இரு பாதிகளாகப் பிரித்து முதல் பாதிக்கு அசுவினி தேவதைகளையும் இரண்டாவது பாதிக்கு ஸவிதாவையும் ஆட்சிபுரியும் தெய்வங்களாக ஏற்படுத்தியுள்ளார்கள்.

சில சமயங்களில் சம்பந்தப்பட்ட எல்லாத் தெய்வங்களையும் ஒரே ரிக்கில் காணலாம். ஒரு ரிக் பேசுகிறது: 'ஓ நாசத்தியர்களே! புனிதமான வெகுமதி அளிக்கப்படுகிறது; அதன் இனிப்பை நன்குணர்ந்த உதடுகளில் இனிமையான ஸோமரத்தைக் குடியுங்கள். ஸவிதா, விடியுமுன், உங்களுடைய பலவண்ணத் தேரை எங்களுடைய வேள்விக்கு அனுப்புகிறாள்.' (ரி.வே. I. 34.10). இன்னுமொரு ரிக்: 'அக்கினியை எழுப்பியாயிற்று; ஸூரியன் உதயமாகிறான்; ஒளிவீசும் வலிமையான உஷஸ் தன் முழு

வெளிச்சத்துடன் பிரகாசித்து விட்டாள். அசுவினி தேவதைகள், தங்களுடைய தேரை, பிரயாணத்திற்குத் தயார் செய்து விட்டார்கள்; தெய்வமான ஸவிதா மக்களைப் பல வாறாக ஊக்குவிக்கிறார்.' (ரி.வே.I. 157.1)

இருளை விரட்டும் தெய்வங்களாகக் கூறும் ரிக் (III. 39.3) அசுவினி தேவதைகளை விடியற்காலையின் தெய்வங்களாக உறுதிப்படுத்துகிறது.

இவ்வாறாக, அசுவினி தேவதைகள், உஷஸுடனும், ஸவிதாவுடனும், ஸூரியனுடனும் இணைந்து, மக்களுக்கு ஒவ்வொரு நாளையும் நன்றாகத் தொடங்க அருள் புரிகிறார்கள்.

* * *

அத்தியாயம் 3

# காற்று மண்டலத் தெய்வங்கள்

## 3.1 இந்திரன்

ரிக் வேதத்தில் இந்திரன் மிக முக்கியமான தெய்வமாக விளங்குகிறான். இந்த வேதத்தில் சுமார் 250 ஸூக்தங்கள் இந்திரன் புகழைப் பாடுவதாக அமைந்திருக்கின்றன. இது கிட்டத்தட்ட ரிக் வேதத்தின் கால் பாகமாகும். இதுதவிர, இன்னும் பல ஸூக்தங்களில் மற்ற தெய்வங்களுடன் இந்திரனும் சேர்த்து பாடப்பெறுகிறான். வேத காலத்தில், விசேஷமாக ரிக் வேதம் ஓதப்பட்ட சமயத்தில், இந்திரன் தெய்வங்களின் வரிசையில் முதல் இடத்தை வகித்தான் என்று தெளிவாகத் தெரிகிறது.

இந்திரனைப் பற்றி வேதத்திலுள்ள பல வரலாறுகளிலிருந்து அவனுடைய முக்கியத்துவம் நன்கு புலனாகிறது. முதன்மையாக, அவன் இடியை ஆளும் தெய்வமாக விளங்குகிறான். வரட்சியும் இருளும் நிறைந்த அசுரர்களை வென்று, அவர்களிடமிருந்து தண்ணீரையும் வெளிச்சத்தையும் மீட்டு, இந்திரன் மக்களுக்கு அளித்தான் என்பது தான் இந்த வரலாறுகளின் சாராம்சமாகும். இரண்டாவதாக, இந்திரன் போர்களின் நாயகனாக விளங்குகிறான். வேதம் ஓதும் ஆரியர்கள் பழங்குடி மக்களுடன் போரிடும் பொழுது, இந்திரன் முன்னவர்களுடன் சேர்ந்து, அவர்களுக்கு உதவி, பழங்குடி மக்களைத் தோல்வி அடையச் செய்கிறான்.

இந்திரன் இரும்பைப் போல உறுதியான உடலைப் படைத்தவன்; பழுப்பு நிறமான அவனுக்கு, தலை முடியும் தாடியும் செம்பட்டை நிறமாக இருந்தன; அவனுடைய உதடுகள் கவர்ச்சியாக இருந்தன. அவன் இடியுடன் கூடிய மின்னலை தன்னுடைய சக்தி வாய்ந்த கரங்களில் ஏந்தி இருந்தான். அவன் விருப்பம் போல பல அழகிய உருவங்களையும், சிவந்த ஒளி வீசும் ஸூரியனைப் போன்ற உருவத்தையும் எடுக்க வல்லவர்கள்.

வஜ்ராயுதம் என்ற இடியுடன் கூடிய மின்னல் இந்திரனுடைய தனிப்பட்ட ஆயுதமாக விளங்குகிறது. துவஷ்டா என்ற தெய்வம் அதை நிர்மானித்தது. ரிக் வேதம் ஒரு ரிக்கில் "வஜ்ராயுதம் கடலின் அடியில் வெகு தூரத்தில், நாற்புறமும் நீரால் சூழப்பட்டுக்கிடக்கிறது!" என்று சொல்லுகிறது. (ரி.வே. VIII. 89.9). இன்னுமொரு ரிக் "இந்த வஜ்ராயுதம் உயரமான, பனியால் மூடப்பட்ட ஸூரிய மண்டலத்திலிருந்து கீழே சுழற்றி வீசப்படுகிறது" என்று பேசுகிறது. (X. 27.21) அது பொன் நிறமானது என்றும், உலோகத்தால் செய்யப்பட்டது என்றும், ஆயிரம் கூர்முனைகள் கொண்டது என்றும், மிகவும் கூரானது என்றும் பலவாராக வர்ணிக்கப்படுகிறது. "பெருமைக்குரிய ஸூரியன் விண் வெளியில் பதிக்கப்பட்டது போல, மிகவும் உயர்ந்த வஜ்ராயுதம் இந்திரனின் கையில் வைக்கப்பட்டது" என்று ஒரு ரிக் கூறுகிறது. (VIII. 59.2). வஜ்ராயுதத்தைத் தவிர, இந்திரனுடைய கைகளில் வில்லும் அம்புகளும், அங்குசமும், வலையும் இருக்கின்றன; அவைகளையும் ஆயுதங்களாக இந்திரன் சிலசமயங்களில் உபயோகிக்கிறான்.

பொன்னாலான தேரில் இந்திரன் வீற்றிருக்கிறான். அந்தத் தேர் மனதைவிட அதிக வேகத்தில் செல்லுகிறது. இரு பழுப்பு நிறக் குதிரைகள் அவனுடைய தேரை இழுக்கின்றன. சில சமயங்களில் இரண்டுக்கும் அதிகமான குதிரைகள் தேரில் பூட்டப்படுகின்றன. அந்தக் குதிரைகளின்

கண்கள் ஸூரியனைப் போலப் பிரகாசிக்கின்றன. அவைகள் உருமிக் கொண்டும், கனைத்துக் கொண்டும் ஓடுகின்றன. அவைகளுக்குப் பொன் நிறமான பிடரி மயிர் இருக்கிறது. மயிலின் தோகையை ஒத்த முடி அக் குதிரைகளின் மேல் காணப்படுகிறது. ஒரு கழுகு இறக்கைகளை வீசிக் கொண்டு வெகு வேகமாகப் பறப்பது போல, இந்திரனை அக்குதிரை கள் வெகு தூரங்களுக்கு அழைத்துச் செல்லுகின்றன. துதிகளாலும் விருப்பத்தாலும் அத்தேர் வேகமாகச் செல்லுகிறது. குதிரைகளின் கடிவாளம் காளை மாடுகளைப் போல சக்தி வாய்ந்தது என்றும், இந்திரனுடைய சாட்டை தங்கத்தினாலானது என்றும் ஒரு ரிக் கூறுகிறது.

தெய்வங்கள் எல்லாம் ஸோமரசத்தைக் குடிப்பதில் விருப்பமுள்ளவர்கள்; அவர்களுள் இந்திரன் அதில் மிகுந்த ஆர்வம் காட்டினதாக ரிக் வேதம் கூறுகிறது. பிறந்த உடனேயே, இந்திரன் ஸோம ரசத்தைக் குடிக்க விரும்பியதாகவும், அவனைப் பெற்ற தாயே ஸோமக் கொடியைப் பிழிந்து அதன் ரசத்தை இந்திரனுக்குக் கொடுத்ததாகவும் ரிக் வேதம் பேசுகிறது. ஸோம ரசத்தைக் குடித்த உற்சாகத்தில் இந்திரன் மாபெரும் செயல்களைப் புரிந்தான் என்று ரிக்வேதம் கூறுகிறது; (ரி.வே. II. 15.2). போரிடும் பொழுது இந்திரன் ஸோம ரசத்தைக்குடித்து, மிகுந்த உற்சாகத்துடனும், வேகத்துடனும், சண்டையில் ஈடுபட்டு, விருந்திரன் முதலிய அரக்கரகளைக் கொன்றதாகவும், மற்ற எதிரிகளை வென்றதாகவும் ரிக் வேதம் சொல்லுகிறது. விருத்திரன் மாதிரியான மிகச்சக்தி வாய்ந்த எதிரிகளுடன் போரிடும் பொழுது இந்திரன் மூன்று பெரிய அண்டாக்கள் நிறைய ஸோமரசத்தைக் குடித்தான் என்றும் வேதம் கூறுகிறது.

ஸோமரசத்தைக் குடித்ததால் உண்டான தன்னுடைய உணர்ச்சிகளை இந்திரன் தனக்குள்ளேயே கூறிக்கொள் வதாக ஒரு ஸூக்தம் அமைந்திருக்கிறது. அவன் சொல்லு

கிறான்: "வேகமாக அடிக்கும் புயலைப் போல, நான் குடித்த ஸோம ரஸம் என்னை மேலே தூக்கிவிடுகிறது. வேகமாகச் செல்லும் குதிரைகள் தேரை எப்படி இழுத்துச் செல்லுமோ, அம்மாதிரி நான் குடித்த ஸோமரசம் என்னை உயரே தூக்கிச் செல்லுகிறது. தன்னுடைய பிரியமுள்ள கன்றைப் பார்க்க அரற்றும் பசுப்போல இந்தப் பாசுரம் என்னை வந்தடைகிறது. ஒரு மனிதன் தேரைத் திருப்புவது போல, நான் இப்பாசுரத்தை என் இதயத்தில் வளைக்கிறேன். வானும் பூமியும் என்னுடைய பாதி அளவுக்கு வளரவில்லை. என்னுடைய மகிமையால் நான் வானையும் இந்தப் பரந்த பூமியையும் கடந்து விட்டேன். ஆஹா! இப்பரந்த பூவுலகை நான் இங்காவது அங்காவது நினைத்த இடத்தில் வைப்பேன். என்னுடைய கடுமையான சினத்தில் நான் இப் பூமியை ஒரு நொடியில் இங்காவது அங்காவது வெட்டுவேன், என்னுடைய உடம்பின் ஒரு பாகம் விண் வெளியில் இருக்கிறது; மற்ற பாகத்தை நான் கீழே தொங்க விடுகிறேன். பலசாலிகளுக்குள் முதலிடத்திலிருக்கும் நான் விண்வெளிக்குத் தூக்கி விடப்பட்டிருக்கிறேன்". (ரி.வே.I. 119) இப்படியாக இந்திரன் ஸோமரசத்தைக் குடித்த உத்சாகத்திலும், வெறியிலும் பிதற்றுகிறான். தேனுடன் கலந்த பாலை அவன் குடிப்பதாக ஒரு ரிக் கூறுகிறது.

இந்திரன் பிறப்பைப் பற்றிய வரலாறு ரிக் வேதத்தில் பல இடங்களில் காணலாம். மூன்றாவது மண்டலத்தில் 48வது ஸூக்தம் அவன் பிறந்தவுடன் ஸோமரசம் குடித்ததை வர்ணிக்கிறது. நான்காவது மண்டலத்தில் 18வது ஸூக்தத்தில் அவனுடைய பிறப்பைப் பற்றிய சில குறிப்புகளைக் காண்கிறோம். அதிதி அவனுடைய தாய். பிறக்கும் பொழுதே இந்திரன் விருத்திராசுரனுடன் போரிட விரும்புகிறான், இதுவரை பிறந்தவர்களில் ஒருவரும் அவனுக்கு நிகர் இல்லை; இனிப் பிறக்கப் போகிறவர்களில் ஒருவரும்

அவனுடன் ஒப்பிட முடியாது. பிறந்தவுடன் அவன் விண்ணையும் பூமியையும் நிரப்பினான்.

ரிக் வேதத்தில இன்னும் பல இடங்களில் அவன் பிறப்பைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பிறந்தவுடன் பொன்னிறமான இந்திரன் விண்வெளியை ஒளி மயமாகச் செய்கிறான். பிறக்கும் போதே அவன் போர் வீரனாக விளங்கினான். பிறந்ததிலிருந்தே அவனை எவரும் வெல்ல முடியாது. நிலை பெற்றிருக்கும் மலைகளும், விண்ணும் மண்ணும் அவன் பிறந்ததைக் கண்டு அஞ்சி நடுங்கின. எல்லாத் தெய்வங்களும் அவனைக் கண்டு அஞ்சின.

இந்திரனுடைய பிறப்பைப் பற்றி வேறு சில வித்தியாசமான குறிப்புகளையும் ரிக் வேதத்திலும் மற்ற வேத நூல்களிலும் காண்கிறோம். ரிக் வேதத்தில் ஓரிடத்தில் ஸோம ரசமே இந்திரனைப் பெற்ற தகப்பனாகக் கூறப்படுகிறது. அசுரர்களைக் கொல்ல மற்ற தெய்வங்களே இந்திரனைப் படைத்ததாகவும் ஒரு ரிக் கூறுகிறது. புருஷ ஸூக்தம் எனப்படும் புகழ்பெற்ற ஸூக்தம், இந்திரனும் அக்னியும் படைப்போனுடைய வாயிலிருந்து தோன்றினார்கள் என்று கூறுகிறது. (ரி.வே.X. **90.13**) அக்னி, ஸோமன், பரமேஷ்டி இவர்களுடன் இந்திரனையும் பிரஜாபதி உண்டாக்கியதாக ஒரு வேத நூல் கூறுகிறது. (சதபதப் பிராம்மணம் XI. 1 6.14) பிரஜாபதி இந்திரனைக் காலத்தால் கடைசித் தெய்வமாக உண்டாக்கினார் என்று தைத்திரேயப் பிராம்மணம் கூறுகிறது. (**2.2. 10.1**).

அக்னியும் இந்திரனும் இரட்டையர்கள் என்று ஓரிடத்திலும், பூஷன் என்ற தெய்வம் இந்திரனின் சகோதரன் என்று மற்றுமொரு இடத்திலும் வேதம் கூறுகிறது.

இந்திரனுடைய மனைவி இந்திராணி என்ற பெயரில் ரிக் வேதத்தில் சில இடங்களில் நாம் காண்கிறோம். வேறு

சில வேத நூல்களில் அவனுடைய உண்மைப் பெயர் சசி என்றும் உள்ளது. ஓரிடத்தில் இந்திராணி நம் பெருமைகளைக் கூறிக்கொள்ளுகிறாள்: "வேறு எந்தப் பெண்ணும் என்னைவிடக் கவர்ச்சியானவள் அல்ல. என்னைவிட அதிகமாகக் காதல் லீலைகளில் ஈடுபட முடியாது. வேறு எந்தப் பெண்ணும் என்னை விடத்தன்னுடைய கணவனின் ஆலிங்கனத்திற்குத் தன் அழகையெல்லாம் ஆவலுடன் அர்ப்பணிக்க முடியாது." (ரி.வே.X. 86.6)

பல ரிக்குகளில் இந்திரன் மற்ற தெய்வங்களுடன் சேர்ந்து காணப்படுகிறான். முக்கியமாக மருத்துக்களுடன் இந்திரன் சேர்ந்தது அவர்களுடைய உதவியுடன் எதிரிகளுடன் போர் புரிகிறான். அடிக்கடி அக்கினியையும் இந்திரனையும் சேர்த்து வேதம் பேசுகிறது. சமுத்திரத்திற்கு அடியில் ஒளிந்திருக்கும் அக்கினையை இந்திரன் கண்டுபிடித்ததாக ஒரு ரிக் கூறுகிறது; இது சமுத்திரத்திற்கு அடியில் இருக்கும் வாடவாக்னியைக் குறிப்பதாக இருக்கலாம். (ரி.வே.X. 32.6). வருணனுடனும் வாயுவுடனும் சேர்ந்து சில இடங்களில் இந்திரனை வேதம் பேசுகிறது.

ரிக்வேதம் சில இடங்களில் இந்திரன் தான் ஸூரியன் என்று சொல்லுகிறது. இந்திரன் பிரம்மாண்டமான உருவம் படைத்தவன் என்று ரிக்வேதம் பல இடங்களில் கூறுகிறது. விண்ணுலகையும் மண்ணுலகையும் சேர்த்து அவன் பிடித்த பொழுது அவை இரண்டும் அவன் கையளவே ஆயின. அவன் இடுப்பைச் சுற்றி வளையமாகப் போட விண்ணுலகும் மண்ணுலகும் சேர்த்தும் போதவில்லை. நூறு விண்ணுலகங்களும் நூறு மண்ணுலகங்களும் சேர்ந்தால் கூட இந்திரனுக்கு சமமாகாது; அவன் ஆயிரம் ஸூரியர்களை விட அதிகப் பிரகாசமுள்ளவன்.

ரிக்வேதம் இந்திரனுடைய பலத்தையும், சக்தியையும் வீரியத்தையும் அளவில்லாமல் பல தடவைகள் புகழ்ந்து பேசுகிறது. விண்ணுலகிலாவது, மண்ணுலகிலாவது எவரும் அவனுக்கு நிகராகப் பிறந்ததுமில்லை, இனி பிறக்கப் போவது மில்லை. தேவதைகளும், மனிதர்களும் அவனுடைய சக்தியின் எல்லையைக் கண்டதில்லை. தெய்வங்களுள் யாரும் அவனுக்கு நிகரில்லை; முன்பும் இப்பொழுதும் பிறந்தவர்கள் எவரும் அவனை எதிர்க்கச் சக்தியற்றவர்கள். மற்ற தெய்வங்கள் எல்லாம், சக்தியிலும் பலத்திலும், அவனுக்கு முதலிடம் கொடுக்கின்றன. மற்ற எந்தத் தெய்வத்தாலும் அவனுடைய செய்கைகளையும், அறிவுரைகளையும் மீறமுடியவில்லை. அவன் போரிட்டு, எல்லாத் தெய்வங்களுக்கும் வேண்டிய இடத்தைப் பிடித்தான். இந்திரன் ஒருவனே எல்லா உலகிற்கும் அரசனாக இருக்கிறான். உயிருள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் அவன் தான் அரசன். எல்லா உலகிற்கும் அவன் சக்கரவர்த்தி. அவன் ஆயுதங்களை ஏந்தி, அவைகளை உபயோகிக்கும் பொழுது, கட்டுக்கடங்காத யானை போலவும், எவரும் அஞ்சும் சிங்கத்தைப் போலவும் காட்சி அளிக்கிறான். அவன் முதுமையை எட்டாமல் எப்பொழுதும் இளைஞனாகவே காட்சியளிக்கிறான்.

இந்திரனைப் பற்றிய வரலாறுகளில் முக்கியமானது அவன் வரட்சிக்கு அசுரனான விருத்திராசுரனுடன் நடத்தும் போராகும். சில சமயங்களில் இந்த அசுரனை அஹி என்று வேதம் அழைக்கும். வடமொழியில் அஹி என்றால் பாம்பாகும். ஸோம ரசத்தைக் குடித்த உத்சாகத்துடன், மருத்துக்களால் சூழப்பட்டு அவன் போருக்குச் செல்லுகிறான். சண்டை பயங்கரமாக நடக்கிறது. இந்திரன் இடியுடன் கூடிய மின்னலால் விருத்திராசுரனைத் தாக்கும் பொழுது விண்ணும் மண்ணும் அஞ்சி நடுங்குகின்றன. இந்த இடியுடன் கூடிய மின்னலை நிர்மாணித்த துவஷ்டா என்ற

தெய்வமே இந்திரனின் கடும் சினத்தைக் கண்டு அஞ்சி நடுங்குகிறான். இந்திரன் விருத்திராசுரனை அடித்து நொறுக்குகிறான். அவன் விருத்திரனை இடியுடன் கூடிய மின்னலால் முதுகிலும் முகத்திலும் அடிக்கிறான். தண்ணீரை மூடியிருந்த அசுரனை அல்லது தண்ணீரைச் சூழ்ந்திருந்த பாம்பை அவன் தாக்குகிறான். தண்ணீரில் ஒளிந்து கொண்டு, அத்தண்ணீரையும் ஆகாயத்தையும் தடுத்திருந்த அஹி என்னும் பாம்பை அவன் கொன்றான். ஆதலால் 'தண்ணீரில் வென்றவன்' (அப்ஸுஜித்) என்ற சொல் இந்திரனுக்கே உரித்தானதாக ரிக் வேதம் கூறுகிறது.

இந்திரனுக்கும் விருத்திரனுக்கும் நடக்கும் இந்தப் போரை சில சமயங்களில் நிகழ்காலத்திலும், சில சமயங்களில் இறந்த காலத்திலும் வேதம் பேசுகிறது; இன்னும் சில சமயங்களில் எதிர் காலத்தில் இந்தப் போரிடும்படி துதிகளால் இந்திரனை வேண்டுகிறார்கள். இதிலிருந்து இது இயற்கையில் அடிக்கடி நிகழும் சம்பவம் என்று தெரிகிறது.

எத்தனையோ நாட்களாகவும், மாதங்களாகவும், இந்திரன் போரிட்டு விருத்திரனைக் கொன்று ஆறுகளை ஓடும்படி செய்திருக்கிறான். அவன் அசுரனைக் கொன்று பெரிய மலையை நொறுக்கி, அடைபட்டிருந்த தண்ணீரை விடுவித்தான். சிறைப் பட்டிருக்கும் பசு மாடுகளைப் போல அடைபட்டிருக்கும் ஆறுகளை அவன் விடுவித்தான்; அந்த ஆறுகளும், மெதுவாகச் சப்தமிடும் பசுக்களைப் போல, கடலை நோக்கி ஓடுகின்றன. ஆறுகள் ஓடுவதற்கு வசதியாக இந்திரன், தன்னுடைய இடி, மின்னலால், கால்வாய்களை வெட்டினான். விருத்திரனைக் கொன்று, அவன், மூடியிருந்த துவாராத்தைத் திறந்து, தண்ணீரை வெளியே விட்டான்.

விருத்திரனுடைய வரலாற்றின் உள்ளுறைப் பொருள் மேகங்கள் கூடி, வானம் கறுத்து, இடி இடித்து, மின்னல் மின்னி, மழைபெய்து, மழைநீர் ஆறாகப் பெருகி ஓடுவதாகும்.

பசுமாடுகளை மழை ஜலத்திற்கு ஒப்பிடுகிறார்கள். பசுமாடுகள் மெல்லச் சப்தித்துக் கொண்டு புல் மேயப் போவது போல, மழை ஜலம் பெருகிச் சலசலவென்று சப்தித்துக் கொண்டு கடலை நோக்கி ஓடுகிறது. (ரி.வே.I. 32.2) இன்னும் சில இடங்களில் பசுமாடு உஷஸ் என்னும் தேவதை (விடியற்காலை)க்கு ஒப்பிடப்படுகிறது. "ஒரு பசுமாடு தன்னுடைய மடியிலிருந்து பாலைச் சுரப்பதுபோல, உஷஸ் தன்னுடைய மார்பகங்களைத் திறந்து காட்டுகிறாள்." (ரி.வே. I. 92.4) "பசுமாடுகள் கூட்டம் கூட்டமாகப் புல மேய்வதற்குப் போவதுபோல இருக்கும் கிரணங்களை எங்களுடைய கண்கள் நோக்குகின்றன". (ரி.வே.IV.52.5) சில இடங்களில் பசுமாடுகளை மேகங்களுக்கு ஒப்பிடுகிறார்கள். இந்திரன் பிறந்த பொழுது பசுமாடுகள் உரக்கச் சப்தமிட்டன என்ற இடத்தில் மேகங்களின் இடி முழக்கம் குறிப்பிடப்படுகிறது. (ரி.வே.VIII. 59.4.)

ரிக் வேதத்தில் பல இடங்களில் மேகங்களை மலைகளுக்கு ஒப்பிடுகிறார்கள். ஒரு ரிக் மழை நீர் பொழியாத மேகங்களை மலைக்கும், மழை பொழியும் மேகங்களைப் பசுமாடுகளுக்கும் ஒப்பிடுகிறது. "துவஷ்டா நிர்மாணித்த இடியுடன் கூடிய மின்னலை உபயோகித்து, இந்திரன் மலையில் படுத்திருந்த அசுரனைக் கொன்றான்; மெதுவாக சப்திக்கும் பசுக்களைப் போல, வேகமாகக் கீழே விழும் மழை நீர் கடலை நோக்கி வளைந்து ஓடுகிறது. (ரி.வே.I. 32.2)

ரிக்வேதம் சில இடங்களில் மேகங்களைக் கோட்டைகளுக்கு ஒப்பிடுகிறது. ஒரு சுவையான ரிக்கில் பலவித உவமைகள் கலந்து காணப்படுகின்றன. "கோடாலி ஒரு மரத்தை வெட்டுவது போல, இந்திரன் விருத்திரனைக் கொன்று, கோட்டைகளை நொறுக்கி, ஆறுகளுக்காகக் கால் வாய்களை வெட்டினான்; தன்னுடைய தோழர்களான

ருத்துக்களுடன் இந்திரன் மலையைப் பிளந்து, மாடுகளை வெளியே கொண்டு வந்தான்." (ரி.வே.X. 89.7)

பிறர் உதவியில்லாமல், இந்திரன் தன் சொந்த வலிமையால் மட்டுமே விருத்திரனைக் கொன்றதாக சில ரிக்குகள் கூறுகின்றன. இன்னும் சில இடங்களில் மற்ற சில தெய்வங்கள் இதில் இந்திரனுக்கு உதவியதாகவும் காண்கிறோம். முக்கியமாக மருத்துக்கள் இந்திரன் கூடவே இருந்து அவனக்குப் பெரிதும் உதவியாக இருந்ததாக வேதம் பேசுகிறது. பாசுரங்கள், தொழுகை, வேள்விகள் முதலியனவும் ஸோமரசமும் இந்திரன் வலிமையைப் பெருக்கி, விருத்திரனைக் கொல்ல உதவின என்றும் ரிக்வேதம் சுட்டிக் காட்டுகிறது.

விருத்திரனைத் தவிர வேறு சில அரக்கர்களையும் இந்திரன் வெல்கிறான். நெருப்பு உலர்ந்து போன கட்டையை எரிப்பது போல இந்திரன் அசுரர்களைப் பயங்கரமான அம்புகளை வீசி எரிக்கிறான் என்று ரிக்வேதம் ஓரிடத்தில் கூறுகிறது. அடைபட்டுக்கிடந்த நீரைத் திறந்து விடுவதைத் தவிர, இந்திரன் ஸூரியனை விண்ணில் பதித்து, வெளிச்சத்தையும் கொணர்ந்தான் என்றும் ரிக் வேதம் சொல்கிறது. இந்திரன் அசுரர்களின் தலைவனான விருத்திரனைக் கொன்ற பொழுது, அவன் மலையிலிருந்து தண்ணீரை விடுவித்து, ஸூரியனையும், விண்ணையும், மற்றும் விடியற் காலையையும் உண்டாக்கினான். (ரி.வே.I. 32.4; VI. 30.5)

இந்திரன் விடியற்காலையையும், ஸூரியனையும் உண்டாக்கினான் என்றும் அவைகளை ஒளி வீசும்படி செய்தான் என்றும், அவைகளைக் கொண்டு இருட்டைத் திறந்தான் (நீக்கினான்) என்றும் சில ரிக்குகள் கூறுகின்றன.

அடர்ந்த மேகங்களில் ஒளிந்திருந்த விருத்திரனை இந்திரன் இடியுடன் கூடிய மின்னலால் கொன்று,

தண்ணீரை வெளிக் கொணர்ந்து, மேகங்களின் பின்னால் மறைபட்டுக்கிடந்த சூரியனையும், வெளிச்சத்தையும் விடுவித்தான் என்று சில ரிக்குகள் கூறுகின்றன; அதே சமயம் இந்திரன் இரவின் இருளிலிருந்து விடியற்காலையும் ஸூரியனையும் விடுவித்தான் என்றும் வேறுசில ரிக்குகள் கூறுகின்றன.

விருத்திரனுடைய வரலாற்றில் நீரையும் ஸூரியனையும் தவிர, ஸோமரசமும் கூறப்படுகிறது. ஒரு ரிக் பேசுகிறது "இந்திரன் வலிமையுள்ள விருத்திரனை விண் வெளியிலிருந்து விரட்டிய பொழுது, நெருப்பு கொழுந்து விட்டெரிந்தது. சூரியன் ஒளியை வீசினான். இந்திரனுக்கு விருப்பமான ஸோமரசம் பிரகாசித்தது; மக்கள் அவனுடைய சக்தி மிகுந்த செய்கையைப் பாராட்டினார்கள்." (ரி.வே.VIII 3.20). அசுரனை வென்ற பொழுது, இந்திரன் ஸோமரசத்தைக் குடிக்க விரும்பினான். விருத்திரனை வென்றவுடன் ஸோமரசம் இந்திரனுடைய சொந்தப் பொருளானது. அப்பொழுது அவன் இனிப்பான ஸோமரசத்திற்கு அரசனானான்.

அசைந்து கொண்டிருந்த மலைகளையும், சமவெளிகளையும் நிலைத்திருக்கும் படி இந்திரன் செய்தான். அவன் ஒளி வீசும் விண் வெளியை நிலை நிறுத்தினான். ஒரு தேரின் இரு சக்கரங்களையும் அச்சினால் பிரித்து நிலையாக வைத்திருப்பது போல, அவன் விண்ணையும் மண்ணையும் பிரித்து நிலை நாட்டினான். ஒரு ரிக் கூறுகிறது "விருத்திரனைக் கொல்ல அவன் பிறந்த பொழுது, இந்திரன் விசாலமான பூமியைப் பரப்பி விண்ணையும் தாங்கினான்." (ரி.வே.VIII. 48.5). மறைத்து வைக்கப்பட்டிருந்த விண்ணையும் மண்ணையும் அவன் கண்டுபிடித்ததாக ஒரு ரிக் கூறுகிறது.

முன்காலத்தில் மலைகளுக்குப் பறவைகள் போல சிறகுகள் இருந்ததாகவும், அவைகள் இஷ்டம் போலப் பறந்து

விரும்பிய இடத்தில் தரையில் இறங்கியதாகவும் சில வரலாறுகள் கூறுகின்றன. அதனால் மக்களுக்கும் பிராணிகளுக்கும் மிகவும் துன்பம் விளைந்தது. இதைக் கண்டு இந்திரன் மலைகளின் சிறகுகளை வெட்டி அவைகளைப் பறக்க முடியாதபடி செய்து விட்டான். இந்தச் சிறகுகளே மேகங்களாயின. இந்த வரலாறை ரிக் வேதம் கூறவில்லை. பிற்கால வேத நூல்களான மைத்ராயனி சம்ஹிதையும் (கிருஷ்ண யஜுர் வேதம்), வாஜஸநேயி சம்ஹிதையும் (சுக்ல யஜுர் வேதம்) இதைச் சொல்லுகின்றன. வேதகாலத்தைப் பற்றி வந்த ராமாயணம் முதலிய நூல்கள் இக்கதையை விரிவாகவும் சுவையாகவும் பேசுகின்றன.

இடியுடன் கூடிய மின்னலைக் கையில் ஏந்தி, விண் வெளியில் சஞ்சரிக்கும் அசுரனை அழிக்கும் இந்திரனை போர் வீரர்கள் அடிக்கடி வேண்டுவது பொருத்தமே. தங்களுடைய போர்களில் உதவிக்காகப் போர் வீரர்கள், மற்ற தெய்வங்களை விட இந்திரனையே அதிகமாக அழைக்கிறார்கள். "வெகு நாட்கள் உபயோகத்திலிருந்த ஒரு ஆடையை எப்படி சிறிது சிறிதாக நைந்து கிழிந்து போகுமோ, அப்படி இந்திரன் ஐம்பதாயிரம் பழங்குடி மக்களைக் கொன்று அவர்களுடைய கோட்டைகளைத் தவிடு பொடியாக்கினான்" என்று ரிக் வேதம் சொல்லுகிறது. (ரி.வே.IV. 16.13) அவன் பழங்குடி மக்களை அடிமைகளாக்கி, ஆரியர்களுக்கு நிலத்தைக் கொடுத்தான்.

தன்னை வழிபடுவர்களை இந்திரன் காப்பாற்றுகிறான். அவர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரிகிறான். அவர்களுக்குப் பக்கபலமாக இருக்கிறான். அவர்களைக் காக்கும் மதில் சுவராக விளங்குகிறான். அவனுடைய தோழன் கொல்லப்படுவதுமில்லை, வெல்லப்படுவது மில்லை, தன்னைத் தொழுபவர்களுக்கு அவன் ஒரு தோழனாகவும், சகோதரனாகவும், தகப்பனாகவும், தாயாகவும் விளங்குகிறான். வேள்வி புரியாதவர்களை

அவன் விரும்புவதில்லை; வேள்விகள் புரிந்து அவனை வேண்டுபவர்களுக்கு அவன் பொருளையும், செல்வத்தையும் கொடுக்கிறான். அவனுடைய இரு கைகளும் செல்வம் நிறைந்தே காணப்படுகின்றன. அவன் பொருள்கள் நிரம்பிய ஒரு பொக்கிஷமாக விளங்குகிறான். ஒருவன் பழுத்த பழங்களை பறிப்பதற்கு துரட்டிக் கோலால் அசைப்பது போல, நீ எங்களுக்கு வேண்டுமளவு பொருள்களை வழங்கு' என்று ஒரு ரிக் இந்திரனை வேண்டுகிறது. (ரி.வே.III 45.20). "அஞ்சத்தகும் காளையை ஒத்த நீ கொடுக்கும் பொழுது, மற்ற தெய்வங்களாலும், மனிதர்களாலும் அதைத்தடுக்க இயலாது." (ரி.வே.VIII. 70.3)

அவன் செல்வத்தின் சமுத்திரமாக விளங்குகிறான். எல்லா ஆறுகளும் கடலை நோக்கி ஓடுமாப் போல, செல்வத்தின் வழி அவனை நோக்கிப் போகிறது. ஒரு ஸூக்தத்தில், பசுமாடுகளையும், தேர்களையும், குதிரை களையும், கடலில் உள்ள எல்லாச் செல்வங்களையும், மக்களிடையே அதற்கு நிகரில்லாத ஒரு பெரிய வீட்டையும், மற்றும் விரும்பிய எல்லா வரங்களையும் கொடுக்கும்படி இந்திரனை வேண்டுகிறார்கள். (ரி.வே.X. 47). போர்களில் அடைந்த வெற்றிகள் மூலமாகக் கிடைத்த பசுக்களையும் பொருள்களையும் அவன் தாராளமனப் பான்மையுடன் வேண்டுவோருக்கு வழங்கிச் சிறந்த கொடையாளியாகத் திகழ்ந்தான்.

விடியற்காலையைக் குறிக்கும் உஷஸ் என்ற தேவதையுடன் அவன் போரிட்டதை சில ரிக்குகள் சொல்லுகின்றன. உஷஸுடைய தேரை இந்திரன் உடைத்தாக ஒரு ரிக் சொல்லுகிறது. உஷஸுடைய மெல்லச் செல்லும் குதிரைகளை இந்திரனுடைய வேகமாகப் போகும் குதிரைகள் விரட்டியதாக ஒரு ரிக் கூறுகிறது. இந்திரனுடைய இடி, மின்னலைக் கண்டு அஞ்சி நடுங்கிய உஷஸ் தன்னுடைய தேரை விட்டு ஓடினாள் என்று மற்றுமொரு ரிக் பேசுகிறது.

விடியற்காலை வரும் இடியுடன் கூடிய புயல்காற்றை இது குறிப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

இந்திரனுக்கும் ஸூரியனுக்கும் நடக்கும் ஒரு பூசலைப்பற்றி ரிக் வேதம் பேசுகிறது. இந்திரனுடைய தேரை இழுக்கும் வேகமாகச் செல்லும் குதிரையான ஏதசவிற்கும், தன்னுடைய மஞ்சள் நிறக் குதிரைகளால் இழுக்கப்படும் தேரில் போகும் ஸூரியனுக்கும் ஒரு போட்டி நடக்கிறது. முன்னால் போகும் ஸூரியனை இந்திரன் தடுக்கிறான். தேர் ஒரு சக்கரத்தை இழக்கிறது. இந்திரன் ஸூரியனுடைய குதிரைகளை நிறுத்தியதாக ஒரு ரிக் கூறுவது இந்தக் கதையுடன் தொடர்பு உள்ளதாகத் தோன்றுகிறது. (ரி.வே.X. 92.8)

இந்திரனுடைய பசுக்களைப் பணிகள் என்ற அரக்கர்கள் திருடிக் கொண்டு போய் ஒளித்துவைக்கிறார்கள். மகரிஷி அங்கிரஸின் அறிவுரைப் படி இந்திரன் பசுக்களைத் தேடிக் கொணரும்படி தன்னுடைய வேட்டை நாயான சரமாவிடம் கூறுகிறான். சரமா ஒரு நிபந்தனையுடன் ஒப்புக்கொள்ளு கிறது. பசுக்களைத் தேடிக் கொண்டு வந்த பிறகு, தன்னுடைய இரு குட்டிகளுக்கும் பசுக்களின் பாலைக் கொடுக்க வேண்டும் என்பது சரமா விதித்த நிபந்தனை. இந்திரன் இதனை ஏற்றுக் கொள்கிறான். சரமா தேடிப் போய் பசுக்களை ஒளித்து வைத்திருந்த இடத்தைக் கண்டு பிடிக்கிறது. சரமாவிற்கும் பணிகளுக்கும் நடக்கும் உரையாடல் ரிக் வேதத்தில் ஒரு ஸூக்தமாக அமைந்துள்ளது. (ரி.வே.X. 108)

இந்த ஸூக்தத்தில் திருடிவந்த பசுக்களைச் சண்டை போடாமல் இழக்க மாட்டோம் என்றும் தங்களுடைய ஆயுதங்கள் கூரானவை என்றும் பணிகள் கூறுகிறார்கள். சரமா தன்னுடைய கட்சியின் பலத்தை எடுத்துக் கூறுகிறது. கடைசியில் சரமா பசுக்களை மீட்டுவருவதாகக் கதை முடிகிறது.

இக்கதையின் உள்ளுரைப் பொருளை சற்றுக் கவனிப்போம். இந்திரனின் பசுமாடுகள் சூரிய வெளிச்சத்தைக் குறிக்கின்றன. இரவைக் குறிக்கும் பணிகள் சூரிய வெளிச்சத்தைத் திருடிக் கொண்டு போய் அதை ஒளித்து வைக்கிறார்கள். விடியற்காலையைக் குறிக்கும் சரமா இருட்டிலிருந்து வெளிச்சத்தை மீட்டு வருகிறது.

வலன் என்ற அசுரனும் பசுக்களைத் திருடியதாக ரிக் வேதம் பேசுகிறது. இந்த வலன் விருத்திரனுடைய சசோதரன். அவன் பசுக்களை ஒரு குகையில் அடைத்ததாகவும், இந்திரன் குகையைத் தகர்த்து வலனைக் கொன்று பசுக்களை மீட்டதாகவும் ரிக் வேதம் சொல்லுகிறது. இங்கு பசுக்கள் வெளிச்சத்தையும் நீரையும் குறிக்கின்றன. வலனுடைய குகை கரு மேகங்களைக் குறிக்கின்றன. இந்திரன் மேகங்களைத் தகர்த்து மழை நீரை வெளிப்படுத்துகிறான்; அதே சமயம் அவன் மேகங்களின் பின்னால் மறைந்திருந்த சூரிய வெளிச்சத்தையும் வெளிக் கொணர்கிறான்.

ரிக் வேதத்தில் பல இடங்களில் இந்திரன் பழங்குடி மக்களுடன் சண்டை இட்டதாக வேதம் கூறுகிறது. இந்தப் பழங்குடி மக்கள் கறுப்பு நிறமானவர்களாகவும், சப்பை மூக்கு உள்ளவர்களாகவும் இருந்தார்கள். இந்திரன் எளிதில் இவர்களை வெல்லுகிறான். சில பழங்குடி மக்களின் தலைவன் சுதாஸ் என்பவன், அரசன் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டு, வஸிஷ்டரின் உதவியோடு வேள்விகள் புரிந்து, இந்திரன் உதவியைப் பெற்று, எதிரிகளான பத்து அரசர்களை வென்றான். இந்த வரலாறை மிகவும் விரிவாக ரிக் வேதம் ஏழாவது மண்டலத்திலும் மற்றும் சில ரிக்குகளிலும் பேசுகிறது.

அபாலா என்ற பெண்ணின் கதை ரிக்வேதத்தில் எட்டாவது மண்டலத்தில் எண்பதாவது ஸூக்தமாக அமைந்திருக்கிறது. அத்திரி மகரிஷியின் வம்சத்தைச் சேர்ந்த

அவள் சரும நோயால் அவதிப்பட்டாள்; அதன் காரணமாக, அவள் கணவன் அவளைப் பிறந்தகத்திற்கு அனுப்பிவிடு கிறான். ஒரு நாள் அவள் ஆற்றுக்குக் குளிக்கச் செல்லும் பொழுது, வழியில் ஒரு ஸோமக் கொடியைக் கண்டாள். உடனே அதன் இலைகளைப் பறித்து, வாயில் போட்டுப் பற்களால் மெல்லலானாள். அச்சத்தத்தை இந்திரன் கேட்டுக், பற்கள் ஸோமரசத்தைப் பிழியும் சப்தம் என்று எண்ணி, அங்கு வந்தான். அபாலா ஸோமரசத்தை இந்திரனுக்கு அர்ப்பணித்தாள். மகிழ்ச்சியடைந்த இந்திரன் அவளுக்கு வேண்டிய வரங்களை அளித்தான். அபாலா, தன் தப்பனாரின் வழுக்கைத் தலையில் முடி வளர வேண்டும் என்றும், தன் தகப்பனின் காய்ந்து போன வயல்களில் பயிர்கள் வளர வேண்டும் என்றும், தன் சரும நோய் குணமடைய வேண்டும் என்றும் மூன்று வரங்களைக் கேட்டாள். அபாலா கேட்ட முதலிரண்டு வரங்களையும் அருளி, இந்திரன் அவளுடைய நோயை வேலி ஓணான், உடும்பு, பச்சோந்தியாக மாற்றி அவளைக் குணப்படுத்தினான். (இக்கதை சில ரிக்வேதப் பதிப்புகளில் எட்டாவது மண்டலம் தொண்ணூற்றொன்னாவது ஸூக்தமாக அமைந்துள்ளது).

ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் உள்ள எண்பத்தி ஆறாவது ஸூக்தம் இந்திரனுக்கும், இந்திராணிக்கும், விருஷாகபி என்பவனுக்கும் நடக்கும் உரையாடலாக அமைந்துள்ளது. இந்த வருஷாகபி யார் என்று தெளிவாகத் தெரிய வில்லை. ரிக்வேதத்திற்கு உரை எழுதிய ஸாயனாசாரியார் விருஷசபி இந்திரனின் மகன் என்று திட்டவட்டமாகக் கூறுகிறார். வடமொழியில் 'கபி' என்றால் குரங்கு என்று பொருளாகும்; இதை வைத்து, விருஷாகபி ஒரு மனிதக் குரங்கு என்ற கருத்தும் நிலவுகிறது. இது அஸ்தமிக்கும் மாலை ஸூரியனாகவும், நீராவியை மேலே இழுத்து மூடு பனியைப் பரப்பும் ஸூரியனாகவும்

சிலர் கருதுகிறார்கள். பிரசித்தி பெற்ற வடமொழி—ஆங்கில அகராதியை இயற்றிய ஆப்தே என்ற பண்டிதர் இச்சொல் ஸூரியனுக்கும், விஷ்னுவிற்கும், சிவனுக்கும், இந்திரனுக்கும் அக்கினிக்கும் பொருந்தக் கூடியது என்கிறார். (விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் இது 101வது பெயராக அமைந்திருக்கிறது குறிப்பிடத்தக்கது). பெயரைப்பற்றியே இவ்வளவு குழப்பம் நிலவும் பொழுது, இதைப்பற்றிய வரலாற்றைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.

ஆரியர்களில் ஐந்து பிரிவுகள் ரிக் வேதத்தில் காணப்படுகின்றன. இவர்களிலும் முக்கியமாக துர்வாசர் யது என்ற இரு தலைவர்களின் பெயர்களை அடிக்கடி காண்கிறோம். ஒரு ரிக், இந்திரன், புயலினால் கொந்தளிக்கும் தண்ணீரை, ஒரு ஆறுபோல, கீழே ஓடச் செய்தான் என்றும், அப்பொழுது அவன் துர்வாசனையும், யதுவையும் வெள்ளத்திலிருந்து காப்பாற்றிக் கரைக்குக் கொணர்ந்தான் என்றும் கூறுகிறது. (ரி.வே.I. 174.9)

ரிக் வேதம் வரட்சியை உண்டு பண்ணும் பல அசுரர்களின் பெயர்களைச் சொல்லுகிறது. விருத்திரனைத் தவிர, அஹி, சுஷ்ணன், நமுசி, பிப்ரு, சம்பரன், உரணா முதலியவர் பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன: இவர்களை எல்லாம் இந்திரன் வென்றதாக வேதம் கூறுகிறது.

இந்த வரலாறுகளிலிருந்து நாம் காண்பது முக்கியமாக இந்திரனுடைய அபார வலிமையும், அவன் இயற்கைச் சக்திகளை அடக்கி ஆள்வதும் ஆகும். சக்தி வாய்ந்த செயல்கள் தான் அவனுடைய குணாதிசயம்; அதே சமயம் செயல்கள் புரியாமல் ஆட்சி செலுத்துவது வருணனின் இயல்பாகும். இந்திரன் உலகத்தின் சக்கரவர்த்தியாக விளங்குகிறான்; ஆனால் அவன் உலகின் சாச்வதமான சட்டதிட்டங்களை நிலைநாட்டு பவன் அல்ல; நீதியையும் நியாயத்தையும் அறநெறியையும் கடைப்பிடிப்பவனாகவும்

இருக்கவில்லை. எப்பொழுதும், எல்லாப் போர்களிலும் வெற்றிகாணும் வலிமை வாய்ந்த வீரனாக மட்டுமே அவன் விளங்கினான்; தாராள மனப்பான்மையுள்ள அவன் மக்களுக்கு எல்லாப் பொருள்களையும் வாரி வழங்கிய வள்ளலாக விளங்கினான்; ஸோமயாகங்களினால் பெரிதும் உற்சாகமும் மகிழ்ச்சியுமடைந்த அவன், வேள்வி புரியும் அந்தணர்களுக்கு செழுமையான பரிசுகளை வழங்கினான். ரிக்குகள், அவனைப் பற்றிப் பேசும் பொழுது, அறநெறியில் வருணனைப் போல அவன் மேலானவன் என்று கூறுவதில்லை.

இந்திரன் வேள்விகளில் ஸோமரசம் குடிப்பதைப் பற்றிய குறிப்புகளை நாம் ரிக் வேதத்தில் அடிக்கடி காண்கிறோம். மித மிஞ்சிய ஸோம பானத்தால் இந்திரன் அவதிப்பட்ட தாகவும் நாம் காண்கிறோம்.

இந்திரன் காம லீலைகளில் ஈடுபட்டதாக ரிக் வேதம் கூறுவில்லை; ஆனால் சில பிராம்மண நூல்கள் அவன் கௌதம மகரிஷியின் மனைவியான அகல்யையின் காதலன் என்று சொல்லுகின்றன. பிற்காலத்தில் இது ராமாயணம் முதலிய நூல்களில் விரிவாகக் கூறப்படுவதை நாம் காண்கிறோம்.

அற நெறியில் உயர்ந்த வருணன் ரிக் வேத ஆரம்ப காலத்தில் தெய்வங்களுக்கிடையே முதலிடம் வகித்தான்; பிறகு படிப்படியாக வலிமையும் சக்தியும் வாய்ந்த இந்திரன் வருணனுக்கு மேலே போய் முதலிடத்தைப் பிடித்தான். பின்னால் பிராம்மண – இதிஹாஸ – புராண காலங்களில் அவன் தேவர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கினான் என்றும் நாம் காண்கிறோம்.

இந்திரனும் வருணனும் தத்தம் பெருமைகளைக் கூறிக் கொண்டு, ஒவ்வொரு வரும் தான் தான் மக்களுக்கெல்லாம் அரசன் என்று சொல்லும் சுவையான உறையாடலை நாம்

ரிக் வேதத்தில் ஒரு ஸூக்தத்தில் காண்கிறோம். (ரி.வே.IV. 42) இதில் ஏழாவது ரிக்கில், இதைப் பாடுபவர், இந்திரன் தான் வருணனை விட மேலானவன் என்று குறிப்பால் உணர்த்தினார். ஆனால் பின் வரும் மூன்று ரிக்குகளிலும் இருவரையும் சேர்த்தே சமமாகப் புகழ்கிறார். இன்னுமொரு இடத்தில் வருணன் உலக மக்களின் அரச பதவியை இழந்ததால், இந்திரன் வருணனுக்கு அதற்குப் பதிலாக, ஆன்ம விசாரத்திலும், அற நெறியை அமுல் ஆக்குவதிலும் முதலிடத்தை அளிக்கிறான் என்று காண்கிறோம். (ரி.வே.X. 124.5)

பாரசீக நாட்டில் இருந்த ஜொராஸ்டர் என்ற மதத்தலைவர் இயற்றிய நூலான ஜெண்ட் அவஸ்தாவில் நாம் இந்திரனின் பெயரைப் பார்க்கிறோம். ஆனால் இந்நூல் அவனைத் தெய்வமாக இல்லாமல், ஒரு அசுரனாகக் காட்டுகிறது!

பல ரிக்குகளில் இந்திரன் புகழப்பட்டாலும், சில இடங்களில் அந்தப் புகழ்ச்சி மிக உயர்ந்த நிலையை அடைந்து, அவன் தான் தெய்வங்களுக்குள் முதலிடம் வகிக்கிறான் என்பதை உறுதிப்படுத்துகிறது. "எல்லை இல்லா உலகின் எல்லையாக நீ விளங்குகிறாய்! மேலுலகிலுள்ள பூஜிக்கத்தக்க தெய்வங்களுக்கெல்லாம் தலைவனாக விளங்குகிறாய்! விண்ணுக்கும் மண்ணுக்கும் நடுவிலுள்ள இடத்தை நீ, உன்னுடைய மஹிமையால், நிரப்புகிறாய்! உனக்கு நிகர் ஒருவரும் இல்லை!" (ரி.வே.I. 52.13)

"உன்னுடைய மகிமை மூன்று விதமாகக் காணப்படுகிறது; ஒரு பக்கம் இந்த மூன்று உலகங்களும் தென்படுகின்றன; மற்ற பக்கம், நெருப்பு, ஸூரியன், மின்னல் என்ற மூன்று ஒளிகள் பளிச்சிடுகின்றன. நீ ஒருவனே எல்லா உலகங்களையும் தாங்குபவன். நீ ஆதி இல்லாதவன், எதிரிகளில்லாதவன்". (ரி.வே.I. 102.8). இப்படியாக இந்திரன் வேதம் போற்றும் தெய்வங்களில் முதலிடத்தைக் தொடர்ந்து வகிக்கிறான்.

## 3.2 திருத ஆப்த்தியன்

இந்திரனுடன் சேர்ந்தே இந்தத் தெய்வத்தை ரிக்குகள் துதிக்கின்றன. இன்னும் சில ரிக்குகள் இவனை அக்கினியுடனோ, அல்லது மருத்துக்களுடனோ அல்லது ஸோமனுடனோ சேர்த்தே துதிக்கின்றன. இந்திரன் விருத்திரனுடன் போரிடும் பொழுது இவன் இந்திரனுக்கு உதவுகிறான்.

ஒரு ரிக் கூறுகிறது: 'வலிமையுள்ள மருத்துக்கள் போகும் பொழுது, மின்னல் பளிச் என மின்னுகிறது; திருதன் இடி முழக்கத்துடன் கர்ஜிக்கிறான்; சுற்றிலுமுள்ள தண்ணீரும் பலமாக ஓசை செய்கிறது.' (ரி.வே.V. 54.2) இங்கு ஸாயனர் திருதன் மேகமாகவோ மருந்துக்களாகவோ இருக்கலாம் எனக் கூறுகிறார்.

இன்னுமொரு ரிக் பேசுகிறது: 'உலோகத்தை உருக்குபவன் எப்படித் தீயில் காற்றை ஊதி அதை நன்கு எரியும் படி செய்வானோ, அப்படியே விண்ணின் உயரத்திலுள்ள திருதன் காற்றை ஊதி அக்கினியைப் புகையுடன் கூடச் சுடர் விட்டெரிந்து மேலெழும்படி செய்கிறான்.' (ரி.வே.V. 9.5)

ஒரு சமயம் திருதன் பசுக்களை ஓட்டிச் செல்லும் பொழுது ஒரு ஓநாயின் குட்டிகள் அவனைக் கிணற்றில் தள்ளி விட்டுப் பசுக்களை ஓட்டிச் சென்று விட்டன. திருதன் கிணற்றில் இருந்து தவித்தான்; மற்ற தெய்வங்களைத் தொழுதான் எப்படி விரோத மனப்பான்மையுள்ள சக்களத்திகள் தங்களுடைய கணவனை நாலா பக்கமும் சூழ்ந்து கொண்டு துன்புறுத்துவார்களோ, அப்படிக் கிணற்றின் நாற்புறச் சுவர்களும் தன்னை துன்புறுத்துவதாக அவன் தெய்வங்களிடம் கூறுகிறான்; எப்படி எலிகள் ஒரு நெசவாளியின் நூல்களைத் தின்று விடுமோ அப்படிக்

கவலைகள் தன்னைத் துயருக்குள்ளாக்குவதாகவும் அவன் கூறுகிறான். கிணற்றில் ஸோமக் கொடி இருப்பதைக் கண்டு, அதை எடுத்துப் பிழிந்து, ஒரு சிறிய வேள்வியைக் கிணற்றிலேயே தொடங்குகிறான். பிருஹஸ்பதியின் தூண்டுதலின் மேல் எல்லத் தெய்வங்களும் வந்து தங்கள் பங்கான ஸோமரசத்தை அருந்துகிறார்கள். பிறகு திருதனை கிணற்றிலிருந்து மேலே வர உதவுகிறார்கள். (ரி.வே.I. 105. பிருஹத் தேவதா; III. 132)

கிணற்றில் விழுந்து தத்தளிக்கும் பொழுது திருதன் மனதில் பல நினைவுகள் தோன்றுகின்றன. ஒரு ரிக்கில் அவன் கூறுகிறான். 'மக்கள் தாங்கள் விரும்பியதை வேண்டிப் பெறுகிறார்கள் அல்லவா? மனைவி கணவனைத் தழுவுகிறாள்; அன்பின் அரவணைப்பில் ஒருவருக்கொருவர் காதலின் ஆனந்தத்தைப் பரிமாறிக் கொள்ளுகிறார்கள்.' (ரி.வே.I. 105.2)

ஸோமனுடன் திருதனை இணைத்துச் சில ரிக்குகள் உள்ளன. ஸோமனுடைய பெண்கள் (விரல்கள்) கற்களால் ரசத்தைப் பிழிந்து சொட்டுச் சொட்டாக இந்திரனுக்குக் குடிக்கக் கொடுக்கிறார்கள் ரசத்தைப் பிழியும் பொழுது ஸோமன் திருதனைக் கூப்பிடுகிறான்.

அவன் சிறந்த அறிவாளி என்றும் நீண்ட ஆயுளைக் கொடுப்பவன் என்றும் வேத நூல்கள் கூறுகின்றன. யாஸ்கர் திருதனைத் தெய்வங்கள் வரிசையில் சேர்க்கவில்லை; விண், மண், காற்று மண்டலம் ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள இந்திரனைத் திருதன் என்ற சொல் குறிக்கிறது என்கிறார் யாஸ்கர்.

திருத ஆப்த்தியன் என்ற பெயரில், வட மொழிச் சொல்லான ஆப: என்பதிலிருந்து ஆப்த்தி என்ற சொல் உருவாகியிருக்கிறது. ஆப: என்றால் நீர் என்று பொருளாகும். ஆப்த்தியன் என்றால் நீரின் மைந்தன் எனப் பொருள் என்று

ஸாயனர் கூறுகிறார். அப்படியானால், திருதனும் அபாம்நபாத் என்ற மற்றொரு தெய்வமும் ஒன்றேயாகும்.

ரிக் வேதத்தில் திருதனைப் பற்றித் தெளிவாக ஒன்றும் காணவில்லை. அவன் மின்னலைக் குறிக்கிறான் என்று பலர் கருதுகிறார்கள்.

* * *

## 3.3 அபாம் நபாத்

வடமொழியில் 'ஆப': என்ற சொல்லிற்கு நீர் எனப் பொருளாகும்; 'நபாத்' என்ற சொல் பிள்ளை, பேரன் முதலிய சந்ததிகளைக் குறிக்கும். (பிருஹத் தேவதா III.*1*). ஸாயனாசாரியார் தன் உரையில் கூறுகிறார். "நீர் மரங்களை வளர்க்கிறது; ஆகையால் மரங்கள் நீரின் மகன்களாகும். மரக்கட்டைகள் ஒன்றோடொன்று உராய்வதால் தீ உண்டாகிறது; ஆகையால் தீ மரங்களின் பிள்ளையாகவும் நீரின் பேரனாகவும் கருதப்படுகிறது. எனவே 'அபாம் நபாத்' என்ற சொல் நீரின் பேரனான அக்கினியைக் குறிக்கும்". (ரி.வே.II *35*)

இன்னுமொரு நூல் கூறகிறது: "கோடை மாதங்களின் முடிவில் அபாம் நபாத் தண்ணீரின் (மேகங்களின்) நடுவே உண்டாகிறது. ஆகையால் இது நீரின் மகன் என்று சொல்லப்படுகிறது." (பிருஹத் தேவதா II. *55*). இது அக்கினியின் ஒரு உருவமான மின்னலைக் குறிக்கும்.

நீராவியாகிய மேகங்களிலிருந்து மின்னல் உண்டாகிறது. ஆகையால் மின்னல் 'நீரின் மைந்தன்' (அபாம் நபாத்) என்ற பெயரை அடைகிறது.

குழந்தையாகிய அபாம் நபாத்திற்கு மூன்று தாய்மார்கள் இருக்கிறார்கள். அவர்கள் இலா, ஸரஸ்வதி, மற்றும் பாரதி

ஆவார்கள். அவன் அவர்களிடம் தாய்ப்பாலை அருந்து கிறான்; அப்பொழுது அவர்கள் அவனை முத்தமிடு கிறார்கள். எரிபொருள் இல்லாமலேயே அவன் நீரில் பிரகாசிக்கிறான். மின்னலை உடுத்திய அபாம் நபாத் அலை பாயும் தண்ணீரின் மடியில் ஏறுகிறான்; அவனைத் தூக்கிக் கொண்டு வேகமாகப் போகும் பொன்னிறத் தண்ணீர் அவனைச் சுற்றுகிறது. பொன் நிறமான அபாம் நபாத் பொன்நிற கர்பத்திலிருந்து வந்து, உட்கார்ந்து கொண்டு, தன்னை வணங்குபவர்களுக்கு உணவளிக்கிறான். உயரத்திலிருந்து பிரகாசிக்கும் மைந்தனாகிய அவனுக்கு நெய்யாகிய உணவை எடுத்துக் கொண்டு தண்ணீர் அவனைச் சுற்றுகிறது. விண்ணிலிருக்கும் அபாம் நபாத் மக்கள் அறியாமலே, வளருகிறான். மண்ணிலிருக்கும் அக்கினியை இளம் பெண்கள் (விரல்கள்) மூட்டுகிறார்கள். பொன்நிறமான நெய் அவனுடைய உணவு. கறவைப் பசு அவன் வீட்டில் இருக்கிறது; அவன் தெய்வீக அமிர்தத்தை அதிகமாக்குகிறான்; நல்ல உணவை உண்கிறான். உலகிலுள்ள எல்லாவற்றையும் அவன் உண்டாக்கியிருக்கிறான்; அவைகளெல்லாம் அவனுடைய கிளைகளாகும். (ரி.வே.II.35)

மேலே குறிப்பிட்டுள்ள ஸூக்தத்தின் (II.35) கடைசி ரிக் அக்கினியை அழைப்பதாக உள்ளது. பாசுரத்தின் மற்ற எல்லா ரிக்குகளும் அபாம் நபாத்தையே குறிக்கின்றன. பாசுரத்திற்கு அபாம் நபாத் தேவதையாக விளங்குவதால் அக்கினியும் அபாம் நபாத்தும் ஒன்றே என்று ஆராய்ச்சி யாளர்கள் கருதுகிறார்கள். சில இடங்களில் இவர்களிருவரும் ஒன்றாகவும் சில இடங்களில் வெவ்வேறாகவும் வேத நூல்கள் பேசுகின்றன.

மக்கள் அறியாமலேயே அவன் வளருகிறான் என்று கூறியிருப்பதால், மேகத்தில் மறைந்திருக்கும் மின்னலைக் குறிப்பதாகும். அக்கினி மூன்று உருவங்களில் தென்படுகின்

றான். விண்ணில் அவன் ஸூரியனாகப் பிரகாசிக்கிறான். மண்ணில் அவன் வீடுகளில் வேள்வித்தீயாக விளங்குகிறான். நடுவில் உள்ள காற்று மண்டலத்தில் அவன் தண்ணீரில் (மேகங்களில்) மூட்டப்பட்டு அபாம் நபாத்தாக (மின்னலாக) உள்ளான்.

* * *

## 3.4 மாதரிச்வன்

ரிக் வேதத்தில் ஒரு முழு ஸூக்தம் கூட இவனைப் பற்றியதாகக் காணவில்லை; ஆங்காங்கே சில ரிக்குகள் மட்டும் இவன் பெயரைக் கூறுகின்றன. இவைகளிலிருந்து இவனுக்கும் அக்கினிக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளதாகத் தெரிகிறது. மாதரிச்வன் விண்ணிலிருந்து அக்கினியை மனிதர்களுக்காகக் கொணர்ந்தான் என்று சில ரிக்குகள் கூறுகின்றன. இன்னும் சில ரிக்குகள் விவஸ்வானுடைய தூதனாக வெகு தூரத்திலுருந்து அக்கினியைக் கொண்டு வந்தான் என்று சொல்லுகின்றன. சில ரிக்குகள் அக்கினியையே மாதரிச்வன் என்று அழைக்கின்றன. ஒரு ரிக் இவனை பிருஹஸ்பதியின் மற்றொரு உருவம் என்கிறது. யாங்கர் இது வாயுவின் மற்றொரு பெயர் என்கிறார். (நிருக்தம் VII. 26). ஆப்தேயின் அகராதி மாதரிச்வன் என்றால் காற்று என்று பொருள் என்று கூறுகிறது; இது வேத காலத்திற்குப் பிற்கால நூல்களில் உள்ள பொருளாகும்.

அக்கினியைப் பற்றிய ரிக் ஒன்று கூறுகிறது: ‘விண்ணின் கர்ப்பத்தில் அவன் இருக்கும் பொழுது, தநூநபாத் என்ற பெயர் அவனுக்கு உள்ளது; பல உருவங்களில் பிறக்கும் பொழுது அவன் நாரசம்ஸன் என்ற பெயரை அடைகிறான். தாயிடத்தில் உருவத்தைப் பெற்ற பொழுது அவன் மாதரிச்வன் ஆகிறான்; போகும் வழியில் அவன் வேகமாக அடிக்கும் காற்றாக ஆகிறான்’ (ரி.வே.III. 29.11) பொருள்

சற்றுக் குழப்பமாக உள்ளது; ஆனால் அக்கினிக்கும் மாதரிச்வனுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு இதிலிருந்து புலனாகிறது. பிற்காலத்தில் காற்று என்ற பொருளை மாதரிச்வன் அடைந்ததற்கும் இந்த ரிக்கில் குறிப்பு உள்ளது.

அக்கினி, ஸோமன் ஆகிய இரு தெய்வங்களையும் குறித்துப் பாடும் ஸூக்தத்தில், ஒரு ரிக் சொல்லுகிறது. 'உங்களில் ஒருவரை மாதரிச்ஸச்வன் விண்ணிலிருந்து கொணர்ந்தான்; மற்றதைக் கழுகு மலையிலிருந்து பிடுங்கியது. ....' (ரி.வே.I. 39.6)

இன்னுமொரு ரிக்: 'வலிவுள்ள தெய்வங்கள் வெள்ளத்தின் அடியில் ஒளிந்திருந்த அக்கினியைக் கண்டு பிடித்துக் கொணர்ந்தார்கள். மக்கள் புகழத்தக்க அரசனை வணங்கினார்கள். விவச்வானுடைய தூதனான மாதரிச்வன் வெகு தூரத்திலிருந்து வைச்வாநரனான அக்கினியைக் கொண்டு வந்தான்.' (ரி.வே. 8.4)

மாதரிச்வன் தொட்டதால் ஸோமரசமும் உணவும் சுத்தமாகவும் இனிப்பாகவும் ஆனதாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.IX 67.31)

* * *

## 3.5 அஹி புத்திநியன்

மிகக் குறைந்த அளவிலே ஒரு சில ரிக்குகளில் மட்டும் ரிக் வேதத்தில் இந்தப் பெயரைக் காண்கிறோம். வடமொழியில் அஹி என்ற சொல்லிற்குப் பாம்பு என்ற பொருளாகும். யாஸ்கர் புத்ள என்ற சொல்லிற்குக் காற்று என்று பொருள் கூறுகிறார். (நிருக்தம் X. 44). ஆக, அஹி புத்திநியன் என்றால் காற்று மண்டலத்திலுள்ள பாம்பு என்று பொருள்படும்.

ரிக் வேதத்தில் இவனைப் பற்றிய விவரங்களைக் காண்கிறோம்: 'வெள்ளத்தில் பிறந்த பாம்பை நான் பாக்களால் புகழ்ந்து பாடுகிறேன். காற்று மண்டலத்தின் நடுவில், வீசும் காற்றின் கீழே அவன் உட்கார்ந்திருக்கிறான். அஹி புத்திநியன் ஒரு பொழுதும் நமக்குக் கெடுதல் செய்யாமலிருக்கட்டும். நம்பிக்கைக்குப் பாத்திரமான இந்த ஏழையின் வேள்விக்கு அவன் ஒரு பொழுதும் வராமலிருக்கக் கூடாது.' (ரி.வே.VII. 34. 16.17)

இன்னும் ஓரிரண்டு ரிக்குகளிலும் கெடுதல் செய்யாமல் இருக்கும்படி அவனை வேண்டுகிறார்கள். அவனிடம் செல்வத்தையோ, மற்ற வரங்களையோ மக்கள் வேண்டுவதில்லை. இன்னும் சில ரிக்குகளிலிருந்து அவனுக்கு அக்கினியுடன் தொடர்பு உள்ளதாகவும், அபாம் நபாத்தை ஒத்திருப்பதாகவும் அறிகிறோம்.

* * *

## 3.6 அஜ ஏகபாதர்

அஹி புத்திநியனை விட இன்னும் மிகக் குறைந்த அளவிலே இவன் பெயரை ரிக்வேதத்தில் நாம் காண்கிறோம். அஜ என்ற வட மொழிச் சொல்லிற்குப் பிறப்பில்லாதவன் என்று பொருள்; ஏகபாதர் என்றால் ஒரு காலுள்ளவன் என்று பொருளாகும்; இது ஸூரியனைக் குறிக்கும் எனச் சிலர் கருதுகிறார்கள். அஜ என்ற வடமொழிச் சொல்லிற்கு வெள்ளாடு என்ற பொருளும் உண்டு; இது மின்னலைக் குறிக்கும் எனச் சிலர் கூறுகிறார்கள்; வேகமாகப் போகும் வெள்ளாட்டைப் போல மின்னல் அடிப்பதாலும், ஒரே கோடாக மின்னல் பூமியைத்

தாக்குவதால் ஒரு கால் உள்ளதாகவும் அவர்கள் காரணம் சொல்லுகிறார்கள்.

அஜ ஏகபாதர் விண்ணுலகையும் மண்ணுலகையும் நிலை நிறுத்தியதாக அதர்வண வேதம் கூறுகிறது. இவர் கிழக்கில் உதித்ததாகத் தைந்திரியப் பிராம்மணம் சொல்லுகிறது.

அஜ ஏகபாத் என்றால் பாம்பைக் குறிக்கும் என்று விண்டர்நிட்ஸ் என்ற ஜெர்மன் ஆராய்ச்சியாளர் எழுதி இருக்கிறார். காரணமும் காட்டியிருக்கிறார்.

வேள்விகளில் அஜ ஏகபாதருக்கு ஒரு ஆஹுதி கொடுக்கிறார்கள்; ஆனால் இந்தத் தெய்வத்தை மக்கள் விசேஷமாக ஒன்றும் வேண்டுவதில்லை.

* * *

## 3.7 ருத்திரன்

இதிஹாஸ புராணங்களில் இன்றும் பாரத நாட்டில் இரு முக்கிய தெய்வங்களில் ஒருவராக விளங்கும் சிவனை வேதகாலத்தில் ருத்திரனாக ரிஷிகள் போற்றுகிறார்கள்.

ரிக் வேதத்தில் ருத்திரனைப் பற்றிய ஒரு ஸூக்தத்தைப் பார்ப்போம்: "நீ கொடுக்கும் குணப்படுத்தும் மருந்துகளால் எனக்கு நூறாண்டு வாழ்க்கை கிட்டட்டும். எத்திசையி லிருந்தும் நோய்களும் துன்பங்களும் என்னை அணுகாமல் விரட்டி விடு. எல்லா மருத்துவர்களிலும் நீ தான் மிகச் சிறந்தவன் என்று கேள்விப்படுகிறேன்; ஆதலால் எங்களுடைய வீரர்களுக்கு சக்தி வாய்ந்த மருந்துகளைக் கொடுத்து அவர்களை உற்சாகப்படுத்து! திவ்யமானவரும்

அழகிய கன்னங்களை உடையவரும், கனிவும் கவர்ச்சியும் உள்ளவரும் ஆன ருத்திரன் எங்களை எதிரிகள் அணுகாதபடி காப்பாற்றட்டும். சூரிய வெப்பத்தில் நடக்கும் ஒருவன் நிழலைக் காண்பது போல, எனக்கு ருந்திரனுடைய அருள் கிட்டட்டும். நாங்கள் ஒளிவீசும் ருத்திரனைத் துதிகளால் வணங்குகிறோம்; நாங்கள் ருத்திரனின் உயர்வான பெயரைப் பெருமைப்படுத்துகிறோம் உன்னை விடப் பலசாலி எவருமே இல்லை. எங்களுடைய குழந்தைகளிடமும் கனிவுடன் இருப்பாயாக." (ரி.வே.II. 33)

ரிக் வேதத்தில் இன்னும் சில இடங்களில் ருத்திரனைப் பற்றிய குறிப்புகளைக் காண்கிறோம். அவைகளில் சிலவற்றைப் பார்ப்போம்.

"மற்ற தெய்வங்களின் கோபத்தை எங்களிடமிருந்து ருத்திரன் விரட்டட்டும்; நாங்கள் அவனுடைய திருவருளைப் பெரிதும் விரும்புகிறோம். (ரி.வே.I. 114.4)

"சடையுடன் கூடிய முடியை உடையவரும் சிவப்பான வரும், கண் கூசும் ஒளி வீசுகின்ற உருவத்தையுடையவரும் ஆன ருத்திரனை, நாங்கள் பக்தியுடன் கீழே அழைக்கிறோம். அவர் கை நிறையச் சிறந்த மருந்துகளை எடுத்து வந்து, எங்களைக் காத்து, எங்களுக்கு நல்லதோர் வீட்டைக் கொடுக்கட்டும்." (ரி.வே.I. 114.5)

"அஞ்சா நெஞ்சம் படைத்த வீரர்களை ஆளும் பலசாலியான ருத்திரனுக்கு, நாம், பயபக்தியுடன், இன்று, துதிகளைக் கூறுவோமாக; சுயம்பிரகாசமானவரும், மங்கள மானவனும், மற்றவர்களைக்காக்கும் திறனுள்ளவனும் ஆன இவன் விண்வெளியிலிருந்து கீழே வருகிறான்." (ரி.வே.X. 92.9). இந்த ரிக்கில் 'சிவ': என்பது ருத்திரனுக்கு உரிச் சொல்லாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

"பலமான வில்லும், குறிதவறாத அம்புகளும் உடையவரும், குணப்படுத்தும் எல்லா மருந்துகளுக்கும் அதிபதியுமான ருத்திரனைத் துதி செய்; அவருடைய திருவருளைப் பெற, அவரை வழிபடு; அத் தெய்வத்தை வணங்கி, அவர் புகழைப்பாடுவாயாக." (ரி.வே.V. 42.11)

"பலமுள்ளதும், அசைக்க முடியாததுமான வில்லை ஏந்தியவரும், தன்னுடைய பலத்தையே நம்பியிருக்கும் தெய்வமும், வேகமாகப் பறக்கும் அம்புகளை உடைய வருமான ருத்திரனுக்கு இப்பாசுரங்களைக் கொண்டு செல்வாயாக; அறிஞரும், எல்லோரையும் ஜயிப்பவரும், மற்ற எவராலும் வெல்ல முடியாதவரும், கூர்மையான முனை உள்ள ஆயுதங்களை ஏந்திய வருமான ருத்திரன் எங்கள் அழைப்பைக் கேட்கட்டும்." (ரி.வே.VIII. 46.1)

"ருத்திரன், அதிபதியாக இருந்து கொண்டு, உலகிலுள்ள ஜீவராசிகளைப் பற்றி நினைக்கிறார்; சக்கரவர்த்தியாக இருந்து கொண்டு, அவர் தேவலோகவாசிகளைப் பற்றியும் நினைக்கிறார். ருத்திரனே! உங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்கும் எங்கள் வீட்டு நுழைவாயிலுக்கு விரும்பி வந்து எங்கள் குடும்பத்தாருடைய நோய்களை எல்லாம் குணப்படுத்துங்கள்!" (ரி.வே.VII. 46.2)

"மேலுலகிலிருந்து நீங்கள் எய்த ஒளி வீசும் அம்பு (மின்னல்) பறந்து பூமிக்கு வந்து, எங்களைத் தாக்காமல் போகட்டும்; அருளுடைய தெய்வமான நீங்கள் ஏராளமான மருந்துகளை வைத்திருக்கிறீர்கள்; எங்களுடைய பிள்ளை களுக்கும், வம்சத்தாருக்கும் ஒரு விதமான கெடுதலும் அண்ட வேண்டாம்." (ரி.வே.VIII. 46.3)

ரிக் வேதத்தில் ஒரு சுவையான ஸூக்தத்தில் பத்து தெய்வங்களை, அவர்களுடைய பெயரைச் சொல்லாமல் ரிஷி குறிப்பிடுகிறார்; ஒவ்வொரு தெய்வத்தின் விசேஷ அம்சங்களை மட்டும் சொல்லுகிறார். இதில் ருத்திரனைப் பற்றிப் பின் வருமாறு கூறுகிறார்:

"பலசாலியான, ஒளி வீசும் மற்றுமொருவர், குணப்படுத்தும் மருந்துகளை வைத்துக் கொண்டு, கூர்மையான முனையுள்ள ஆயுதங்களை ஏந்தியிருக்கிறார்." (ரி.வே.VIII. 29.5)

ருத்திரனைப் பற்றிய மிகச் சிறந்த துதியான ருத்ரம் யஜுர் வேதத்தில் உள்ளது. இது வெகுகாலமாக மக்கள் போற்றி அடிக்கடி ஓதப்படும் துதியாகவும் இருக்கிறது. யஜுர் வேத தைத்திரீய ஸம்ஹிதையில் ஏழுகாண்டங்களுள் நாலாவது காண்டத்தில் நடுநாயகமாக உள்ளது இது. இதனுடைய இருதய ஸ்தானமாக இருப்பது சிவபஞ்சாக்ஷரி எனப்படும் 'நம; சிவாய' என்ற மந்திரமாகும். பல காலமாகவும் இன்றும் இது ஆஸ்திகர்களால் நித்திய பூஜையிலும் ஜபத்திலும் ஹோமத்திலும் சிறப்பாகக் கையாளப்பட்டு வருகிறது.

பின்வரும் சுலோகம் மக்களிடையே பரவலாக நிலவுகிறது:

ஸ்வசாகோபரிஷத் கீதா விஷ்ணோர் நாம ஸஹஸ்ரகம்।
ருத்ரம்ச பௌருஷம் ஸூக்தம் நித்யமாவர்தயேத் புத.॥

இதன் பொருள் வருமாறு: 'அவரவர் சாகையிலுள்ள உபநிஷத்து, பகவத் கீதை, விஷ்ணு ஸஹஸ்ரநாமம், ருத்ரம், புருஷ ஸூக்தம், ஆகிய ஐந்தும் தினமும் ஒரு புத்திமான் பலமுறை ஜபிக்கவேண்டும்.

ஸ்ரீ ருத்திரத்தை ஜபம் செய்வதால் எல்லாப் பாபங்களும் விலகும். 'ய: சதருத்ரீய மதீதே ..... ஸ: ஸுராபானாத் பூதோ பவதி, ப்ரம்ஹ ஹத்யாத் பூதோ பவதி! (கைவல்ய உபநிஷத்).

தைத்திரிய உபநிஷத்தில் பின் வரும் மந்திரம் உள்ளது: 'தம் நமஇத்யுபாஸீத நம்யத்தே அஸ்மை காமா: 'ஈசுவரனை நாம் 'நம: நம:' என்று வணங்கி வழிபட்டால், எல்லாக் காமங்களும் நம்மிடம் வந்து வணங்கி நிற்கும் என்று இதன்

பொருளாகும். அப்படி வழிபடுவதற்கு ஸ்ரீருத்திரமே சிறந்த ஸாதனாமாகும்.

இவ்வளவு மஹத்துவம் வாய்ந்த ஸ்ரீ ருத்திரத்திலிருந்து சில மந்திரங்களைப் பார்ப்போம்.

'ஸ்தேனாளாம் பதயே நமோ நமோ (III.1.2) என்றும் 'தஸ்கராணாம் பதயே நமோ நமோ' (III.1.3) என்றும் ருத்ரம் கூறுகிறது. இரண்டுக்கும் 'திருடர்களின் தலைவன்' என்று பொருளாகும் திடர்களும் மனிதர்கள் தானே? எல்லா ஜீவராசிகளுள்ளும் அந்தர்யாமியாகி ஈசுவரன் உறைகிறான் என்றால், திருடர்களுக்குள்ளும் அவன் இருக்கிறான் என்று தானே சொல்லவேண்டும்? தவிர, அவன் மிக உயர்ந்த பொருளான பக்தர்களின் மனதைத் திருடுகிறான்; ஞான சம்பந்தப் பெருமான் 'தோடுடைய செவியன்' என்று தொடங்கும் தேவாரத்தில் ருத்திரனை 'என்னுள்ளங்கவர் கள்வன்' எனக் கூறியுள்ளார்.

முதல் மூன்று வேதங்களான ரிக், யஜுர், ஸாமம் ஆகிய வற்றில் நடுவிலுள்ள யஜுர் வேதம் முக்கியமானது. ஏழு காண்டங்கள் கொண்ட யஜுர் வேதத்தில் நடுவிலுள்ள நான்காவது காண்டம் முக்கியமானது. அதற்கும் மத்தியபாக மான ஐந்தாவது பிரச்னம் முக்கியமானது. அதுதான் ஸ்ரீருத்திரம். அதற்குள்ளும் 'நம: சிவாய' என்ற பஞ்சாக்ஷரம் நடுவிலுள்ளது. அதன் மத்தியில் 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்கள் அடங்கியிருக்கின்றன. இதையே ஜீவரத்னம் என்று அப்பய்ய தீக்ஷிதர் குறிப்பிடுகிறார்.

**மந்திரம்:**

நம: சிவாய ச சிவதாரயச (VIII. 1.11)

**பொருள்:**

'மங்கள வடிவினரும், தன்னை அண்டினவரையும் சிவமயமாக்கும் அதிமங்கள வடிவினரும் ஆகிய உமக்கு நமஸ்காரம்.'

ருத்திரன் தூசியிலும் உள்ளான், புழுதியிலும் உள்ளான். (நம: பாம் ஸவ்யாயச ரஜஸ்யாயச – IX. 1.8) அவன் அடியார்க்குச் செல்வத்தை அளிக்கும் மூர்த்திகள் வடிவத்தில் உள்ளான். அவன் எல்லாத் தேவர்களின் இருதயங்களில் இருந்து கொண்டு வேண்டுவோர்க்கு வேண்டுவதை அளிக்கிறான். அவர்களுடைய எல்லாப் பாவங்களையும் அறவே ஒழிக்கிறான்.

80979

ஸ்ரீ ருத்திரத்தைச் சேர்ந்ததாக இல்லாவிடினும், பின்வரும் மந்திரம் ருத்திரத்தின் முடிவில் தொன்று தொட்டு ஓதப்பிக்கப்படுகிறது; இதை இன்னும் பூஜைகளிலும் சடங்குகளிலும் ருத்திரத்துடன் சேர்ந்தோ தனி மந்திரமாகவோ மக்கள் ஓதுகிறார்கள்.

த்ரயம்பகம் யஜாமஹே ஸுகந்தி ம்: புஷ்டி வர்த்தனம்।
உர்வாருகமிவ பந்தனாத் ம்ருதயோர் முக்ஷீய மா
ம்ருதாத் ॥



பொருள் :

'இயற்கையான நறுமணம் உடையவரும், பக்தர்களைப் போஷித்து வளர்ப்பவரும் ஆகிய முக்கண்ணனை வழிபடுகிறோம். வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து விடுபடுவது போல் சாவினுடைய பிடிப்பிலிருந்து உமதருளால் விடுபடுவோமாக. மோக்ஷ மார்க்கத்திலிருந்து விலகாமலிருப்போமாக.'

அடுத்த மந்திரம் :

யோ ருத்ரோ அக்னௌ யோ அப்ஸு ய ஓஷதீஷு ।
யோ ருத்ரோ விஸ்வா புவனாऽऽவிவேச தஸ்மை
ருத்ராய நமோ அஸ்து ॥

பொருள் :

எந்த ருத்திர பகவான் தீயிலும், நீரிலும், செடி கொடிகளிலும் இருக்கிறாரோ, எந்த ருத்திரன் உலகனைத்தையும் ஊடுருவி உள்ளாரோ, அந்த ருத்திரனுக்கு நமஸ்காரம் உரித்தாகட்டும்.

இன்னுமொரு மந்திரம் :

அயம் மே ஹஸ்தோ பகவான் அயம் மே பகவத்தா :
அயம் மே விச்வ பேஷஜோsயம் சிவாபிமர்சன; ||

பொருள் :

'என்னுடைய இந்தக் கை கண் முன் நிற்கும் தெய்வத்தின் உருவமாகும்; இதுவே எனக்கு தெய்வத்தைக் காட்டிலும் உயர்ந்தது. இதுவே எனக்கு எல்லா நோய்களுக்கும் மருந்து. இதுவேயன்றோ சிவனைத் தொட்டு அபிஷேகம், பூஜை எல்லாம் செய்கிறது'.

காமகோடி பரமாச்சாரியார் இந்த மந்திரத்திற்குப் பின் வரும், விளக்கம் கொடுக்கிறார்: 'இந்தக் கை தான் பகவான். பகவானா, இல்லை, இல்லை, பகவத்தா:, பகவானைக் காட்டிலும் மேம்பட்டது. ஏன்? கை ஈசுவரனைப் பூஜை பண்ணுகிறதல்லவா? பகவானுக்குப் பூஜை பண்ணி எனக்கு மோக்ஷத்தை வாங்கிக் கொடுப்பது இதுதானே?'

அடுத்ததாக மற்றுமொரு மந்திரம் :

ஓம் நமோ பகவதே ருத்ராய விஷ்ணவே ம்ருத்யோர்
மே பாஹி |

பொருள் :

'ஓம், பகவானும் எங்கும் நிறைந்த வரும் ஆகிய ருத்திரனுக்கு நமஸ்காரம்; என்னிடம் சாவு வாராமல் காத்தருள் வீராக, இதுதான் உரையாசிரியர்கள் கூறிய பொருளாகும். மற்றுமொரு பொருளும் கொள்ளலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. 'விஷ்ணவே' என்ற சொல்லிற்கு 'எங்கும் நிறைந்தவர்' என்று ருத்திரனுக்கு உரிச்சொல்லாக ஏற்காமல், விஷ்ணுவாகிய ருத்திரனுக்கு நமஸ்காரம் என்றும் கொள்ளலாம்; இப்படிக் கூறினால் விஷ்ணுவும் சிவனும் ஒன்றே (ஏகம் ஸத்) என்ற ரிக் வேதக் கூற்றுக்கு ஒத்ததாக இருக்கும்.

இப்படியாக, ருத்திரன் பிற்காலத்தில் மிக முக்கிய தெய்வமாக விளங்கியதற்கு யஜுர் வேத ஸ்ரீ ருத்ரம் அடி கோலியுள்ளது.

* * *

### 3.8 மருத்துக்கள்

வட மொழியில் மருத் என்றால் காற்று என்று பொருள் ஆகும். ரிக்வேதம் இவர்களை மருத்துக்கள் என்று ஒரு குழுவாகவோ படையாகவோ பன்மையிலேயே குறிப்பிடு கிறது. இவர்களுடைய எண்ணிக்கை 36 என்று ஒரு ரிக்கிலும் 21 என்று மற்றுமொரு ரிக்கிலும் ரிக்வேதம் குறிப்பிடுகிறது. இவர்கள் புயல் காற்றின் தேவதைகளாக விளங்குகிறார்கள். இவர்கள் பிறப்பைப்பற்றி உயர்வாக ரிக் வேதம் பேசுகிறது. அவர்கள் ருத்திரனுடைய பிள்ளைகள்; பிருஷ்ணி என்ற பசுமாடு அவர்களுடைய தாயார். பசுமாடு என்பது புள்ளிகளுடன் கூடிய, புயலை உண்டாக்கும் மேகங்களைக் குறிக்கும்.

ஒரு ரிக் கூறுகிறது: 'அதிகப் பால் இருப்பதால் கனக்கும் மடிகளுடன் கூடிய பசுக்கள் பிரகாசமாக ஜுவலித்துக் கொண்டிருக்கின்றன. குறுக்கீடுகள் இல்லாத உங்கள் பாதையில் இந்தப் பசுக்களுடனும், ஒளிவீசும் நீண்ட கத்திகளுடனும் நீங்கள் இங்கு வாருங்கள். ஒரே மனதுடன், அன்னப்பறவைகள் கூட்டிற்குச் செல்லுமாப் போல, இங்கு வந்து ஸோம பானத்தைை மகிழ்ச்சியுடன் அருந்துங்கள்.' (ரி.வே.II. 34.5) இது புயலடித்து மின்னலுடன் கூடி மழை பொழியும் மேகங்களைக் குறிக்கிறது.

பிறந்தவுடன் மருத்துக்கள் மூட்டப்பட்ட தீச்சுடர்களை ஒத்திருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. சிரித்துக் கொண்டிருக்கும் மின்னலிலிருந்து அவர்கள் பிறந்தார்கள் என்று ஒரு ரிக் பேசுகிறது. அக்கினி மருத்துக்களைப் பெற்றதாக ஒரு ரிக்கும்,

வாயு அவர்களை விண்ணின் கர்ப்பத்திலிருந்து உண்டாக்கிய தாக மற்றுமொரு ரிக்கும் சொல்லுகின்றன. விண்ணின் மைந்தர்கள் என்றும், கடலைத் தாயாக உள்ளவர்கள் என்றும், தாங்களாகவே பிறந்தவர்கள் என்றும் பலவாறாக வேதம் மருத்துக்களின் பிறப்பைக் குறிக்கிறது.

அவர்கள் ஒரே வயதுள்ள சகோதரர்கள். அவர்கள் ஒன்றாக வளர்ந்து ஒரே மனத்தை உடையவர்களாக இருக்கிறார்கள்; ஒரே இடத்தில் பிறந்து ஒரே வீட்டில் வசிக்கிறார்கள்; விண்ணிலும், மண்ணிலும், காற்று மண்டலத்திலும் வளர்ந்தார்கள். அவர்களுக்கு மலைகளில் இருப்பிடமுள்ளதாகவும் வேதம் ஓரிடத்தில் கூறுகிறது.

இந்திரனுடைய மனைவியான இந்திராணி அவர்களுடைய தோழி, தெய்வீக ஆறாகவும் புனிதமான பாசுரங்களுக்குத் தேவதையாகவும் உள்ள ஸரஸ்வதியும் அவர்களுடைய தோழி. அவர்கள் தேரில் போய்க் கொண்டிருக்கும் பொழுது, ரோதஸீ என்ற பெண் அவர்களுக்கு மகிழ்ச்சி தரும் வெகுமதிகளுடன் தேரில் ஏறி அவர்களுடன் போகிறாள் என்று சொல்லுகிறது ஒரு ரிக்; இங்கு ரோதஸி மின்னலைக் குறிக்கும்; இவள் ருத்திரனுடைய மனைவியாகச் சிலரும், மருத்துக்களுடைய மனைவியாக வேறு சிலரும் கருதுகிறார்கள்.

அவர்கள் நல்ல ஒளி வீசுவதை வேதம் அடிக்கடி குறிப்பிடுகிறது. அவர்கள் பொன்நிறமானவர்கள், ஸூரியனைப் போல ஒளி வீசுபவர்கள், சுடர்விட்டு ஜ்வலிக்கும் தீயை ஒத்தவர்கள், சிவந்த வண்ண முடையவர்கள் என்று வேதம் பேசுகிறது. அவர்கள் பாம்புகளைப் போல ஒளி வீசுபவர்கள். (பாம்பின் தலையில் நாகரத்தினம் ஒளி வீசுவதால் இந்த ஒப்புமை). அவர்கள் மலைகளிலிருந்து பிரகாசிக்கிறார்கள். அவர்கள் சுயமாகவே ஒளியுள்ளவர்கள்.

மின்னலுடன் மருத்துக்களுக்குத் தொடர்பு உண்டு. மருத்துக்கள் நெய்யை வாரி இறைக்கும் பொழுது, அவர்களுக்குக் கீழே பூமியின் மேல் மின்னல் சிரிக்கிறது என்று பேசுகிறது ஒரு ரிக். (ரி.வே.I. 168.8). அவர்கள் மழையைப் பொழியும் பொழுது, மின்னல், கன்றைப் பின்பற்றும் தாய்ப்பசு மெதுவாகச் சப்தமிடுவது போல ஒலிக்கிறது. அவர்கள் மின்னலைக் கையில் வைத்திருக்கிறார்கள்; மின்னலினால் மிகுந்த மகிழ்ச்சியை அடைகிறார்கள். அவர்கள் நீண்ட கத்தியைக் கையில் வைத்திருப்பதாக அடிக்கடி வேதம் கூறுவது மின்னலையே குறிக்கும். சில இடங்களில் அவர்கள் பொற் கோடாலிகளை வைத்திருப்பதாகவும் வஜ்ஜிராயுதத்தை ஏந்தி யிருப்பவர்களாகவும், வில்லும் அம்பும் உள்ளவர்களாகவும் வேதம் பேசுகிறது.

அவர்கள் மாலைகளாலும், ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு இருக்கிறார்கள். பொன்னாலான மேலங்கியை அணிந்திருக்கிறார்கள். விசேஷமாக அவர்கள் காப்புகளையும் கொலுசுகளையும் அணிந்திருக்கிறார்கள்; இவைகளுடன் அவர்கள் நக்ஷத்திரங்களுடன் கூடிய வானைப் போலவும் மேகங்களிலிருந்து ஒளிவீசிக் கொண்டு பொழியும் மழை போலவும் விளங்குகிறார்கள்.

ஒரு ரிக் முழுவதுமாக மருத்துக்களை வருணிக்கிறது. 'ஓ மருத்துக்களே! நீங்கள் தேரில் போகும் பொழுது, 'நீண்ட கத்திகள் உங்களுடைய தோள்களிலிருந்து தொங்குகின்றன; கொலுசுகள் உங்களுடைய கால்களிலிருந்து ஒளி வீசுகின்றன; உங்கள் மார்பைத் தங்கச் சங்கலிகள் அலங்கரிக்கின்றன. உங்கள் கைகளில் சுடர் விட்டு எரியும் மின்னல்கள் பளிச்சிடுகின்றன. உங்கள் தலைகளில் பொன்னாலான கிரீடங்கள் பொலிவுடன் விளங்குகின்றன.' (ரி.வே.V. 54.11)

மருத்துக்களுடைய தேர்கள் மின்னலால் பிரகாசிக்கின்றன. தேர்களும் சக்கரங்களும் பொன்னாலானவை அத்தேர்களை பழுப்பு நிறக்குதிரைகள் இழுக்கின்றன. பொற்கால்களைக் கொண்ட அக்குதிரைகள் மனோவேகமாகப் போகின்றன. அக்குதிரைகளின் தோலில் அழகான புள்ளிகள் உள்ளன. சில சமயங்களில் மருத்துக்கள் காற்றையே குதிரைகளாகத் தேர்களில் பூட்டுகிறார்கள்.

அவர்கள் விண்ணுக்கும் மண்ணுக்கும் மேல் இருக்கிறார்கள். அவர்களுடைய மகத்துவத்தை அளவிட முடியாது. அவர்களுடைய வலிமையையாரும் எட்டிப் பிடிக்க முடியாது. அவர்கள் சிறுவர்கள், ஒரு பொழுதும் முதுமையை அடையாதவர்கள். அவர்கள் தெய்வீக மானவர்கள், புத்துணர்ச்சி பெற்றவர்கள், ஆத்திரக்காரர்கள். அவர்களுடைய தேர்கள் தூசி படியாமல் சுத்தமாய் இருக்கின்றன. அவர்கள் கடுமையாக உள்ளார்கள், அவர்கள் முன் கோபிகள்; காட்டு மிருகங்களைப் போலப் பார்ப்பதற்கு பயங்கரமாக இருக்கிறார்கள், அவர்கள் குழந்தைகளைப் போலவும், கன்றுக்குட்டிகள் போலவும் விளையாட்டு மனப்பான்மையுள்ளவர்கள். அவர்கள் காட்டுப் பன்றிகளைப் போலவும், சிங்கங்களைப் போலவும் இருக்கிறார்கள்.

அவர்கள் இடி முழக்கம் போலச் சத்தம் இடுகிறார்கள்; அது காற்றின் கர்ஜனையாக விளங்குகிறது. அவர்கள் வரும் பொழுது விண்ணே பயத்தால் ஓலமிடுவது போலத் தோன்றுகிறது. அவர்களைக் கண்டு மலைகளும் பூமியும் நடுங்குகின்றன. அவர்களுடைய தேர்களின் சக்கரங்களால் அவர்கள் மலைகளையும் பாறாங்கற்களையும் பிளக்கிறார்கள். அவர்கள் மரங்களை ஒடிக்கிறார்கள், மதயானைகளைப் போலக் காடுகளை அழிக்கிறார்கள். காடுகள் அவர்களைக் கண்டு அச்சத்தால் வணங்குகின்றன. விண்ணிலும் மண்ணிலுமுள்ள எல்லாப் பிராணிகளும் அவர்களைக் கண்டு நடுங்குகின்றன. அவர்கள் தூறா

வெளிக்காற்றாக ஓலமிட்டு வந்து புழுதியைக் கிளப்புகிறார்கள்.

மழை பொழியச் செய்வதே மருத்துக்களின் முக்கியமான பணியாகும். அவர்கள் மழையை ஆடையாக உடுத்தியிருக்கிறார்கள். கடலிலிருந்து அவர்கள் எழும்பி மழையைப் பொழிகிறார்கள். இடி முழக்கம் செய்து எப்பொழுதும் வற்றாத ஊற்றை அவர்கள் கறந்து அளிக்கிறார்கள். மழை அவர்களைப் பின்பற்றுகிறது; அவர்களுடைய ஒளியை மழை மறைக்கிறது. அவர்கள் ஸூரியனுடைய கண்ணை மழையால் மறைக்கிறார் கள். மழை பொழியும் பொழுது அவர்கள் மேகங்களால் இருட்டை உண்டாக்குகிறார்கள். அவர்கள் மலைகளிலிருந்து மழைநீரை ஆறாகப் பெருகும்படி செய்கிறார்கள். ருத்திரனின் மைந்தர்களான இவர்களுடைய வியர்வைத் துளிகளே மழையாகப் பொழிகிறது. மருத்துக்கள் பொழியும் மழையைப் பாலாகவும், நெய்யாகவும், தேனாகவும் வேதம் பேசுகிறது.

அவர்கள் கொடுக்கும் மழை புயல்களுடன் தொடர்பு உள்ளதாக இருக்கிறது. நீரைப் பொழிய விரும்பும் அவர்கள், ஆலங்கட்டிகளைச் சுழற்றிக் கொண்டு, இடியுடன் கூடி வேகமாக வருகிறார்கள். தங்களுடைய வலிமையால் அவர்கள் காற்றையும் மின்னலையும் உண்டாக்குகிறார்கள்; பசுமாட்டின் மடியிலிருந்து விண்ணின் வெகுமதியைக் கறந்து, பூமியைப் பாலால் நிரப்புகிறார்கள். அவர்கள் கறக்கும் ஊற்று இடி முழக்கம் செய்கிறது. அவர்கள் நீரைப் பொழியும் பொழுது, சிவந்த காளையான வானம் உருமுகிறது. அவர்கள் வெப்பத்தைத் தடுக்கிறார்கள். இருளைப் போக்கி, வெளிச்சத்தை உண்டாக்கி, ஸூரியனுக்குப் பாதையை அமைக்கிறார்கள் காற்றை அளந்து, விண்ணையும் மண்ணையும் பரப்பி, இரண்டு உலகங்களையும் தனித்தனியாகப் பிரித்து வைக்கிறார்கள்.

புயல் காற்றின் ஓசையை மனதில் கொண்டு, வேத ரிஷிகள் மருத்துக்களைப் பாடகர்கள் என்று கூறுகிறார்கள். விண்ணின் பாடகர்களான அவர்கள், பாடும் பொழுது, ஸூரியனை ஒளிவீசச் செய்கிறார்கள். இந்திரன் விருத்திரனைக் கொன்ற பொழுது, அவர்கள் ஒரு பாடலைப்பாடி, ஸோமரசத்தைப் பிழிகிறார்கள். அவர்கள் பாடும் பாட்டு ஒரு பாசுரமாக அமைகிறது; அதனால் அவர்களை மத குருமார்களுடன், ஒப்பிடுகிறார்கள். அவர்கள்தான் முதலில் வேள்வியைப் புரிந்தார்கள். மற்ற தெய்வங்களுடன் அவர்கள் ஸோமரசத்தைக் குடிக்கிறார்கள்.

புயல் காற்றின் தெய்வங்களான மருத்துக்கள் இந்திரனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பது இயற்கையே; அவர்கள் இந்திரனுடைய போர்களில் அவனுக்கு உதவி புரிவதாகப் பல ரிக்குகள் கூறுகின்றன. அவர்கள் துதிகளாலும், பாசுரங்களாலும், பாட்டுக்களாலும் இந்திரனுடைய வலிமையைப் பெருக்குகிறார்கள். அவர்களுடன் சேர்த்துதான் இந்திரன் விண்ணில் எல்லாச் சாதனைகளையும் புரிகிறான். இந்திரனுடைய உதவியுடன் மருத்துக்கள் விருத்திரனை அடித்து வீழ்த்தியதாக ஒரு ரிக் சொல்லுகிறது. அவர்கள் தனியாகவே விருத்திரனுடைய கை கால்களை அக்கு வேறு ஆணிவேறாகப் பிரித்தார்கள். ஓரிடத்தில் அவர்கள் இந்திரனுக்கு மகன்கள் போலுள்ளார்கள் என்றும், மற்ற இடத்தில் அவனுடைய சகோதரர்கள் என்றும் வேதம் பேசுகிறது. விருத்திரனுடன் போரிடும் பொழுது இந்திரனை மருத்துக்கள் தனியாகத் தவிக்க விட்டுப் போனதாகவும் ஓரிரண்டு ரிக்குகள் சொல்லுகின்றன; இது, சில சமயங்களில் புயற்காற்று அடித்து மழை பெய்யாமல் போவதைக் குறிக்கலாம்.

ஒரு ரிக்கில் மருத்துக்கள் இந்திரனைக் கேட்கிறார்கள்: 'நாங்கள் உன் சகோதரர்களாக இருந்தும், நீ எங்களைக் கொல்லுவாயா? எங்களிடம் அன்பாக இரு! சண்டையிட்டு

நீ எங்களைக் கொல்லாதே. (ரி.வே.I. 170.2) இன்னுமொரு ரிக்கில், இந்திரன் தங்கள் மேல் கொண்டிருக்கும் கடும் சினத்தைத் தவிர்க்கும் படி, மருத்துக்கள் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

மருத்துக்கள் மக்களுக்குத் தீமை புரியும் குணத்தைப் பற்றி சில ரிக்குகள் பேசுகின்றன. தங்களை வழிபடுபவர் களை மின்னல் தாக்காமல் இருக்கும்படி அவர்களை வேண்டுகிறார்கள். அவர்கள் வீசும் அம்பும் கற்களும் தங்கள் மேல் படாமல் இருக்கும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். அவர்களுடைய சினத்தை அடக்கும் படி ஒரு ரிக் வேண்டுகிறது.

ஒரு ரிக் பேசுகிறது. 'அறிவாளிகளான அவர்கள் சிங்கங்களைப் போல கர்ஜிக்கிறார்கள்; செல்வந்தர்களான அவர்கள் மான்களைப் போல அழகாக இருக்கிறார்கள். நீண்ட கத்திகளாலும், (மின்னல்களாலும்) புள்ளிவைத்த மான்களாலும் அவர்கள் இருளைக் கிளறுகிறார்கள்; புயலின் ஓசை குருக்கள் ஓதும் ரிக்குகளை ஒத்திருக்கிறது; அவர்கள் கோபம் பாம்பின் கடும் சினத்தை ஒத்திருக்கிறது.' (ரி.வே.I. 64.8)

ருத்திரனை வேண்டுவது போல அவர்களையும், மருந்துகளைக் கொணர்ந்து நோய்களைக் குணப்படுத்தும்படி மக்கள் வேண்டுகிறார்கள். ருத்திரனுடன் சேர்ந்து அவர்கள் வைத்திருக்கும் நல்ல மருந்துகளைக் கொணரும்படி ஒரு ரிக் வேண்டுகிறது. அவர்கள் பொழியும் மழை நீரே மருந்தாக ஒரு ரிக் பேசுகிறது. அக்கினியைப் போல அவர்களும் புனிதமானவர்களாகவும், புனிதப்படுத்துபவர்களாகவும் சில ரிக்குகள் கூறுகின்றன.

* * *

## 3.9 வாயு

சௌனகர் கூறுகிறார்: 'அவன் மிகவும் ஸூக்ஷ்மமாகக் காற்றில் இருந்து கொண்டு, முவ்வுலகையும் ஊடுருவி இருப்பதால் (வ்யாப்ய), ரிஷிகள் அவனை வாயு என்று அழைக்கிறார்கள். (பிருஹத் தேவதா II. 32)

ரிக் வேதத்திலும் மற்ற நூல்களிலும் வாயு என்பது காற்றையே குறிக்கும். வேதம் இதை ஒரு தெய்வமாகவும் போற்றுகிறது. வாதம் என்பது வாயுவிற்கு மற்றொரு பெயராக ரிக் வேதத்தில் நாம் காண்கிறோம். இரண்டுமே தெய்வத்தையும் உலகில் அடிக்கும் காற்றையும் குறிப்பனவாக உபயோகத்தில் உள்ளன; ஆனால் பெரும்பாலும் தெய்வத்தைக் குறிக்க வாயு என்ற சொல்லையே காண்கிறோம்.

வாயுவின் பிறப்பைப் பற்றி வேதம் அதிகமாகப் பேசவில்லை. அவன் செல்வத்திற்காக உண்டாக்கப்பட்டான் என்று ஒரு ரிக் கூறுகிறது. அவன் துவஷ்டாவின் மாப்பிள்ளை என்று இன்னுமொரு ரிக் சொல்லுகிறது. புருஷ ஸூக்தத்தில் வாயு படைப்போனுடைய மூச்சுக்காற்றிலிருந்து உண்டானதாக வேதம் பேசுகிறது.

வேள்வி புரிபவர்கள் தெய்வங்களை ஆஹுதி பெற்றுக் கொள்ள அழைக்கும் பொழுது, பெரும்பாலும் வாயுவை இந்திரனுடன் சேர்த்தே அழைக்கிறார்கள். வாயு விண்ணின் கர்ப்பத்திலிருந்து மருத்துக்களை உண்டாக்கியதாக ஒரு ரிக்கும், அவர்களுடன் கூடிப் போவதாக இன்னுமொரு ரிக்கும் கூறுகின்றன. மற்றபடி, ரிக் வேதத்தில் வேறு எங்கும் அவர்களுக்குள் எவ்விதமான தொடர்பும் காணவில்லை.

வாயு அழகானவன்; இந்திரனுடன் சேர்ந்து அவன் விண்ணைத் தொடுகிறான்; அவன் மனோ வேகமுள்ளவன்; அவனுக்கு ஆயிரம் கண்கள் இருக்கின்றன. அவன் கர்ஜித்துக்

கொண்டு, வெகு வேகமாகப் போகிறான். இரு குதிரைகள் பூட்டிய, பளபளக்கும் தேரில் அவன் உலவுகிறான். சில சமயங்களில் அவன் 100 அல்லது 1000 குதிரைகளைத் தன் மனோபலத்தாலேயே தேரில் பூட்டுகிறான். பொன்னாலான ஆசனம் அமைக்கப்பட்ட அவனுடைய தேரில், அவனுடன் இந்திரனும் அமர்ந்துள்ளான்; அத்தேர் விண்ணைத் தொடுகிறது.

மற்ற தெய்வங்களைப் போல அவனும் ஸோமரசம் குடிப்பதில் பிரிய முள்ளவன்; அவன் தெய்வங்களுக்குள் விரைவில் செய்பவனாகையால், அவனுக்கு ஸோமரசத்தின் முதல் அஹுதி கிடைக்கிறது. ஐதரேயப் பிராம்மணம் ஒரு சிறு கதையைக் கூறுகிறது; யார் முதலில் வேள்வியில் ஸோம ரசத்தைக் குடிப்பது என்பது பற்றித் தெய்வங்களுக்குள் ஒரு போட்டி ஏற்பட்டுது; பந்தயத்தில் ஜயித்து வாயு முதலாவதா கவும், இந்திரன் இரண்டாவதாகவும் வந்தனர்.

கேனோபநிஷத்தில் ஒரு கதை உள்ளது. பரப்பிரும்மத் தின் பேரருளால் போரில் தேவர்கள் அசுரர்களை வென்றார் கள். ஆனால் அவர்கள் அதை உணராமல் அந்த வெற்றி தங்களுடையது என்று எண்ணிப் பெருமிதம் எய்தினார்கள். இதை அறிந்த பரம்பிரும்மம் அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க முடிவு செய்தது. அவர்கள் முன் அது ஒரு யக்ஷ வடிவில் தோன்றியது.

தேவர்கள் அந்த யக்ஷனை யார் என்று தெரிந்து கொள்ள விரும்பி அக்கினியை அவனிடம் அனுப்பினார்கள். யக்ஷனுடைய கேள்விக்குத்தான் உலகிலுள்ள எல்லாவற்றை யும் எரிக்கமுடியும் எனக் கூறினான். யக்ஷன் அக்கினியின் முன் ஒரு புல்லை வைத்து, அதை எரிக்கும் படி கூறினான். எவ்வளவு முயன்றும் அக்கினியால் அதை எரிக்க முடிய வில்லை. அவன் தோற்றுத் திரும்பினான்.

பிறகு தேவர்கள் வாயுவை யக்ஷனிடம் அனுப்பினார்கள். யக்ஷன் கேள்விக்கு, வாயு தான் உலகிலுள்ள எல்லாவற்றையும் தூக்கக் கூடும் எனக் கூறினான். யக்ஷன் அதே புல்லைத் தூக்கும் படி கூறினான். எவ்வளவு முயன்றும் வாயுவால் அதைத் தூக்க முடியவில்லை.

பின்னர் இந்திரன் அங்கு வந்தான் உமாதேவி அவன் முன் தோன்றி, பரப்பிரும்மம் தான் அவர்கள் முன் யக்ஷ வடிவில் வந்தது என்றான். பரப்பிரும்மத்துடைய அருளாலேயே அவர்கள் வெற்றியை அடைந்தார்கள் என விளக்கினாள். பரப்பிரும்மத்தை முதலில் கண்டறிந்த அக்கினி, வாயு, இந்திரன் ஆகிய மூவரும் மற்ற தேவர்களை விடச் சிறந்தவர்களானார்கள். (கேளோபநிஷந் III.IV)

அண்டினோருக்கு அவன் புகழையும் மக்கட் பேற்றையும், குதிரைகளையும், காளைகளையும், பொன்னையும் வாரி வழங்குகிறான். எதிரிகளை அவன் விரட்டுகிறான்; வலிமையில்லாதவர்கள், தங்களைக் காப்பாற்ற, அவனை அழைக்கிறார்கள்.

உலகில் அடிக்கும் காற்றான வாதத்தைப் பற்றி ஒரு ஸூக்தம் பேசுகிறது. "இடிமுழக்கத் தோடும், எல்லாவற்றையும் தகர்த்துக் கொண்டும் அதுபோகிறது. விண்ணை அளவளாவி அது புவியின் புழுதியை வாரி இறைக்கிறது. தன்னுடைய தேரில் ஏறி, உலகுக்கெல்லாம் அரசனான அவன் வேகமாகச் செல்லுகிறான். காற்று மண்டலத்தில் நடுப் பகுதியில் போய்க் கொண்டிருக்கும் அவன், ஒரு நாள் கூட ஓய்வெடுப்பதுமில்லை, தூங்குவது மில்லை. அவன் புனிதமானவன்; அவன் முதலில் பிறந்தவன்; அவன் நீரின் தோழன்; அவன் எங்கிருந்து உண்டானான்? அவன் எத்திசையலிருந்து வந்தான்? உலகின் கர்ப்பமாகவும், தெய்வங்களின் ஆத்மாவாகவும் அவன் இருக்கிறான்; தன்னிச்சையாக அவன் இயங்குகிறான். அவனுடைய

குரலைக் கேட்கிறோம்; ஆனால் அவனுடைய உருவத்தைக் காண முடியவில்லை." (ரி.வே.X.168. 1.4)

அவன் தெய்வங்களின் மூச்சுக்காற்றாக விளங்குகிறான். ருத்திரனைப் போல அவனும் நோய்களைக் குணப்படுத்தி, ஆயுளை அதிகரிக்கிறான்.

இடியுடன் கூடிய புயலுடனும், மின்னலுடனும், வாயுவிற்கு உள்ள தொடர்பை வேதம் சுட்டிக்காட்டுகிறது.

* * *

## 3.10 பர்ஜன்யன்

ஆப்தேயின் அகராதியில் பர்ஜன்ய: என்ற வடமொழிச் சொல்லிற்கு மேகம், மழை, மழையின் தெய்வம் என்று பொருளைக் காண்கிறோம். தெய்வம் என்ற நோக்கில், 'எவனொருவன், உரிய காலத்தில், பூமிக்கு விண்ணிலிருந்து நீரைக் கொடுக்கிறானோ (பிரார்ஜயதி), அவனே பர்ஜன்யன்" என்று ஒரு நூல் கூறுகிறது. (பிருஹத் தேவதா II. 37) இன்னும், "பெண் மக்களிடம் (ஜன) நட்புடன் (ஜன்ய) இருக்கிறானோ அல்லது உயர்ந்த (வர) வெற்றி வீரனாக (ஜேதா) உள்ளானோ அல்லது எவன் (மழையை) உண்டுபண்ணுகிறானோ (ஜயதி) அவன் பர்ஜன்யன்." (பிருஹத் தேவதா II. 38)

'ஒவ்வொரு நாளும் அதே தண்ணீர் மேலே போய்க் கீழே வருகிறது; கார்மேகங்கள் (பர்ஜன்யன்) பூமியை வாழ வைக்கின்றன; நெருப்பு விண்ணிற்குப் புத்துயிர் தருகிறது' என்று ஒரு ரிக் பேசுகிறது. (ரி.வே.I. 164.51)

இன்னுமொரு ரிக்: 'மருத்துக்கள் மழையைப் பெய்து பூமியை வெள்ளக்காடாகச் செய்யும் பொழுது, கார்மேகத்தால் (பர்ஜன்யேந) பட்டப்பகலிலும் கூட இருளைப் பரப்புகிறார்கள்.' (ரி.வே.I. 38.9)

மருத்துக்களை தேவதையாக உள்ள ஒரு ரிக் சொல்லுகிறது; 'கொடையாளிகளான வீரர்கள், வணங்குவோரின் நலனைக் கருதி, விண்ணின் பொக்கிஷத்தைக் கவிழ்த்தார்கள். அவர்கள் மழை நீரை விடுவித்து, கார்மேகங்களை (பர்ஜன்யம்) இரு உலகிலும் ஆறாகப் பெருகி ஓடச் செய்தனர்; அவைகள் உலர்ந்து போன இடங்களை எல்லாம் வெள்ளக்காடாக்கின.' (ரி.வே. V. 53.6)

கார் மேகங்கள் வந்து மழை பொழியும்படி செய்ய பிருஹஸ்பதியை மக்கள் வேண்டுகிறார்கள். கார் மேகங்கள் மழை பெய்வது போல, ஸோமரசத்துளிகள் ஓடுவதாக ஒரு ரிக் சொல்லுகிறது. கார்மேகத்தைப் பசுமாட்டின் மடிக்கும், மின்னலை அதன் முலைக்காம்புக்கும் ஒப்பிட்டு அதர்வ வேதம் பேசுகிறது. (அ.வே.X. 10.7)

பெரும்பாலும் வேதநூல்களில் பர்ஜன்ய: என்ற சொல் கார்மேகங்களையும் அதன் தேவதையையும் குறிக்கிறது. சில இடங்களில் இடியையும் விண்ணையும் அது குறிப்பிடுகிறது.

பர்ஜன்யன் தூண்டிவிடுவதால் தவளைகள் தங்களுடைய குரலை உயர்த்தியதாக ஒரு ரிக் சொல்லுகிறது. (ரி.வே.VII. 103.15). அவன் சில சமயங்களில் மலட்டுப் பசுவையும் ஒத்திருப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. கார்மேகங்கள் வந்து சில சமயங்களில் மழை பெய்யாமலேயே மேகங்கள் கலைந்து போவதையும் இது குறிக்கிறது.

நீர் நிரம்பிய தேரில் போகும்படியும் நீருள்ள தோல் பையைக் கவிழ்க்கும்படியும் ஒரு ரிக் அவனை வேண்டுகிறது. அவன் மழையைப் பொழியும் பொழுது சிங்கங்களின் உறுமல் சத்தம் வெகு தொலைவிலிருந்து கேட்கிறது; அவன் இடியுடன் வந்து தெய்வீகத் தகப்பனைப் போல மழையைக் கொடுக்கிறான். இடி இடித்துக் கொண்டே அவன் வரங்களையும், தீயோனையும் அழிக்கிறான்; உலகமே அவனுடைய ஆயுதத்தைக் கண்டு பயந்து நடுங்குகிறது.

அவன் மழையைப் பொழிந்து தாவரங்கள் செழிப்பாக வளருவதற்குக் காரணமாகிறான்.

'தாவரங்களிலும், பசுக்களிடத்தும், பெண் குதிரைகளிடத்தும், பெண்களிடத்தும், பர்ஜன்யன் கர்ப்பத்தை வைக்கிறான்,' என்கிறது ஒரு ரிக். (ரி.வே.VII. 1.2.2)

நேரடியாகக் கூறாவிட்டாலும், சில ரிக்குகளிலிருந்து, பூமிதான் பர்ஜன்யனுடைய மனைவி என்று தெரிகிறது. ஸோமனை அவனுடைய மகனாகச் சில ரிக்குகள் பேசுகின்றன.

* * *

## 3.11 ஆப: (நீர்த் தேவதைகள்)

வடமொழியில் ஆப: என்றால் தண்ணீர் என்று பொருளாகும். ஆறுகளிலும் மற்ற நீர் நிலைகளிலும், கடலிலும், மேகங்களிலும் உள்ள நீருக்கு இது பொதுவான பெயர். இந்திரன் வஜ்ஜிராயுதத்தால் பூமியை வெட்டி, ஆறுகள் ஓடுவதற்குப் பாதையை அமைத்ததாக ரிக்குகள் கூறுகின்றன. அவர்கள் ஆண் தெய்வங்களின் பாதையைப் பின்பற்றும் பெண் தெய்வங்கள். அவர்களைத் தாயார்களாகவும், இளம் மனைவிகளாகவும் சில ரிக்குகளில் வேதம் கூறுகிறது. இந்திரனுடைய கட்டளைகளை அவர்கள் ஒரு பொழுதும் மீறுவதில்லை.

'வருணன் அவர்கள் நடுவில் சுழன்று கொண்டு, கீழ்நோக்கி, மக்கள் பேசும் மெய்களையும் பொய்களையும், கவனிக்கிறான். 'அரசனான வருணனும், ஸோமனும், நீர்த் தேவதைகளிடமிருந்து வலிமையையும், புத்துணர்ச்சியையும் பருகிப் பெறுகின்றனர். அந்த நீர்த் தேவதைகளுக்குள் அக்கினி நுழைந்துள்ளது; அத்தகைய பெண் தெய்வங்களான நீர்த் தேவதைகள் எங்களைக் காப்பாற்றட்டும்.' (ரி.வே.VII.

49 3.4) இங்கே நீர்த்தேவதை மேகத்தையும், அக்கினி மின்னலையும் குறிக்கும்.

மேலே கூறிய ரிக்கிலும், மற்றும் சில ரிக்குகளிலும், அக்கினியைப் பெற்றெடுக்கும் தாயார்களாக நீர் நிலைகளை வேதம் பேசுகிறது.

பின்வரும் ஆப: பற்றி மூன்று ரிக்குகளையும் சந்தியாவந்தனம் செய்யும் அந்தணர்கள் தினம் ஓதுகிறார்கள்:

ஆபோ ஹி ஷ்டா மயோ புவ:
தான ஊர்ஜே ததாதன |
மஹேரனாய சக்ஷஸே ||
யோவ: சிவதமோ: ரஸ:
தஸ்யபாஜயதேஹ ந: |
உசதீரிவ மாதர: ||
தஸ்மா அரம்கமாமவ:
யஸ்ய க்ஷயாய ஜின்வத
ஆபோ ஜனயதா ச ந: || (ரி.வே.X. 9. 1–3)

இவற்றின் பொருள் வருமாறு:

'ஜல தேவதைகளாகிய நீங்கள் உயர்ந்த சுகத்திற்குக் காரணமாக இருக்கிறீர்கள் என்பது பிரசித்தம். ஆகையால் நீங்கள் எங்களுக்கு ரமணீயமான ஞான திருஷ்டியின் பொருட்டு சக்தியை அளியுங்கள். உங்களிடம் எந்தப் பரம மங்களமான பேரின்பரசம் உள்ளதோ, அதற்கு இங்கேயே எங்களை நீங்கள், அன்பு சுரக்கும் அன்னையைப் போல உரியவர்களாக்குங்கள். எந்த ரஸத்தை வழங்கும் பொருட்டு நீங்கள் இன்பவடிவாய் விளங்குகிறீர்களோ அதற்காக உங்களை ஆர்வத்துடன் அடைகிறோம்; நீங்கள் எங்களுக்கு சந்ததியை விருத்தி செய்யும் சக்தியை அளியுங்கள்.' (கடைசி ரிக்கின் பொருள் தெளிவாக இல்லை.)

அந்தணர்கள் செய்ய வேண்டிய மாத்தியாஹ்னிகத்தில் பின் வரும் மந்திரம் உள்ளது:

ஆப: புனந்து ப்ருதிவீம் ப்ருதீவீ பூதா புனாது மாம்
புனந்து ப்ரஹ்மணஸ் பதிர் பிருஹ்ம பூதா புனாது மாம்।
யதுச் சிஷ்ட மபோஜ்யம் யத்வா துச்சரிதம் மம
ஸர்வம் புனந்து மாமாபோSஸதாந்ச பிரதிக்ரஹம்
ஸ்வாஹா॥

பொருள்:

ஜல தேவதை தன் இருப்பிடமாகிய பூமியைப் புனிதப்படுத்தட்டும்; அப்படி புனிதமாக்கப்பட்ட பூமி என்னைப் புனிதமாக்கட்டும். அது வேதத்திற்கு ஊறைவிட மாகிய ஆசார்யனையும் புனிதமாக்கட்டும் என்றும் புனிதமாயுள்ள வேதம் என்னைப் புனிதமாக்கட்டும். பிறர் உண்ட மிச்சமும், உண்ணத்தகாததை உண்டதாலும், கெட்ட நடத்தையாலும்; கெட்டவர்களிடமிருந்து தானம் வாங்கிய தாலும் உண்டான பாவங்களிலிருந்து என்னை ஜலதேவதை புனிதமாக்கட்டும்.

ஜல தேவதைகள் நம்மிடமிருந்து அழுக்கையெல்லாம் எடுத்துக் கொண்டு செல்லுகின்றன; அவைகளிலிருந்து நாம் நன்கு கழுவப்பட்டு, சுத்தமாக வெளிவருகிறோம். நீதி நெறி தவறி, செய்த பிழைகளையும், பொய் பேசுவதையும், மற்றவர்களைச் சபிப்பதையும், கழுவும்படியும் ஜலதேவதை களை வேண்டுகிறார்கள். அவர்கள் நோய்களைக் குணப்படுத்தி, நீண்ட ஆயுளையும், தேக வலிமையில் கொடுக்க வல்லவர்கள். அவர்கள் வீட்டில் மக்களின் தேக நலனைக் கவனித்துக் கொள்ளுகிறார்கள்.

வணங்குபவர்களுக்குத் தாயாக இருந்து கொண்டு, அவர்கள் தங்களுடைய தாய்ப்பாலுடன் தேனைக் குழைக்கிறார்கள். நீரின் அலைகள் தேன் செறிந்து உள்ளன;

நெய் சொட்டும் அதை இந்திரன் குடித்து மகிழ்ச்சியில் திளைக்கிறான்.

வணங்குபவர்கள் ஜல தேவதைகளை விண்ணில் உண்டான, தேன் செறிந்த, அலைகளை, மண்ணில் ஊற்றி, அவைகளைச் சிறையிலிருந்து விடுவித்த இந்திரனுக்குக் கொடுத்துத் தங்களுக்கும் அளிக்கும் படி கோருகிறார்கள். (இது மேகங்கள் மழையாகப் பொழிவதைக் குறிக்கும்)

ஒரு இளைஞன் அழகிய பெண்களிடம் மகிழ்வதைப் போல, ஸோமன் ஜலதேவதைகளிடம் சந்தோஷமடைகிறான்; அவன் ஒரு காதலனைப் போல அவர்களை நெருங்கு கிறான்; அந்த யுவதிகளும், அவனைப் பார்க்க ஏங்கி, அவனைக் கண்டவுடன் வணங்குகிறார்கள். (ரி.வே.X. 30. 5.6)

* * *

அத்தியாயம் 4

# மண்ணுலகத் தெய்வங்கள்

## 4.1 ஸரஸ்வதியும் மற்ற தெய்வீக ஆறுகளும்

ஆப: எனப்படும் ஜல தேவதையைத் தவிர ரிக் வேதம் தெய்வீக ஆறுகளைப் பற்றியும் பேசுகிறது. ரிக் வேதத்தில் ஒரு ஸூக்தம் (X. 75) முழுவதும் சிந்து என்ற நதியையும் மற்ற நதிகளையும் புகழ்வதாக உள்ளது; இதில் 5,6 ரிக்குகள் கங்கை, யமுனையையும் சிந்து நதியில் வந்து சேரும் சில உபநதிகளையும் குறிப்பிடுகின்றன; மற்றுமொரு ஸூக்தத்தில் (III.33), விசுவாமித்திரர், தேர், குதிரை, ஆடுமாடுகள் முதலியவையுடன் ஸுதாஸ் அரசனை விட்டுக் கிழக்கு நோக்கிப் போகும் பொழுது, குறுக்கிடும் இரு உபநதிகளான பியாஸ் (தற்கால ராவி) சாதுத்ரீ (தற்கால சட்லெஜ்) இரண்டோடும் உரையாடல் நிகழ்த்துகிறார். இதில் அவர் அந்த நதிகளைப் புகழ்ந்து, நான் உடமைகளுடன் ஆறுகளைத் தாண்டிச் செல்லுவதற்காக அவைகளை ஆழமில்லாமல் ஓடும்படி, கேட்டுக் கொள்ளுகிறார்.

இது தவிர, ரிக்வேதம் முக்கியமாகப் பேசும் ஆறு ஸரஸ்வதியாகும். பல ரிக்குகளில் வேதம் அதைப் புகழ்கிறது; தவிர அதை ஒரு பெண் தெய்வமாக உருவகப்படுத்தி அடிக்கடி பேசுகிறது.

ஸரஸ்வதி ஆற்றின் இருகரைகளிலும் பசும் புல்தரை உள்ளது. அதன் இரு கரைகளிலும் அரசர்களும், மக்களும் வசிக்கிறார்கள். மருத்துக்கள் அதன் நண்பர்கள். அதில் பயிர்

களைச் செழிப்பாக்கும் வெள்ளை நீர் ஓடுகிறது. மலைகளிலிருந்து தெளிவான நீருடன் ஓடும் அது, மற்ற ஆறுகளை விடச் சிறப்பாக விளங்குகிறது.

'தாமரைத் தண்டுகளுக்காக பூமியைத் தோண்டுபவன் போல, அவள் (ஸரஸ்வதி), தன்னுடைய வலிமையான அலைகளால் மலை உச்சிகளைத் தகர்க்கிறாள்.' (ரி.வே.VI. *61.8)*

'வலிமையுள்ளவர்களை விட அதிக மகிமை வாய்ந்த அவள், மற்ற வேகமாகப் போகும் ஆறுகளை விட அதிவேகமாகப் போகிறாள்; வெற்றிக்காக நிர்மாணிக்கப்பட்ட ஒரு தேரைப் போல அவள் மிகப் பெரியதாக அமைக்கப் பட்டாள்; மகரிஷிகளெல்லாம் அவளைத் துதிக்க வேண்டும்.' *(ரி.வே.VI. 61.13)*

ஒரு ரிக்கில் ரிஷி ஸரஸ்வதியைப் பெண்ணாக உருவக்கப்படுத்தி, அவளுடைய பாலைக் கொடுக்க மறுக்க வேண்டாம் எனக் கேட்டுக் கொள்ளுகிறார். இங்கே, ஒரு குழந்தை தன் தாயிடம் தாய்ப்பாலைக் கோருவது போல, ரிஷி ஆறாகிய ஸரஸ்வதியிடம், தாய்ப்பாலைப் போல, ருசியும், புஷ்டியும் உள்ள தன்னுடைய நீரைக் கொடுக்கும் படி கேட்கிறார். *(ரி.வே.VI. 61.14)*

ரிஷிகள் பொருளையும், செல்வத்தையும், மக்கட் பேற்றையும், சாகாமையையும் கொடுக்கும்படி ஸரஸ்வதியை வேண்டுகிறார்கள். அவளுடைய மார்பகம் வற்றாததாகவும், மகிழ்ச்சியைத் தரும் ஊற்றாகவும் ஒரு ரிஷி கூறுகிறார். *(ரி.வே.I. 164.49)*. அவள் தெய்வங்களைத் தூஷிப்பவர்களை அழிக்கிறாள். தன்னை வழிபடுபவர்களைக் காப்பாற்றி, அவர்களுடைய எதிரிகளை வெல்கிறாள்.

ஸரஸ்வதிக்கு மருத்துக்கள் தோழர்கள் என்றும், அவர்களுடன் சேர்ந்து வருவதாகவும் சில ரிக்குகள் கூறுகின் றன.

ரிக் வேதம் ஸரஸ்வதியை ஒரு நதி—தேவதையாக மட்டும் கருதுகிறது. சதபத பிராம்மணம் அவளை வாக்—தேவதையாக அதாவது பேச்சுக்கு தெய்வமாக பேசுகிறது. பிற்கால நூல்களில் ஸரஸ்வதி படிப்புக்கும், அறிவுக்கும், புலமைக்கும், பேச்சுத் திறனுக்கும் தேவதையாகவும், பிரம்மாவின் மனைவியாக முக்கிய தெய்வமாகவும் விளங்குகிறாள்.

வடமொழியில் 'ஸரஸ்' என்றால் 'ஏரி, குட்டை, பெரிய நீர் நிலை' என்று பொருளாகும். இந்த ஸரஸ் என்ற சொல்லிலிருந்து ஸரஸ்வதி, நீர் உள்ளவள் என்ற பொருளில் உருவாகியுள்ளது.

ஸரஸ்வதி எந்த நதியைக் குறிக்கிறது என்பதைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் பல கருத்துக்களைக் கூறுகிறார்கள். வேத காலத்தில் பெரிய ஆறாக ஓடிக்கொண்டிருந்த .அது, சிறிது சிறிதாக வற்றி, பாலைவனத்தில் காணாமல் போய்விட்டது என்று தோன்றுகிறது. இது தார் பாலைவனத்துக்கு 1000 அடி கீழே இன்னும் ஓர் ஆறாக ஓடுகிறது என்று சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். இதைப்பற்றிய ஆராய்ச்சி தொடர்கிறது.

* * *

## 4.2 பிருதிவீ (பூமி)

ஸோம ரசத்தைக் குடித்த உத்சாகத்தில், இந்திரன் பூமியைத் தாங்கி, அதை அகலப்படுத்தினான் என்கிறது வேதம்: (ரி.வே.II.15.2) இங்கு 'அகலப்படுத்தினான்' என்று பொருள்படும் வடமொழிச் சொல் 'பப்ரதத் என்பது வினைச் சொல்லான 'ப்ரத்' என்பதிலிருந்து உருவாகியுள்ளது. 'ப்ரத்' என்றால் 'அகலப்படுத்துதல், விரிவுபடுத்துதல்'

எனப்பொருளாகும். இதிலிருந்து, பிருதிவீ என்ற சொல் 'அகலமானது' என்ற பொருளில் உருவம் பெற்றுள்ளது. ஆகவே, ரிக் வேதத்திலேயே பிருதிவி என்பதற்குச் சொல்லியலைக் (etymology) காண்கிறோம். தைத்திரீய ஸம்ஹிதையும் தைத்திரிய பிராம்மணமும், ப்ரத் என்ற வினைச் சொல்லிலிருந்து பிருதிவி உருவகம் பெற்றதாகவே குறிப்பிட்டுக் கூறுகின்றன.

ரிக் வேதத்தில் ஒரே ஒரு ஸூக்தம் தான் (V. 84) பிருதிவீயை மட்டும் தனியாகப் புகழ்கிறது; வேறு சில ஸூக்தங்களில், அது தியௌஸ் (விண்) உடன் சேர்ந்தே பாடப் பெறுகிறது. பிருதிவீயில் பல வேகமாக விரையும் ஆறுகள் உள்ளன. அது, பெரிதாகும் மேகத்தை, கனைத்துக்கொண்டே போகும் குதிரையைப் போல, ஓட்டுகிறது. இதில் பல உயரமான மலைகள் உள்ளன; அந்த மலைகளின் பாரத்தை அது தாங்குகிறது. காட்டிலுள்ள மரங்களையும் தாங்குகிறது. அது மழையைப் பரவலாக இறைக்கிறது. மகிமை வாய்ந்ததாகவும், உறுதியானதாகவும், ஒளி வீசுவதாகவும் இருக்கிறது.

பிருதிவீயைப் பெண் தெய்வமாகவும், தாயகவும், வணங்குகிறார்கள், அந்திமக்கிரியையில், இறந்தவனை அன்பு மிகுந்த அன்னையான பூமியின் மடிக்கும் போகும் படி கூறுகிறார்கள். இறந்தவனை அழியாமல் காக்கும்படி பூமியை வேண்டுகிறார்கள். (ரி.வே.X. 18.10)

* * *

## 4.3 அக்கினி

எல்லாத் தெய்வங்களுக்கும் கொடுக்கப்படும் ஆஹுதிகளை வேள்வித் தீயில் போடுகிறார்கள். வேள்வித் தீயான அக்கினி பகவான் இந்த ஆஹுதிகளை எடுத்துக்

கொண்டு போய் உரிய தெய்வங்களுக்கு வழங்குகிறான். ஆகையால் அக்கினிக்கு வேதகாலத் தெய்வங்களில் உயர்ந்த இடம் உண்டு. முதல் வேதமான ரிக்வேதத்தில், முதல் மண்டலத்தில், முதல் ஸூக்தத்தில் 'அக்னி மீளே புரோஹிதம்' என்று தொடங்கும் முதல் ரிக்கின் முதல் சொல்லாக அக்கினி அமைந்திருக்கிறது. இது தற்செயலாக நேர்ந்தது அல்ல, அக்கினியின் முக்கியத்துவத்தைக் காட்டவே இப்படி அமைந்திருக்கிறது என்ற கருத்தும் நிலவுகிறது. ரிக்வேதமே அக்கினி பகவானிடமிருந்து வந்தது என்று மதுச்சந்தஸ் என்ற மகரிஷி கூறுகிறார்.

அக்கினி பகவான், ஹவிஸை மட்டுமல்லாமல், ஓதப்படும் மந்திரங்களையும் மேலுலகிற்கு எடுத்துப் போய் அந்தந்த உரிய தெய்வங்களிடம் ஹவிஸையும் மந்திரங்களையும் சேர்க்கிறான். இப்படியாக மண்ணுக்கும் விண்ணுக்கும் நடுவில் ஒரு தொடர்பை அவன் அமைக்கிறான். அக்கினி பகவான், சுடர் விட்டெரியும் தீயின் ஓசை மூலம், தெய்வங்களைக் கூப்பிட்டு, வேள்வி நடக்கும் இடத்திற்கு அழைத்து வருகிறான். வேள்விகளில் பல பணிகளைப் புரியும் பல்வேறு வேதியர்களுடைய எல்லா வேலைகளும் அவனிடம் ஒன்று சேர்வதால், அவன் புரோஹிதன் என்று அழைக்கப்படுகிறான் அவனிடம் எல்லாச் செல்வங்களும் இருக்கின்றன; அவைகளை அவன் தாராளமாக, வேள்வி புரியும் சான்றோர்க்கு, அளிக்கிறான்.

வடமொழியில் 'அக்ரே நயதி' என்றால் 'முன்னால் இருந்து கொண்டு அழைத்துச் செல்பவன்' என்று பொருளாகும். அக்ரே நயதி என்பதால் அக்கினி ஆயிற்று என்று யாஸ்கர் கூறுகிறார். (நீருக்தம் VII. 14)

ஸௌனகர் கூறுகிறார்: "பூமியிலுள்ள இந்த அக்கினியை மனிதர்கள் அழைத்துச் செல்கிறார்கள். (நீயதே); மேலுலகிலுள்ள அந்த அக்கினி மனிதர்களை மண்ணிலிருந்து விண்ணுக்கு அழைத்துச் செல்கிறது (நயதி); ஆகையால் இந்த

இரண்டும் அக்கினி என்ற ஒரே பெயரைப் பெற்று இரண்டு வெவ்வேறு பணிகளைப் புரிகின்றன." (பிருஹத் தேவதா: I. 91)

"எது வேள்வி நடக்கும் இடத்திற்குச் சென்று தன்னுடைய உடம்பான விறகுக் கட்டைகளை ஆஹுதியில் எரிக்கிறதோ அதுதான் அக்கினி," என்று ஸாயனாசாரியர் தன்னுடைய உரையில் கூறுகிறார். (ரி.வே.I. 1.1)

ரிக் வேதத்திற்குப் பிறகு வந்த பிராம்மண நூல்கள் அக்கினி தெய்வங்களுக்குள் முதல்வன் (பிரதமோ தேவனாம்) என்று சொல்லுகின்றன. (தைத்திரிய பிராம்மணம் 2.4 .33. ஐதரேய பிராம்மணம் 1.4.)

அக்கினிக்குப் பல பெயர்கள் உண்டு. அவைகளைச் சற்று கவனிப்போம்.

ஜாதவேதஸ் என்ற பெயர் ரிக் வேதத்திலும் மற்ற நூல்களிலும் அக்கினியைக் குறிப்பதாக இருக்கிறது. உலகில் பிறந்த எல்லாப் பிராணிகளையும் அவன் அறிவதால் ஜாதவேதஸ் என்று கூறப்படுகிறான். படைக்கப்பட்ட எல்லா உலகங்களையும் அவன் அறிவதாலும் அவன் ஜாதவேதஸ் ஆகிறான். அவன் பிறந்த எல்லாப் பிராணிகளுள்ளும் உறைகிறான். அவனன்றி உயிரில்லை, என்பதாலும் அப்பெயர் அக்கினிக்கு உள்ளது. அவனிடத்தில் ஆஹுதிகளைக் கொடுக்கும் பொழுது செல்வம் கொழிப்பதாலும் அப்பெயர் வந்தது. பிறந்த உடனேயே, அவன் ஆன்ம அறிவு நிரம்பியவனாக இருந்தாலும் அப்பெயர் வந்தது என்றும் கூறுவர். அக்கினிக்கே ஏற்பட்ட பெயர் ஆனாலும், ஜாதவேதஸ் ஓரிரு சமயங்களில் ஸூரியனையும் குறிப்பதாக ரிக் வேதத்தில் காணப்படுகிறது. உதாரணமாக 'உதுத்யம் ஜாதவேதஸம தேவம் வஹந்தி: கேதவ:' என்ற மந்திரத்தில் ஜாதவேதஸ் ஸூரியனைக் குறிக்கிறது. (யாஸ்கர்: நிருத்தம் VII. 19)

ஸௌனகர் கூறுகிறார். "பிறந்தவுடன் (ஜாத), அவனுக்கு எல்லாப் பிராணிகளையும் தெரிவதால் (வேத) அவன் ஜாதவேதஸ்; அவனிடத்தில் எல்லா வித்தையும் (வித்யா) உண்டாகிறதாலும் அவன் ஜாதவேதஸ்; பிறந்தவுடன் எல்லா செல்வங்களையும் அறிவதாலும் (அதி வேத்தி) அவன் ஜாதவேதஸ் ஆகிறான். (பிருஹத் தேவதா I. 30)

"பிறந்தவுடன் (ஜாத:) தெரியப்படுவதால் (வித்யதே) அவன் ஜாதவேதஸ்; பிராணிகளால் (ஜாதை:) அவன் தெரியப்படுவதாலும் (வித்யதே) அவன் ஜாதவேதஸ்," (பிருஹத் தேவதா I 92)

வைச்வாநரன் என்று அக்கினிக்கு மற்றொரு பெயர் உண்டு. அக்கினி மனிதர்களை, வேள்விகள் மூலமாக, அடுத்த உலகுக்கு அழைத்துச் செல்வதால், அவன் வைச்வாநரன். வேள்விகளின் பொழுது மனிதர்கள் அவனைத் தூக்கிச் செல்வதால் (விச்வே ஏனம் நரா: நயந்தி) அவன் வைச்வாநரன், பிராணிகள் உண்ணும் உணவை ஜீரணம் செய்ய உஷ்ணம் தேவைப்படுவதாலும் அப்பெயர் வந்தது. (நிருக்தம் VII. 21). அவன் ஆஹுதிகளை எடுத்துச் செல்வ தாலும், உணவை சமைப்பதாலும், எரிக்கத்தக்கதையெல்லாம் எரிப்பதாலும் (வஹஸீதி, பசஸீதி, தஹஸீதி) அவன் வைச்வாநரன் ஆகிறான். (நிருக்தம் VII. 23)

'எல்லா மக்களுக்கும் பொதுவான நெருப்பு' என்றும், ஜீரண சக்திக்கு வேண்டிய வயிற்றினிலுள்ள இயற்கையான உஷ்ணம்' என்றும் இரு பொருள்களை ஸாயனர் கொடுக்கிறார்.

ஸௌனகர் கூறுகிறார்: "மகரிஷிகள் அவனை இவ்வுலகில் அக்கினி என்றும், நடுவிலுள்ள உலகில் ஜாதவேதஸ் என்றும், மேலுலகில் வைச்வாநரன் என்றும் புகழ்ந்து பாடுகிறார்கள்." (பிரஹத் தேவதா I. 67)

பகவத் கீதையில் கிருஷ்ணபரமாத்மா தானே வைச்வாநரனாகப் பூமியில் அவதரிப்பதாகக் கூறுகிறார்.

"ஹம் வைச்வாநரோ பூத்வா பிராணினாம்
தேஹமாச்ரித: |
பிராணாபானஸமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம்||
(பகவத் கீதை XV. 14)

இதன் பொருள் வருமாறு:

"உதரக் கனலாக நான் உயிர்களின் உடலில் இருந்து கொண்டு, பிராண அபான வாயுக்களுடன் கூடி, நான்கு விதமான அன்னத்தைச் செமிக்கிறேன்" (சுவாமி சித்பவாநந்தரின் மொழி பெயர்ப்பு)

சுவாமி சித்பவானந்தா மேலும் விளக்குகிறார்:—

"வயிற்றுக்குள் இருந்து கொண்டு உணவை செமிக்கும் அக்கினிக்கு வைச்வாநரன் என்று பெயர் ஏற்பட்டுள்ளது. அதற்கு உணவு நான்கு விதங்களில் அளிக்கப்படுகிறது. மெல்லுதல், உறிஞ்சுதல், நக்குதல், விழுங்குதல் ஆகிய நான்கு விதங்களில் உணவானது உட்கொள்ளப்படுகிறது. ரொட்டி போன்ற கடின பதார்த்தம் மெல்லப்படுகிறது. இளம் நுங்கு போன்றது உறிஞ்சப்படுகிறது. தேன் நக்கப்படுகிறது. பாயஸம் விழுங்கப்படுகிறது. இவையாவையும் ஜீரணம் செய்வது வைச்வாநரன் என்ற அக்கினி."

தனூனபாத் என்று அக்கினிக்கு ஒரு பெயர் உண்டு. வடமொழியில் தனு என்றால் உடம்பு என்று பொருள்; ஆனால் இந்த இடத்தில் அதற்குப் பசுமாடு என்று பொருளாகக் கருதுகிறார்கள். பசுவிடமிருந்து கிடைக்கும் பால் பசுவின் மகனாகச் சொல்லுகிறார்கள். பாலிலிருந்து கிடைக்கும் நெய் பசுவின் பேரனாகிறது. நபாத் என்றால் பேரன் என்று பொருள். வேதகால ஆரியர்களுக்கு வேள்வித் தீயில் ஆஹுதி செய்வது தான் நெய்யின் முக்கிய

பயோகம், ஆகையால் நெய்யும் அக்கினியும் தனூனபாத் என்று ரிக் வேதம் கூறுகிறது.

மின்னலிலும், கட்டைகள் உராய்வதிலும் அக்கினி தன்னையே உண்டாக்கிக் கொள்வதாலும் தனூனபாத் என்ற பெயர் உள்ளது. இங்கு நபாத் என்றால் மகன் என்றாகும்.

வேதத்தின் சொல்லியல் படி, தனூனபாத் என்றால் நெய்யை விழுங்குபவன் என்றும், தன்னுடைய உடம்பையே (தனு = விறகு) சாப்பிடுபவன் என்றும் பொருள் ஆகிறது.

அபாம் நபாத் என்று அக்னிக்கு மற்றொரு பெயர் உண்டு. வேதகாலத்தில் இதை ஒரு தனித் தெய்வமாகவே கருதி வணங்கி வந்தார்கள். இதைப் பற்றி தனியாகவே அத்தியாயம் 3.3 ல் பார்ப்போம்.

நாரசம்ஸன் என்று இன்னும் ஒரு பெயர் அக்கினிக்கு உண்டு. 'மனிதர்கள் சுற்றிலும் உட்கார்ந்து கொண்டு அவனைப் புகழ்கிறார்கள்' (நரா: அஸ்மின் ஆஸீனா: சம்ஸந்தி) என்பதால் அவன் நாரசம்ஸன். வேள்விகளில் அந்தணர்கள் வேள்வித் தீயைச் சுற்றிலும் உட்கார்ந்து கொண்டு அக்கினியையும் மற்ற தெய்வங்களையும் புகழும் வேத மந்திரங்களை ஓதுவதை இது குறிக்கிறது. (நிருக்தம் VIII. 6)

வஹ்னி என்ற அக்கினியின் ஒரு பெயர் உபயோகத்தில் உள்ளது. 'தூக்கிச் செல்வது' அல்லது 'எடுத்துச் செல்வது' என்ற பொருள் உள்ள வடமொழி வினைச் சொல் 'வஹ்' என்பதிலிருந்து இச்சொல் வந்திருக்கிறது. வேள்விகளில் மனிதர்கள் கொடுக்கும் ஆஹுதிகளை எடுத்துக் கொண்டு போய் அந்தந்த தெய்வங்களுக்குக் கொடுப்பதால் (ஹவிஷாம் வோடார:) அக்கினிக்கு வஹ்னி என்ற பெயர் வந்தது. (ரி.வே. I 60.1 — ஸாயனர் உரை.)

12

திரவினோதஸ் என்று இன்னும் ஒரு பெயர் அக்கினிக்கு உள்ளது. வடமொழியில் திரவிணம் என்றால் செல்வம் அல்லது வலிமை. ஆஹுதிகள் மூலமாக அக்கினி செல்வத்தையும் வலிமையையும் கொடுப்பதால் அவன் திரவினோதஸ் ஆகிறான். (நிருக்தம் VIII. 2; பிருஹத் தேமநா II. 25)

அக்கினி மூன்று விதமாகப் பூமியிலும் காற்றிலும், விண்ணிலும் தென்படுகிறது என்று ரிக்வேதம் கூறுகிறது. பூமியில் சமையலறையில் உள்ள நெருப்பாகவும், வேள்வித் தீயாகவும் கண்ணுக்குப் புலப்படுகிறது; கண்ணுக்குத் தெரியாமல் எல்லாப் பிராணிகளுக்குள் உறையும் உதரக் கனல் என்று கூறப்படும் உணவை ஜீரணிக்கும் சக்தியும் இதில் அடங்கும். இரண்டாவதாகக் காற்றில் மின்னலாகத் தென்படும் அக்கினியாகும். மூன்றாவதாக வானத்தில் ஒளிவீசும் ஸூரியன் ஆகும். (மிகவும் முக்கியமான தெய்வமாதலால் ஸூரியனைத் தனியே பல ரிக்வேத ஸூக்தங்கள் பாடுகின்றன). இதை ஸாயனார் தன் உரையில் கூறகிறார். (பார்த்திவ வைத்யுத ஸூரிய ரூபா: திஸ்ரஸ்தனூ:) (ரி.வே.III 2.9)

அக்கினி எப்படி உண்டானது என்பது பற்றி ரிக்வேதமும் மற்ற வேத நூல்களும் பலகருத்துக்களைக் கூறுகின்றன. அக்கினியின் தகப்பன் தியௌஸ் என்றும், அக்கினியின் பெற்றோர்கள் தியௌஸும் பிருத்திவீயும் என்றும் சில ரிக்குகள் கூறுகின்றன. துவஷ்டா விற்கும் தண்ணீருக்கும் மகனாகவும், விண்ணுக்கும் மண்ணிற்கும் மகனாகவும், சில ரிக்குகள் பேசுகின்றன. தனித்தனியாக துவஷ்டாவிடமிருந்து உண்டானதாகவும் தண்ணீரிலிருந்து உண்டானதாகவும் சில ரிக்குகள் கூறுகின்றன. இந்திரன் இரு கற்களுக்கிடையே அக்கினியை உண்டாக்கியதாகவும் ரிக்வேதம் பேசுகிறது. அக்கினி இலா என்பவளுடைய மகன் என்றும் ஒரு ரிக் கூறுகிறது; ஆரியர்களுக்கு வெளிச்சம்

கொடுப்பதற்காகத் தெய்வங்கள் அக்கினியை உண்டாக்கிய தாகவும் ஒரு கருத்து இருக்கிறது. அதே சமயம், அக்கினி யைத் தெய்வங்களின் மகனாகவும் சில ரிக்குகள் கூறுகின்றன. படைப்போனுடைய வாயிலிருந்து அக்கினி உண்டானதாகப் புருஷ ஸூக்தம் கூறுகிறது. (ரி.வே.X. 90.13)

அக்கினியின் பிறப்பைப் பற்றிக் கூறப்படும் வெவ்வேறான கருத்துக்கள் ஒன்றோடொன்று முரண் பாடானவை அல்ல; ஏனெனில் அவைகள் அக்கினி உற்பத்தியாகும் வெவ்வேறு இடங்களைக் குறிக்கின்றன.

பூமியில் தினமும் அரணிக் கட்டைகளைத் தேய்த்து அக்கினியை உண்டாக்குவதைப் பல ரிக்குகள் கூறுகின்றன. இதில் மேல் கட்டை தகப்பனாகவும் கீழ்க் கட்டை தாயாகவும் விளங்குகின்றன. 'கையில் பிடிபடாமல் நழுவிப்போகும் பாம்புகளின் குட்டிகளைப் போல, உன்னையும் பிடிப்பது மிகக் கடினம்." என்று ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே.V. 9.4)

பிறந்தவுடன், குழந்தையாக இருக்கும் பொழுதே அக்கினி பெற்றோர்களை விழுங்கி விடுகிறான். ஒரு ரிக்கூறுகிறது. "பச்சிளம் குழந்தையான அக்கினி தாய்க்கு அருகில் போய் தாய்ப்பால் குடிக்காமலேயே வளர்வது மிக வியப்பாக இருக்கிறது. மடியில்லாத அவனுடைய தாய் அவனை ஈன்றவுடன், அவன், தன் மாபெரும் பணியில் ஈடுபட்டு, திடீரென்று வலிமையாக வளர்ந்தான்." (ரி.வே.X. 115.1)

மற்றுமொரு ரிக்பேசுகிறது: "கவனமாக இருக்கும் த்வஷ்டாவின் பத்து இளம் பெண்கள் அக்கினியை உண்டு பண்ணி, அதை இங்கு மங்கும் எடுத்துச் செல்லுகிறார்கள். அவனுடைய உயர்ந்த சுடர்கள் கூர்மையான முனையுடனும், இயற்கையான ஒளி வீசும் பிரகாசத்துடனும் மக்களிடையே காணப்படுகின்றன". (ரி.வே.I. 95.2) இங்கு பத்து பெண்கள் அக்கினியை மூட்டும் மனிதனின் பத்து விரல்களைக்

குறிக்கின்றன. வேள்விக் கூடத்தில் பிறந்த குழந்தையான மூட்டிய அக்கினியை எடுத்துச் சென்று பல வேள்விக் குண்டங்களில் தீயை மூட்டுவது வழக்கம்.

தினமும் ஸூரிய உதயத்திற்குப் பிறகுதான் அக்கினியை மூட்ட வேண்டும். தினமும் காலையில் வேள்விகளுக்காக அரணிக் கட்டைகளைத் தேய்த்து அக்கினியை மூட்டுவதால், அவன் சிறியவன், இளையவன் என்ற உரிச்சொற்கள் உபயோகத்தில் உள்ளன.

அக்கினி முதியோனாகவும், இளையவனாகவும் இருக்கிறான்; அதாவது, பல நாட்களுக்கு முன் மூட்டப்பட்ட அக்கினி முதியோனாகவும், இன்று மூட்டப்பட்ட அக்கினி இளையவனாகவும் இருக்கிறார்கள். இதை ஒரு ரிக்கூறுகிறது: "ஓ அக்கினியே! முதியோனான உனக்கு நான், பழையதும் பின் வந்ததுமான இந்தப் பாசுரங்களைப் பாடுகிறேன். வலிமையுள்ளவர்களுக்கு இந்த மாபெரும் ஆஹுதிகள் கொடுக்கப்படுகின்றன. ஒவ்வொரு பிறப்பிலும் ஜாதவேதஸ் நிலை பெறுகிறாள்." (ரி.வே.III. 1.20)

வயதான பிறகு அவன் மறுபடியும் இளையோனாகப் பிறக்கிறான். இப்படியாக அவன் முதுமையை அடைவதே இல்லை; அவனுடைய புதிய ஒளி பழைய ஒளியைப் போலவே இருக்கிறது. முதல் வேள்வியை அவன் நடத்தியதால், எந்த ஒரு வேள்வி புரியும் மனிதனும் அவனை விட மூத்தவனாக இருக்க முடியாது.

ரிக் வேதம் அவனை மரத்திலிருந்து பிறந்ததாகவும், செடிகளின் கருவாகவும் பேசுகிறது. காடுகளில் மரங்களின் கிளைகள் ஒன்றொடொன்று உராய்வதால் உண்டாகும் காட்டுத்தீயும் இதில் அடங்கும்.

ஒரு ரிக் கூறுகிறது: "வானின் நெற்றியாகவும், பூமியின் தொப்புளாகவும் இருந்து கொண்டு அக்கினி விண்ணுக்கும் மண்ணுக்கும் நடுவில் தூதனாக விளங்குகிறான்." (ரி.வே.I.

9.2). மற்றுமொரு ரிக் கூறுகிறது: "தூதுவனும், ஹூ"திகளைக் கொண்டு செல்லுபவனுமான உன்னைத் தெய்வங்கள் சாகாமைக்கு மையமாகச் செய்திருக்கிறார்கள்." ரி.வே.III. 17.4)

காற்று மண்டலத்தில் நீராவியாக உலவும் மேகங்கள் அக்கினியை உண்டு பண்ணுகின்றன என்று ரிக் வேதம் கூறுகிறது. இது மின்னலைக் குறிக்கும். அக்கினி நீரின் கரு என்றும் நீரின் மடியில் வளர்கிறான் என்றும் வேதம் சொல்லுகிறது.

பிறிதோரிடத்தில் வேதம் கூறுகிறது. "பழைய பிறகிலிருந்து என்றும் புத்தம் புதியவனாய் அவன் எழுகிறான்; புகைக் கொடியுடன், சாம்பல் நிறத்தோனாய், அவன் மரத்தைத் தன் இருப்பிடமாயக் கொள்ளுகிறான். அவன் நீந்துதலில் வல்லவன் அல்லன்; ஆன போதிலும் அவன் நீரில் வேகமாகப் போகிறான்; மனிதர்கள் அவனை அவன் இருப்பிடத்திற்குக் கொண்டு செல்லுகிறார்கள்." (ரி.வே.X. 45)

அவன் மின்னி ஒளி வீசும் இடியாக வான வெளியில் உலவுகிறான். அவன் நீரிலும் செடிகளிலும் ஒளிந்து கொண்டிருந்ததாகவும், மற்ற தெய்வங்கள் அவனைக் கண்டு பிடித்ததாகவும் வரலாறுகள் ரிக் வேதத்திலும், பிராம்மண நூல்களிலும் உள்ளன. ஒரு ரிக் கூறுகிறது: "ஜாதவேதஸ் என்கிற அக்கினியே! செடிகளிலும் நீரிலும் ஒளிந்து கொண்டிருந்த உன்னை நாங்கள் பல இடங்களில் தேடினோம். பிறகு, யமன் உன்னைக் கண்டு பிடித்தான். ஓ வியப்பு மிகு ஒளிவீசும் தெய்வமே! உன்னுடைய பத்து விதமான ரகசிய இருப்பிடங்களிலிருந்து நீ பிரகாசிக்கிறாய்." (ரி.வே.X. 51.3). பத்து விதமான இருப்பிடங்களை ஸாயனார் பின் வருமாறு விளக்குகிறார். மேலுலகம், பூமி, நடுவிலுள்ள காற்று மண்டலம், அக்கினி, வாயு, ஆதித்தியன், நீர், செடி

கொடிகள், மரங்கள் மற்றும் உயிருள்ள பிராணிகளுடைய உடம்புகள் பத்து இருப்பிடங்களாகும்.

நீர் அக்கினியின் இருப்பிடம் என்ற கருத்து ரிக் வேத ரிஷிகள் மனதில் ஆழமாகப் பதிந்துள்ளது. காற்று மண்டலத்தில் இருக்கும் மின்னலைத் தவிர, பூமியில் இருக்கும் ஆறுகளிலும், மற்ற நீர் நிலைகளிலும் அக்கினி இருப்பதாக ரிக்குகள் கூறுகின்றன. இது 'லேடன்ட் ஹீட்' என்று ஆங்கிலத்தில் கூறப்படும் கண்ணுக்குப் புலப்படாத கனலைக் குறிப்பதாகும் என்று தெளிவாகத் தெரிகிறது. இக்காலத்து பௌதிகக் கண்டு பிடிப்புகள் வேத காலத்திலேயே மகரிஷிகளுக்குத் தெரிந்த உண்மைகள் என்று ஏற்படுகிறது.

அவன் மேலுலகில் இருப்பதைப் பற்றி ரிக் வேதம் பல இடங்களில் பேசுகிறது. அவன் மேலுலகில் மிக உயரத்தில் பிறந்தான் என்றும், அவன் மேலுலகில் கண்ணுக்குப் புலப்படாமல், கரந்து ஒளிர்வான் என்றும், மேலுலகிலிருந்து பூமிக்கு அவனை மாதரிஸ்வான் கொணர்ந்தான் என்றும் வேதம் பேசுகிறது. இந்த இடங்களில் அக்கினி என்பது மின்னலைக் குறிக்கிறது; ஏனெனில் மின்னல் நீரிலிருந்தும் மேலுலகிலிருந்தும் வருவதாகக் குறிப்புகள் இருக்கின்றன. மின்னலை அக்கினி என்று வேதத்தில் கூறும்பொழுது அதைத் தெய்வமாகவும், மின்னல் (வித்யுத்) என்றே சொல்லும் பொழுது அது இயற்கையில் நிகழும் சம்பவமாகவும் கருதினார்கள். மேலுலகிலிருந்து அக்கினி கீழே இறங்கி வருவது என்பது மின்னல் அடித்துக் காடுகளிலும் மற்ற இடங்களிலும் தீப்பற்றி எரிவதைக் குறிக்கும்; இதுவே அக்கினியையும் மின்னலையும் ஒருங்கிணைத்துக் கூறுவதற்குக் காரணமுமாகும். மாதரிஸ்வான் அக்கினியை உண்டாக்கி அதைத் தெய்வங்கள் மனிதனுக்குப் பரிசாக அளித்தார்கள் என்ற வேதகாலக் கருத்து, அக்கினி மேலுலகில் உண்டாயிற்று என்பதை மேலும் உறுதிப்படுத்துகிறது.

இன்னும் பல இடங்களில் வேதகால ரிஷிகள் ..ரியனை அக்கினியுடன் ஒருங்கிணைக்கிறார்கள். ஒளி ..சும் வானத்தில், அக்கினி மேலுலகின் விளக்காக ..ருக்கிறது; விடியற்காலை அது தோன்றி விண்ணின் ..லையாக விளங்குகிறது. அக்கினி காலையில் ஸூரியனாகப் ..றக்கிறான். அஸ்தமிக்கும் ஸூரியன் அக்கினியில் ..ழைகிறான், பிறகு அதிலிருந்து உண்டாகிறான் என்று ஒரு ..ராம்மண நூல் கூறுகிறது.

அக்கினி பகவான் பூமியில் தீயாகவும், காற்று ..ண்டலத்தில் மின்னலாகவும், விண்ணில் ஸூரியனாகவும் ..ருப்பதால் அவனுடைய முப்பிறப்பைப் பற்றி வேதம் பல ..டங்களில் குறிப்பிடுகிறது. வேத காலத்திலிருந்து ..தொடங்கிப் பிற்காலத்திலும் மூன்று பிறப்புகள் என்ற கருத்து ..ற்பல இடங்களில் காணப்படுகிறது.

அக்கினியைக் குறித்த வரையில் மூன்று என்ற எண் ..லைமை பெறுகிறது. அவன் பிறப்பு மூன்று விதமாக ..மைகிறது. தெய்வங்கள் அவனை மூன்று விதமாக ..ண்டாக்கினார்கள். அவன் மூன்று விதமாக வெளிச்சம் ..ருகிறான். அவனுக்கு மூன்று தலைகளும், மூன்று ..க்குகளும், மூன்று உடம்புகளும் உள்ளன. அவனுக்கு ..ன்று இருப்பிடங்கள் இருக்கின்றன. ஆக மூன்று என்ற ..ண் அக்கினியோடு பல விதங்களில் தொடர்பு ..கொண்டதாகும்.

ஒரு ரிக் கூறுகிறது: "சாகாமையை அடைந்த ..தெய்வங்கள், வலிமையுள்ள அக்கினி பகவானுடைய மூன்று ..ஜோதிகளைச் சுத்தப்படுத்தினார்கள். அவைகளில் ஒன்றை ..அவர்கள் மனிதனுக்கு, அவன் சந்தோஷமாக வாழ்வதற் ..காகக் கொடுத்தார்கள்; மற்ற இரண்டும் அருகிலுள்ள உலகங் ..களுக்குச் சென்றன." (ரி.வே.III. 2.9)

அதர்வண வேதம் கூறுகிறது: "வானிலிருந்து அக்கினி ஒளி வீசுகிறது; அகலமான இந்தக் காற்று மண்டலம் அக்கினி பகவானுக்கு உரித்தானது; மனிதர்கள், ஆஹுதிகளை எடுத்துச் செல்பவனும், நெய்யை விரும்புவனும் ஆன அக்கினியை மூட்டுகிறார்கள்." (அ.வே.XII. 1.20)

மழைக்கும் அக்கினிக்கும் உள்ள தொடர்பை ஒரு ரிக் குறிப்பிடுகிறது: "காலப் போக்கில், ஒரே மாதிரியாக, இந்த நீர் (ஆவியாக) மேலே செல்லுகிறது, பிறகு (மழையாக) கீழே விழுகிறது. மழை பொழியும் மேகங்கள் பூமியை உயிர்ப்பிக்கின்றன; அக்கினி மேலுலகை மகிழ்விக்கிறான்." (ரி.வே.I. 164.51). மனிதர்கள் வேள்விகளைப் புரிந்து அக்கினியில் ஆஹுதிகளைத் தெய்வங்களுக்குக் கொடுத்து மேலுலகிலுள்ள அவர்களை மகிழ்விக்கிறார்கள்; திருப்தி யடைந்த தெய்வங்கள் மழையைப் பொழிந்து எல்லாப் பிராணிகளையும் வாழ வைக்கின்றன. இதே கருத்தை பகவத்கீதை பிற்காலத்தில் அழகாகக் கூறுகிறது.

தேவான் பாவயதானேன தே தேவா: பாவயந்து வ: |
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத ||
(ப.கீ.III.11)

இதன் பொருள் வருமாறு:

"இதனால் (இந்த யஜ்ஞத்தால்) தேவர்களைப் பேணுங்கள்; தேவர்கள் உங்களைப் பேணட்டும். பரஸ்பரம் பேணிப் பெருநன்மை எய்துவீர்." (சுவாமி சித்பவானந்தரின் உரை)

ரிக் வேதம் ஓரிடத்தில் அக்கினியின் மூன்று தோற்றங்களையும் சகோதரர்களாகப் பேசுகிறது.

"இந்த நன்மை பயக்கும், சாம்பல் நிறமான வேதியன் மூத்தவன்; நடுவிலுள்ள சகோதரன் மின்னலாகும்; முதுகில் நெய் தெளிக்கப்பட்டுள்ளவன் தான் மூன்றாவது சகோதரன்;

இங்கு ஏழுமகன்களுடன் கூடிய தலைவனை நான் பார்க்கிறேன்." (ரி.வே.I. 164.1) இங்கு வேதியன் என்பது ஸூரியனைக் குறிக்கும். ஏழு மகன்கள் வேள்விபுரியும் அந்தணர்களைக் குறிக்கலாம்.

ரிக் வேதம் பல இடங்களில் அக்கினியின் இரு தோற்றங்களான வேள்வித் தீயையும், தெய்வமாக இருக்கும் அக்கினி பகவானையும் ஒருமிக்க ஒரே ரிக்கில் பேசுகிறது. ஒரு ரிக் வேள்வித்தீயை தனக்குத் தானே வேள்வி செய்து கொள்ளும் படி கூறுகிறது; அதாவது செய்யப்படும். ஆஹுதியை எடுத்துப் போய் வேள்வித் தீ அக்கினி பகவானுக்கு அதைக் கொடுக்க வேண்டும் என்பது கருத்து. (ரி.வே.X. 7.6) இதே மாதிரி இன்னும் சில இடங்களில் அக்கினியின் இரு தோற்றங்களையும் ஒரே ரிக்கில் வேறுபடுத்தி ரிக் வேதம் பேசுகிறது. இன்னுமொரு ரிக்கில் அக்கினி பகவானையும் சேர்த்து, முப்பத்தி மூன்று தெய்வங்களையும் தத்தம் மனைவிமார்களுடன் வேள்விக்கு அழைத்து வரும்படி வேள்வித் தீயை வேண்டுகிறார்கள். (ரி.வே.III. 6.9)

அக்கினிக்குப் பல பிறப்புகள் உண்டு என்று வேதம் கூறுகிறது. ஒவ்வொரு குடும்பத்திலும், ஒவ்வொரு வீட்டிலும் வேள்வித் தீ இருந்தபடியால் இம்மாதிரியாகப் பல பிறப்புகள் அக்கினிக்கு உண்டு என்று வேதம் பேசுகிறது. பல இடங்களில் அக்கினியை மூட்டுகிறார்கள். அவனுக்குப் பல உடம்புகள் உள்ளன. பரவலாகப் பல இடங்களில் இருந்த போதிலும், அடிப்படையில் அவன் ஒரே அரசனாக விளங்கு கிறான். பல இடங்களில் அவனை மூட்டினாலும், அவன் ஒருவனே ஆகும். ஒரு மரத்தில் பல கிளைகள் இருப்பது போல, மற்ற நெருப்புகள் எல்லாம் அவனிடம் சார்ந்து இருக்கின்றன.

அக்கினி விண்ணிலிருந்தும், நீரிலிருந்தும், கல்லிலிருந்தும், மரத்திலிருந்தும், செடியிலிருந்தும் பிறந்ததாக

வேதம் பேசுகிறது. இவைகளுள் கல்லிலிருந்து அக்கினி எப்படிப் பிறக்க முடியும் என்ற கேள்வி எழுகிறது. ஒரு ரிக்கிற்கு உரை எழுதும் பொழுது ஸாயனார் இது மலைகளில் நடக்கும் வேள்விகளில் அக்கினி பகவானுக்குக் கொடுக்கப்படும் ஆஹுதியைக் குறிக்கிறது என்கிறார். (ரி.வே.I 70.2). கல் என்பது மேகங்களைக் குறிக்கும் என்ற கருத்தும் நிலவுகிறது. இதன் பொருள் தெளிவாக விளங்கவில்லை என்பது உண்மை. "பல முறை பிறக்கும் அவன் நம் முன் இருக்கும் இதயத்தை நோக்குகிறான்," என்று ஒரு ரிக் சொல்லுகிறது (ரி.வே.X. 5.1). இது எல்லாப் பிராணி களுள்ளும் உறையும் வெளியிலே புலப்படாத கனலைக் குறிக்கும். இயற்கையில் பரவிக்கிடக்கும் செடி, கொடி, மரங்கள், பறவைகள், இருகால், நான்கு கால் பிராணிகள் முதலிய எல்லாவற்றுக்குள்ளும் உறையும், உயிர்ப்பின் பொறியான அக்கினி, எல்லா உயிர்களுக்கும், அசையாப் பொருட்களுக்கும் கருவாக விளங்குகிறான். (ரி.வே.I. 70.2)

வருணன் அக்கினியின் சகோதரன் என்று ஒரு ரிக் கூறுகிறது. மற்றுமொரு ரிக் இந்திரனும் அக்கினியும் இரட்டையர்கள் என்று சொல்லுகிறது.

அக்கினியே வருணனாகவும் மித்திரனாகவும் ஆவதாக சில ரிக்குகள் கூறுகின்றன. ஒவ்வோரிடத்தில் அவன் ஒவ்வொன்றாக இந்திரன், விஷ்ணு முதலிய பல தெய்வங் களாக இருப்பதாக வேதம் பேசுகிறது. (ரி.வே.II. 1.3–7)

அக்கினி வெண்ணெய் முதுகுடையவனாகவும், வெண்ணெய் முகத்தோனாகவும் அழகிய நாக்கு உடையவனாகவும் வேதம் வர்ணிக்கிறது. அவன் வெண்ணெய் முடியுடையவன் அல்லது தீச்சுடர் முடியுடையவன் அல்லது சிவந்த முடியுடையவன்; அவனுக்குச் சிவந்த தாடியும் உண்டு. அவன் ஒளி வீசும் பற்களை உடையவன். வெண்ணெய் தான் அவனுடைய

ரங்கள். அவன் கைகளில் மனிதர்களுக்காகப் பல பரிசுகளை வைத்திருக்கிறான்.

அக்கினியை அவனுடைய குணாதிசயங்களையும் அவனுடைய செய்கைகளையும் அனுசரித்துப் பல பிராணிகளுடன் வேதம் ஒப்பிடுகிறது. அவன் ஒரு காளை மாடாக இருந்து கொண்டு உறுமுகிறான்; இது மரக்கட்டைகள் ஓசையுடன் எரிவதைக் குறிக்கும். அவனுக்குக் கொம்புகள் உண்டு; அவைகளை அவன் அசைக்கிறான். இது தீச்சுடர்களைக் குறிக்கும் பிறந்தவுடன் அவனை ஒரு கன்றுக்குட்டிக்கு வேதம் ஒப்பிடுகிறது. கட்டுக் கடங்காமல் அவன் வேகமாகப் பரவுவதால், அவன் ஒரு குதிரை என்று சில ரிக்குகள் பேசுகின்றன. குதிரையைத் தேரில் பூட்டுவது போல், ஆஹுதிகளைத் தெய்வங்களுக்கு எடுத்துச் செல்ல, அவனை வேள்வியில் பூட்டுகிறார்கள். அவன் வானத்தில் பறக்கும் பருந்து, (அது அக்கினியின் ஒரு தோற்றமான ஸூரியனைக் குறிக்கும்) அவனுக்கு நீரில் இருப்பிடம் உள்ளதால் அவனை அன்னப்பறவையுடன் ஒப்பிட்டு ஒரு ரிக் பேசுகிறது. ஒரு பறவை மரத்தில் உட்காருவது போல அவன் மரத்தினுள் உறைகிறான். அவனுக்கு சிறகுகள் உண்டு; அவன் வானத்தில் பறக்கிறான். அவன் தெய்வங்களிடம் வேகமாகப் பறந்து செல்லுகிறான். அவனைச் சீறிவரும் பாம்பாக ஒரு ரிக் பேசுகிறது. (ரி.வே. I. 79.1) இது மின்னலைக் குறிக்கும்; அல்லது உலர்ந்த தாவரங்களிடையே வேகமாகப் பரவும் தீயைக்குறிக்கலாம்.

அவனை ஒரு தேருடன் ரிக்குகள் ஒப்பிடுகின்றன. ஏனெனில், வேகமாகச் செல்லும் தேரைப் போல அவனும், ஆஹுதிகளை எடுத்துக் கொண்டு பூமியிலிருந்து மேலுலகம் சென்று, உரிய தெய்வங்களுக்கு அவைகளை வழங்குகிறான், வேள்வி புரிவோருக்குச் செல்வங்களை வாரி வழங்கும் அவனைச் சில ரிக்குகள் செல்வத்துடன் ஒப்பிடுகின்றன. தகதகவெனச்சுடர் விட்டெரியும் அவனைப் பொன்னுடன் ஒப்பிடுவது பொருத்தமே.

விறகும் நெய்யும் அவனுக்கு உணவாகும். உருகிய நெய்யை உண்டு அவன் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறான். ஒரு ரிக் கூறுகிறது. "அக்கினி காடுகளை நன்றாக மென்று, உண்டு, ஒரு படைவீரன் எதிரிகளை வெல்வது போல, அந்தக் காடுகளை வென்றுவிடுகிறான்." (ரி.வே.I.143.5). "தகதகவெனக் கொழுந்து விட்டெரியும் அக்கினி, காடுகளைச் சூழ்ந்து கொண்டு தன்னுடைய நாக்கினால் அக்காடுகளைக் கருப்பாக்குகிறான்." (ரி.வே.VI.60.10). அவன் எல்லாவற்றையும் விழுங்குபவன். அவனுக்குத் தினமும் மூன்றுமுறை உணவு அளிக்கப்படுகிறது. மற்ற தெய்வங்களின் வாயாகவும் நாக்காகவும் அவன் விளங்குகிறான். அவனுடைய சுடர்களே கரண்டிகளாக ஆஹுதிகளை மற்ற தெய்வங்களுக்கு வழங்குகின்றன. பெரும் பாலும் அவனுக்கு விறகும் நெய்யும் அளிக்கப்படுகிறது; சில சமயங்களில், மற்றத் தெய்வங்களுடன் அவனை ஸோம ரசம அருந்த அழைக்கிறார்கள்.

அவனுடைய பிரகாசமான ஒளியைப் பல ரிக்குகள் பேசுகின்றன. அவன் ஜகஜ்ஜோதியாக ஒளி வீசுகிறான் என்றும், ஜாஜ்வல்யமாகச் சுடர் விட்டெரிகிறான் என்றும், பிரகாசமான வண்ணத்துடன் விளங்குகிறான் என்றும் ரிக்குகள் பேசுகின்றன. அவன் ஸூரியனைப் போல ஒளி வீசுகிறான். அவனுடைய ஒளி விடியற்காலையின் வெளிச்சத்தையும் ஸூரியனின் அப்பழுக்கில்லாத கிரணங்களையும், மழைபொழியும் மேகத்தின் மின்னல்களையும் ஒத்திருக்கிறது. (ரி.வே.X. 91. 4.5). இரவிலும் அவன் ஒளி வீசுகிறான். ஸூரியனைப் போல் அவனும் தன் கிரணங்களால் இருளைப் போக்குகிறான். இருளை அழித்து, அவன் இரவில் ஊடுருவிப் பார்க்கிறான். மூட்டியவுடன் அவன் இருளின் இரு கதவுகளையும் திறக்கிறான். அக்கினி பிறந்தவுடன், இருள் சூழ்ந்த இவ்வுலகும், வானமும் மனிதர் கண்களுக்குப் புலனாகின்றன.

அக்கினி தான் போகும் வழியெல்லாம் கருப்பாக்கு கிறான். அவனுடைய குதிரைகள் குளம்புகளைக் கருப்பாக்கு கின்றன.

வேதம் மேலும் பேசுகிறது: "காற்றால் ஏவப்பட்ட அக்கினி, தன்னுடைய சுடர்களையே அரிவாளாகக் கொண்டு, மிகுந்த சப்தத்துடன் உறுமிக்கொண்டே, உலர்ந்த கட்டைகளில் பரவுகிறான் என்றும் மாறாத சுடர் விட்டெரியும் ஓ அக்கினியே! நீ போகும் வழியெல்லாம் கருப்பாகிறது; ஒரு காளையைப் போல நீ ஆவலுடன் மரங்களிடம் விரைகிறாய். சுடரே பற்களாக, காற்றால் ஏவப்பட்டு, அவன், பசுமாடுகளின் மந்தைக்குள் எப்படி ஒரு காளைமாடு உற்சாகமாக இருக்குமோ அப்படியாக, காட்டிற்குள் வேகமாகப் போகிறான். எப்பொழுதும் வீசிக் கொண்டிருக்கும் காற்றில் அவன் வலிமையுடன் ஒளிவீசுகிறான்; அவன் பறக்கும் பொழுது, அசையாப் பொருட்களும், அசையும் பொருட்களும் அவனைக் கண்டு அஞ்சி நடுங்குகின்றன." (ரி.வே.I. 58. 4.5)

ஒரு நாவிதன் தாடியைக்களைவது போல, அக்கினி பூமியைக்களைவதாக ஒரு ரிக் கூறுகிறது. அவனுடைய சுடர்கள் கடலில் கொந்தளிக்கும் அலைகளைப் போல இருக்கின்றன. அவனுடைய சுடர்கள் சப்திப்பது காற்றையும் இடியையும் ஒத்திருக்கிறது. அவன் ஒரு சிங்கத்தைப் போல உறுமுகிறான். அவன் காட்டு மரங்கள் மேல் படை எடுக்கும் பொழுது, ஒரு காளையைப் போலப் பொருமுகிறான். அவனிடமிருந்து எழும் நெருப்புப் பொறிகள் செடிகளை விழுங்கும் பொழுது, பறவைகள் அதைக் கண்டு அஞ்சு கின்றன. வீரர்களின் படையெடுப்பையும், வானத்திலிருந்து வரும் இடியையும் எவ்வண்ணம் தடுக்க முடியாதோ, அவ்வண்ணமே அக்கினியையும் தடுத்து நிறுத்த முடியாது.

காற்றால் உந்தப்பட்டு அவனுடைய சுடர்கள் வானை நோக்கித் தாவுகின்றன. அவனுடைய புகை அசைந்தாடுகிறது; அவனுடைய சுடர்களைப் பிடிக்கமுடியாது; அவனுடைய சிவந்த புகை விண்ணை நோக்கி எழுகிறது. கட்டுமானப் பணியிலுள்ளவன் (ஒரு கம்பத்தை எழுப்புவது) போல, அவன் புகையை வானத்திற்கு எழுப்புகிறான். அவனைப் புகை மண்டலங்களால் வானத்தைத் தொட்டு, ஸூரியக் கிரணங்களுடன் கலந்து கொள்ளும் படி ஒரு ரிக் கூறுகிறது. புகைக் கொடியோன் (தூமகேது) என்ற உரிச்சொல் வேதத்தில் அக்கினிக்கு மட்டுமே உபயோகத்தில் உள்ளது.

மின்னல்தான் அவனுடைய தேராக விளங்குகிறது. சில ரிக்குகள் அவனுடைய தேர் ஒளிவீசுவதாகவும், மிகவும் பிரகாச முள்ளதாகவும், பொன்னாலானதாகவும், மிக நேர்த்தியானதாகவும், இருப்பதாகக் கூறுகின்றன. அவனுடைய தேரை வெண்ணை முதுகுள்ளதும், சிவந்ததும், மனத்தினால் பூட்டப்பட்டதும் ஆன குதிரைகள் இழுக்கின்றன. தெய்வங்களை அழைத்துவர, அவன் குதிரைகளைத் தேரில் பூட்டுகிறான்; ஏனெனில் அவன் வேள்விக்குத் தேரோட்டியாக இருக்கிறான். மற்ற தெய்வங்களுடன் ஒன்றாக அவன் தேரில் உட்கார்ந்து வேள்விக்கு வருகிறான். சில சமயங்களில் அவன், அவர்களுக்கு முன்னதாகவே வேள்விக்குத் தேரில் வந்து விடுகிறான்.

அக்கினி அரக்கர்களையும் பேய் பிராசுகளையும், மாந்திரீகர்களையும் விரட்டுகிறாள். மூட்டியவுடன் அவன் பேய் பிசாசுகளைத் தன்னுடைய இரும்புப் பற்களால் கடித்து விழுங்கி விடுகிறான், அல்லது அவனுடைய கனலால் அவர்களை எரித்து விடுகிறான்.

மற்ற தெய்வங்களை விட அவன் மனிதர்களுடைய வாழ்க்கையில் நெறுங்கிய தொடர்பு கொண்டிருக்கிறான். ஒவ்வொரு வீட்டிலும் வாசம் செய்து கொண்டு, அவன்

எப்பொழுதும் வீட்டை விட்டு வெளியே போகாமல் இருக்கிறான்.

அவனை விருந்தாளி (அதிதி) என்று வேதம் கூறுகிறது. வீட்டிற்கு அவன்தான் முதல் விருந்தாளி. சாவு என்பதே இல்லாத அவன் சாகும் மக்கள் நடுவில் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளுகிறான்.

மனிதனுக்கு அவன் நெருங்கிய உறவினனாகவும், உற்ற நண்பனாகவும் வேதம் கூறுகிறது. பல சமயங்களில் அவனை வணங்குபவர்களுக்குத் தகப்பனாகவும், சகோதரனாகவும் சில சமயங்களில் மகனாகவும், தாயாகவும் வேதம் சொல்லுகிறது. மக்களுடைய முன்னோர்களும் மூட்டிய தெய்வமாக அவனைச் சிறப்பாகப் போற்றுகிறார்கள்.

வேள்விகளில் அக்கினிக்கு இரண்டு விதமான பணிகள் இருக்கின்றன. மற்ற தெய்வங்களைப் போல அவனும் ஒரு தெய்வமாக ஆஹுதிகளைப் பெற்றுக் கொள்ளுகிறான். தவிர, மற்ற தெய்வங்களுக்கு, வேள்வி புரியும் மனிதர்கள் கொடுக்கும் ஆஹுதிகளை அவர்களிடம் சேர்ப்பிக்கிறான். இதை இரண்டு விதமாகச் செய்யும்படி ஒரு ரிக் கூறுகிறது. 'அக்கினியே! நீ, இந்திரனுடைய தலைமையில் மற்ற எல்லாத் தெய்வங்களையும் இங்கு அழைத்து வந்து நாங்கள் கொடுப்பதை ருசி பார்த்து மகிழச் செய்வாயாக; மேலுலகிலுள்ள எல்லாத் தெய்வங்களுக்கும் இந்த ஆஹுதியைக் கொண்டு செல்; தெய்வங்களே! அருளாசிகளை வழங்கி எங்களைக் காப்பாற்றுங்கள்," (ரி.வே. VII. 11.5). இங்கு அக்கினியை, மற்ற தெய்வங்களையும் வேள்விக்குக் கூட்டி வரவும், ஆஹுதிகளை மேலுலகிற்குக் கொண்டு செல்லவும், வேண்டுகிறார்கள்.

அவன் மற்ற தெய்வங்களை வேள்விக் கூடத்தில் பரப்பிய தர்ப்பையின் மேல் உட்காரவைத்து, கொடுக்கப் படும் ஆஹுதிகளை உண்ணும் படி செய்கிறான். தெய்வங்

களிடமிருந்து போகும் வழியையும், திரும்பவும் பூமிக்கு வரும் வழியையும் நன்கு அறிந்து, அவ்வழிகளில் அவன் செல்லு கிறான். தெய்வங்களே அவனைத் தூதனாக நியமித்திருக் கின்றன. வேறு ஒரு வேத நூல், அக்கினி தூதனல்ல, அவனே மற்ற தெய்வங்களிடம் போகும் வழி, அவ்வழியே போனால் மேலுலகின் உச்சியை அடையலாம் எனக் கூறுகிறது. (தைத்திரிய பிராம்மணம் II. 41.6).

பூமியில் வேள்விகளில் புரோஹிதர் மந்திரங்களை ஓதிக் காரியங்களை நடத்துவது போல, அக்கினி மேலுலகில் தெய்வங்கள் நடுவில் அவர்களின் புரோஹிதனாக விளங்கு கிறான். ஆதலால் வேதம் அவனைப் புரோஹிதன் என்றும் வேள்வியை நடத்தும் மற்றவர்களின் பெயர்களான ஹோதா, ரித்விக், விப்பிரன் என்பவை கொண்டும் அழைக்கிறது. மனிதனுடைய முன்னோர்களும் இதே அக்கினியை மூட்டி வழிபட்டதால், அவனுக்கு வீட்டில் தனி இடமும் மரியாதையும் உண்டு.

ரிக் வேதம் அக்கினியைப் பற்றி ஒரு ரசமான கதையைச் சொல்லுகிறது. தெய்வங்களுக்கு ஆஹுதிகளைத் திரும்பவும் திரும்பவும் எடுத்துச் சென்றதில் அக்கினி களைத்துப் போகிறான். தன்னுடைய மூன்று அண்ணன்மார்கள் இப்படிச் செய்தே இறந்து போனது அவன் நினைவுக்கு வருகிறது. மிகுந்த மனச் சோர்வுடன் அவன். நீரில் ஒளிந்து கொள்ளுகிறான். மற்றத் தெய்வங்கள் எல்லாம் அவனைத் தேடிச் சென்றன. கடைசியில் யமன் அவனைக் கண்டு பிடிக்கிறான். அக்கினிக்கும் மற்ற தெய்வங்களுக்கும் நடக்கும் உரையாடல் ருசிகரமாகப் பத்தாவது மண்டலத்தில் 51வது ஸூக்தமாக அமைந்துள்ளது.

மற்ற தெய்வங்கள், உறுதியாக நெய்யப்பட்ட பெரிய துணியால் நன்றாக மூடிக் கொண்டு நீ நீரில் நுழைந்திருக் கிறாய். எங்களுள் ஒரு தெய்வம் மட்டும் நீ பல உருவங்களில் பல இடங்களில் ஒளிந்திருப்பதைக் கண்டு அறிந்தான்.

அக்கினி: எந்தத் தெய்வம் என்னைக் கண்டது?

ம.தெ. : நாங்கள் செடிகளிலும், நீரிலும் ஒளிந்திருந்த உன்னைத் தேடினோம். கடைசியில் யமன் உன்னுடைய இருப்பிடத்தைக் கண்டறிந்தான்.

அ: ஓ வருணனே! திரும்பத் திரும்ப என்னை இதே வேலையில் தெய்வங்கள் ஈடுபடுத்துகிறார்களே என்று அஞ்சி நான் வேள்வி வழிபாட்டை விட்டு ஓடினேன்.

ம.தெ. : மனிதன் வேள்வி புரிய ஆவலாக இருக்கிறான்; எல்லா ஏற்பாடுகளையும் செய்து, அவன் காத்திருக்கிறான். ஆனால் நீயோ மனச் சோர்வுடன் இருக்கிறாய். தெய்வங்களை அணுகும் பாதைகளைச் சரிசெய்து அவர்களுக்கு ஆஹுதிகளை மகிழ்ச்சியுடன் எடுத்துச் செல்.

அ. : என்னுடைய அண்ணன்மார்கள் இதே வழியைப் பின்பற்றினார்கள். ஓ வருணனே! நான் அஞ்சி நடுங்கி, வில்லாளியைக் கண்ட முரட்டுக் காளையைப் போல, ஓடிவிட்டேன்.

ம.தெ. : கிழத்தன்மையடையாத ஆயுளை நாங்கள் உனக்கு அருளுகிறோம் இப்பணியைச் செய்வதால் உனக்கு ஒரு கெடுதலும் வராது. ஆகையால் மகிழ்வுடன் தெய்வங்களுக்கு ஆஹுதிகளை எடுத்துச் செல்.

அ. : வேள்விகளில் முதல் ஆஹுதியை எனக்குக் கொடுக்க வேண்டும். மற்ற ஆஹுதிகளில் என் பங்கைத் தர வேண்டும்.

ம.தெ. : நீ கேட்ட மாதிரியே வேள்விகளில் முதல் ஆஹுதியும், மற்ற ஆஹுதிகளில் உன் பங்கும் உன்னை வந்தடையும். இந்த வேள்வி எல்லாம் உன்னுடையதாக இருக்கட்டும்! உலகின் நாற்றிசைகளும் உன்னை வணங்கட்டும்!

கடைசியில் அக்கினி மனச் சமாதானம் அடைந்து, முன்போல வேள்விகளில் தன் பணியைச் செய்ய ஒப்புக் கொள்ளுகிறான் என்று கதை முடிகிறது.

தைத்திரிய ஸம்ஹிதை அக்கினியை மூன்று விதமாகப் பிரிக்கிறது: ஆஹுதிகளை எடுத்துச் செல்லும், தெய்வங் களுக்குச் சொந்தமான ஹவ்யவாஹனன்; அந்திமக்கிரியை களில் கொடுக்கப்படுவதை எடுத்துச் செல்லும், பித்ருக்களுக் குச் சொந்தமான கவ்யவாஹனன்; பேய் பிசாசுகளுடன் தொடர்பு கொண்ட, அசுரர்களுக்குச் சொந்தமான, சஹரக்ஷஸ்." (தை. ஸ II. 85. 8.6)

ரிக் வேதம் பல இடங்களில் அக்கினியை ஒரு ரிஷி என்று கூறுகிறது அவன் வேள்வியின் விதிகளையும் சடங்குகளின் முறைகளையும் நன்கறிந்தவன். தெய்வங்களின் கட்டளைகளை அறியாமையால், மனிதர் செய்த பிழைகளை அவன் திருத்துகிறான். அவன் எல்லாவற்றையும் அறிந்தவன். எல்லாப் பிராணிகளையும் அவன் அறிவான்; அவைகளை எல்லாம் அவன் பார்க்கிறான். அவனைப் பற்றிப் பாடப்படும் எல்லாப் பாசுரங்களையும் அவன் கேட்கிறான். அவன் அருளால் மக்கள் புத்தி கூர்மையையும், அறிவையும் அடைகிறார்கள். அவன் நல்ல பேச்சாளன்.

தன்னை வழிபடுபவர்களை அவன் காக்கிறான். அவர்களை அவன் கடும் துயரிலிருந்தும் துன்பங்களிலி ருந்தும் மீட்கிறான். அவனுக்கு ஆஹுதிகள் கொடுப்பவர் களை அவன் ஆயிரம் கண்களால் கவனித்துக் கொள்ளு கிறான். வழிபடுபவர்களின் எதிரிகளை அவன், உலர்ந்த புதர்களைப் போல, எரித்து விடுகிறான். மின்னல் ஒரு மரத்தை அழிப்பது போல, அவன் தீயவர்களை அழித்து விடுகிறான். அவனால் காப்பாற்றப்படுபவர்களைப் போரில் வெல்ல முடியாது. ஒரு மரத்திலிருந்து கிளைகள் கிளம்புவது போல எல்லா அருளும் அவனிடமிருந்து சுரக்கின்றன.

ல்வத்தின் கதவை அவன் திறக்கிறான். விண்ணிலும் ண்ணிலும், கடலிலும் உள்ள எல்லாச் செல்வங்களுக்கும் வன் அதிபதி. வானத்திலிருந்து அவன் மழையைப் பொழிகிறான்; பாலைவனத்தில் ஒரு நீர் ஊற்றுப் போல வன் விளங்குகிறான். உணவு, செல்வம், குழந்தைகள் தலிய, வேண்டிய வரங்களை அளிக்க வல்லவன், திரிகளிடமிருந்தும், அரக்கர்களிடமிருந்தும் அவன் டுபடுவோர்களைக் காப்பாற்றுகிறான். அறியாமையால் ய்த பாவங்களை அவன் மன்னிக்கிறான்.

அக்கினி தெய்வீகமான ஒரு சக்கரவர்த்தி. அவன் ந்திரனுக்கு ஒப்பான வலிமையுள்ளவன். அவன் வ்வுலகையும் விடப் பெரியவன். அக்கினி இருட்டில் பித்த பொழுது, மற்ற தெய்வங்கள் எல்லாம் அஞ்சி வனை வணங்கின என்று ஒரு ரிக் கூறுகிறது.

அக்கினி விண்ணிற்கும் மண்ணிற்கும் மகனாலும், வன் இரு உலகங்களையும் உண்டாக்கியதாக வேதம் றுகிறது; அவனுடைய அழியாக் கட்டளைகளை விண்ணும் ண்ணும் பின்பற்றுகின்றன. அவன் அவ்விரு உலகங் களையும், இரண்டு தோல்களைக் போலப் பரப்பினான். வனுடைய சுடராலோ அல்லது அவனுடைய புகையாலோ வன் வானத்தைத் தாங்கினான். அவன் இரு உலகங் களையும் பிரித்து வைத்தான். அவன் நல்ல பாசுரங்களால் ் உலகங்களையும் தாங்கினான் அவன் காற்று மண்டலத்தை அளந்து, வானத்தைத் தன் மகிமையால் நாட்டான். அவன் ஸூரியனை வானத்தில் ஏறும்படி செய்தான். ஸூரியன் காலையில் உதிப்பதற்குக் காரணமே வேள்விக்காக மூட்டப்படும் அக்கினிதான் என்று ரிக் வேதமும் சமபதப் பிராம்மணமும் கூறுகின்றன. அவன் வானத்தை நக்ஷத்திரங்களால் அலங்கரித்தான் என்று ஒரு ் கூறுகிறது. பறப்பன, நடப்பன, நிற்பன, அசைவன

என்றவற்றையும் அவன் உண்டாக்கியதாக ஒரு ரிக் சொல்லு கிறது. இவைகளிடத்தும், செடி கொடிகளிலும் மற்ற எல்லா உயிருள்ள பிராணிகளிடத்தும் அவன் கர்ப்பத்தை அமைத்தான். பூமியையும் பெண்களையும் அவன் பிரசவிக்கும் படி செய்தான். சாகும் தன்மையுள்ள மனிதனுக்கு சாகாவரம் அளிக்க வல்லவன் அவன்.

ஒரு ரிக் கூறுகிறது: மற்ற தெய்வங்களும், மக்களும் விடியற்காலையின் புரோஹிதனான அக்கினியை முத்தமிட்டுக் கொஞ்சிக் குலவுகிறார்கள்." (ரி.வே.X. 92.2)

கோவில்களும், பூஜைகளும் மற்ற சடங்குகளும் இல்லாத வேத காலத்தில், அக்கால மக்களுக்கு வேள்விதான் தெய்வங்களை வணங்க ஒரே வழியாக இருந்தது. ஆகையால் மக்களுக்கு வேள்விகள் மிக முக்கியமான அங்கமாக இருந்தது. உருவகப்படுத்தின வேள்வித் தீயான அக்கினி பகவான் மிக முக்கியமான தெய்வமாக விளங்கியது நியாயமே ஆகும். சுமார் 200 ஸூக்தங்களில் ரிக்வேதம் அவனைப் போற்றுகிறது. 250 ஸூக்தங்களால் போற்றப்படும் இந்திரனுக்குப் பிறகு முக்கிய தெய்வமாக அக்கினி விளங்குகிறான்.

இன்றும் சடங்குகளில் அடிக்கடி ஓதப்படும் ஒரு ரிக் அக்கினியை செல்வங்களைக் கொடுக்கும் படி வேண்டுகிறது. ரிக் வருமாறு.

"அக்னே நய ஸுபதா ராயே அஸ்மான்
விச்வானி தேவ வயுனானி வித்வான்।
யுயோத்யஸ்மத் ஜுஹு ராண மேனோ
பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம ||
(ரி.வே.I. 189.1)

**பொருள்:**

'ஓ அக்கினியே! எல்லாப் புனிதமான கடமைகளையும் நன்கு அறிந்த தெய்வமாகிய நீ எங்களை நல்ல வழிகளில்

ல்லாச் செல்வங்களுக்கும் அழைத்துச் செல்லுவாயாக. பான வழிகளைக் காட்டும் பாவங்களை அகற்றி விடு; ண்ணற்ற நமஸ்காரங்களை நாங்கள் உனக்குச் சமர்ப்பிக்கி றாம்!

இப்படியாக வேள்விகளே ஒரே வழிபாடாக இருந்த வதகாலத்தில் அக்கினி பகவான் ஒரு மிக முக்கிய தய்வமாக விளங்கினான். இன்றும் சடங்குகளில் ரியப்படும் ஹோமங்களுக்கு நடுநாயகமாக அக்கினி ருக்கிறது. அக்கினி சாக்ஷியாகச் செய்யப்படும் ருமணங்களே நம் மதத்தில் இன்னும் வேரூன்றி உள்ளது.

* * *

## .4 பிருஹஸ்பதி

"நடுவிலிருப்பதும் மேலிருப்பதுமான இரு பெரிய பிருஹத்) உலகங்களை அவன் காப்பதால் (பதி:), அவன், இந்தப் பெரிய (பிருஹதா) காரியத்தைச் செய்வதால், பிருஹஸ்பதி என்று புகழப்படுகிறான்." (பிருஹத் தேவதா 1.39)

பிரும்ஹணஸ்பதி என்ற ஒரு தெய்வத்தின் பெயர் ரிக் வேதத்தில் காணப்படுகிறது. அவருக்குத் தனியாகவும் மற்ற தெய்வங்களுடன் சேர்ந்தும் சில ஸூக்தங்கள் இருக்கின்றன. அவர் எந்தத் தெய்வம் என்பது தெளிவாக வேதம் கூறுவில்லை. ஆனால் பிருஹஸ்பதியும் பிரும்ஹஸ் பதியும் மாறி, மாறி ஒரே ஸூக்தத்தில் சில இடங்களில் ரிக்வேதத்தில் உள்ளன. ஆகையால் பெரும் பாலான ஆராய்ச்சியாளர்கள் இது பிருஹஸ்பதியின் மற்றொரு பெயர் எனக் கருதுகிறார்கள். இந்தச் சொல்லிற்குப் பொருளைப் பின்

வருமாறு சௌனகர் கூறுகிறார். "பேச்சு பிரம்மாவா இருக்கிறது; வாய்மை பிரம்மா; இந்த உலகம் பூராவு பிரம்மா; ஆகையால் பிரம்மாவைக் காப்பவர் பிர ஹணஸ்பதி என்று சொல்லப்படுகிறார்." (பிருஹந் தேவத II. 40)

'கணானாம் த்வா கணபதிம் ஹவா மஹே...'. என தொடங்கும் வேதமந்திரத்தை (ரி.வே.II. 23.1) பெரும் பாலா சடங்குகளில் இன்றும் ஓதுவதை நாம் கேட்கிறோம் இக்காலத்தில் இது பிள்ளையாரைத் துதிக்கும் மந்திரமா உள்ளது. ஆனால் யானை முகத்தோனாகிய பிள்ளையா இல்லாத வேத காலத்தில் இந்த ரிக் பிரம்ஹணஸ்பதியை புகழ்வதாக உள்ளது. இந்த ரிக்கில் கணபதி என்ற சொ இருப்பதால் வேதகால பிரும்ஹணஸ்பதியையும் புரா காலப்பிள்ளையாரையும் இணைத்திருக்கிறார்கள் என் காமகோடி பரமாச்சாரியார் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வ கூறுகிறார்.

பிரஹஸ்பதி பொன்னிறமானவன்; அவன் பிரகாசமா கவும், பரிசுத்தமாகவும் இருக்கிறான்; அவனுடைய குர தெளிவாக உள்ளது. அவனுடைய வில்லிற்கு 'ருதம்' என் தெய்வீகச் சட்டமே நாணாக அமைந்துள்ளது. அவனுடை இரும்புக் கோடாலியைத் துவஷ்டா கூர் செய்கிறான். அவன் பழுப்புநிறக் குதிரைகள் பூட்டிய தேரில் செல்லுகிறான்.

'பிருஹஸ்பதி, ஏழுவாய்களுடன், விண்ணின் உயரத் லுள்ள பிரகாசமான வெளிச்சத்திலிருந்து பிறந்தான் வலிமையுள்ள அவன், இடி முழக்கத்துடனும், ஏழு கிரணங்களுடனும், இருளை ஊதிப் போக்கினான்.' (ரி.வே.IV 50.4)

பிருஹஸ்பதி இரண்டு உலகின் மைந்தன் என்று ஓரிடத்திலும், துவஷ்டாவால் உண்டாக்கப்பட்டவன் என்று இன்னுமொரு இடத்திலும் வேதம் கூறுகிறது. மற்றுமொரு

ரிக் பேசுகிறது. 'பிரும்ஹணஸ்பதி, ஒரு தட்டானைப் போலப் பொருளை ஊதியும் உருக்கியும், இந்தத் தெய்வங்களை உண்டாக்கினான். தெய்வங்களின் ஆதிகாலத்தில், இல்லாமையிலிருந்து இருப்பது தோன்றியது.' (ரி.வே.X. 72.2). அழகான உவமையுடனும், நுண்ணில் கருத்துடனும், தெய்வ சிருஷ்டியை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார் வேதரிஷி.

பிருஹஸ்பதி வீட்டிலுள்ள மத குருவாக வேதம் பேசுகிறது. பழங்கால முனிவர்கள் அவனைத் தங்களுக்குத் தலைவனாகக் கருதினார்கள். பிற்கால வேத நூல்கள் அவனைத் தெய்வங்களின் மத குருவாகப் பேசுகின்றன. அவனில்லாமல் வேள்விகள் பலனளிப்பதில்லை. தெய்வங்களின் விருந்துக்குத் தான் போக வழிவகுக்கும்படி, ஒரு ரிஷி அவனை வேண்டுகிறார் மற்ற தெய்வங்கள் வேள்வியில் தங்களுடைய பங்கை அவனிடமிருந்து பெறுகின்றார்கள். அவனே பாசுரங்களைப் பாடி, வேள்வியைப் புரிந்து, தெய்வங்களை எழுப்புகிறான். பாசுரங்களுடைய பண்கள் அவனுக்குச் சொந்தமானவை.

அவன் துதிகளின் தலைவனாகவும், பேரரசனாகவும், அறிவாளிகளுக்குள் சிறந்தவனாகவும் விளங்குகிறான். எல்லாத் துதிகளையும் பாடியவனும் அவனே. பிற்கால வேத நூல்கள் அவனை 'வாசஸ்பதி', சொல்லின் தலைவன் என்று குறிப்பிடுகின்றன. அவனைக் கூட்டத்தின் தலைவன் (ஸதஸஸ்பதி) என்றும் வேதம் சொல்லுகிறது.

ஒரு ரிக் பேசுகிறது: 'ஓ பிருஹஸ்பதியே! நீ பசுமாட்டுத் தொழுவத்தைத் திறந்தபொழுது, உன்னுடைய புகழுக்காக, அந்தத் தொழுவத்தை அடைத்துக் கொண்டிருந்த மலை இரண்டாகப் பிளந்து கொண்டது. இந்திரனின் துணையுடன், நீ இருள் சூழ்ந்த தண்ணீர் வெள்ளத்தைக் கீழே வீசி எறிந்தாய்.' (ரி.வே.II. 23.18). இந்திரன் மேகங்களைப் பிளந்து

மழையை உண்டாக்கும் கதையில் பிருஹஸ்பதிக்குப் பங்கு உள்ளது என்று இந்த ரிக்கிலிருந்து தெரிகிறது.

பிரும்ஹணஸ்பதியைப் புகழ்ந்து மேலும் வேதம் கூறுகிறது: 'தெய்வத்தன்மை மிகுந்த அந்தத் தெய்வத்திற்கு இது ஒரு பெரிய சாதனையாகும்: வலிமை மிகுந்தவைகள் அவன் முன் தோற்றன; உறுதியாக நிலை நாட்டப் பட்டவைகள், தளர்ந்து போயின. பசுக்களை வெளியே ஓட்டிவிட்டு அவன் வலனைத் துதிகளால் தகர்த்தான்; இருளை விரட்டி, வெளிச்சத்தை வெளிக் கொணர்ந்தான். தேன் வெள்ளமாகப் பிரவகிக்கிற கிணற்றை மூடியிருந்த பாறாங்கல்லை அவன், தன் வலிமையால் தூக்கிக் கிணற்றைத் திறந்தான். வெளிச்சத்தைப் பார்க்கிற அவர்கள் எல்லோரும், அந்தக் கிணற்றிலிருந்து வேண்டிய அளவு தேனைக் குடித்தார்கள்; அவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து நீரூற்றைப் பெருக்கினார்கள்.' (ரி.வே.II. 24. 3.4)

இந்த ரிக்குகளில் தொழுவத்தில் பூட்டப்பட்ட பசுமாடுகள் என்பது மேகங்களில் அடைபட்டிருக்கும் நீரைக் குறிக்கும்; இருளிலிருந்து விடுபட்டு வரும் விடியற்காலையின் ஸூரியக் கிரணங்களைக் குறிக்கலாம் எனவும் சிலர் கருதுகிறார்கள்.

'ஒரு பறவையின் முட்டைகள் உடைந்து, குஞ்சுகள் வெளி வருவது போல, பிருஹஸ்பதி மலையிலிருந்து பசுக்களை வெளியே ஓட்டினான்" என்கிறது ஒரு ரிக். (ரி.வே.X. 68.7)

முதலில் பிறந்த அவன் பாறாங்கற்களை உடைக்கிறான். காளையைப் போல உறுமுகிறான், விருத்திரனைக் கொல் கிறான், கோட்டைகளைத் தகர்க்கிறான், எதிரிகளை வெல் கிறான். போர்களில் அவ ரனத் துதிக்கிறார்கள்.

தன்னைத் துதிப்போருக்கு அவன் நன்மைகள் புரிகிறான்; ஆனால் து திகளை வெறுப்போரை அவன்

அழிக்கிறான். துதிப்போரை அவன் எல்லா ஆபத்துகளி லிருந்தும், சாபங்களிலிருந்தும், கெடுதல்களிலிருந்தும் காப்பாற்றி அவர்களுக்குச் செல்வங்களை அருள்கிறாள். செல்வந்தனான அவன், வணங்குவோருக்குத் தன் செல்வங் களை வாரி வழங்குகிறான். அவன் நோய்களைக் குணப் படுத்தி, ஆயுளை அதிகரிக்கிறான். இவ்வளவு நன்மைகள் புரியும் அவனை ரிஷிகள் 'தகப்பன்' என்றே கூறுவதில் வியப்பில்லையே? ஸூரியனும் சந்திரனும் மாறி மாறி உதயமாவது அவனுடைய சாதனையாகும். செடி, கொடிகளின் வளர்ச்சியை அவன் ஊக்குவிக்கிறான். வேதகாலத்திற்குப் பிற்கால நூல்களில், நவக்கிரஹங்களில் ஒன்றான குருவுடன் அவன் இணைக்கப்படுகிறான்.

### 4.5 ஸோமன்



ரிக் வேதத்தின் சடங்குகளில் ஸோம யாகம் ஒரு முக்கிய அங்கம் வகிப்பதால், ஸோமன் வேத காலத் தெய்வங்களில் மிகவும் போற்றப்படும் ஒரு தெய்வமாக விளங்குகிறான். ரிக் வேதத்தில், ஸோமனைப் போற்றும் ஸூக்தங்களின் எண்ணிக்கையைப் பார்த்தால், ஸோமன், இந்திரனுக்கும், அக்கினிக்கும் அடுத்தாற்போல மூன்றாவது முக்கிய தெய்வமாக விளங்குகிறான். பல வேத காலத் தெய்வங்களுக்கு மனிதனைப் போல முகம், கண், காது, கை, கால் எல்லாம் இருப்பதாக வேதகால ரிஷிகள் கற்பனை செய்து பாடியிருக்கிறார்கள். ஆனால் ரிஷிகள் மனக்கண் முன்னால் ஸோமக் கொடியும் அதன் ரஸமும் தோன்றிய வண்ணம் இருப்பதால், ஸோமனைப் பற்றிப் பாடும் பொழுது அவனுடைய உருவத்தைப்பற்றியும் அங்க அடையாளங்களைப் பற்றியும் விசேஷமாக ஒன்றும் கூற முடியவில்லை.

ஸோமக் கொடியைக் கற்களால் அழுத்திப் பிழியும் பொழுது, அதனுடைய சாறைக் கம்பளி நூல்களைக் கொண்டு நெய்த துணியால் வடிகட்டி மரப் பீப்பாய்களில் சேகரித்து வைக்கிறார்கள்; ஒன்பதாவது மண்டலத்திலுள்ள பல ஸூக்தங்கள் இதைப்பற்றியே பேசுகின்றன; தர்ப்பைப் புல்லின் குவியல் மேல் அல்லது அக்கினியில் ஸோமரசத்தை ஊற்றி, அதைத் தெய்வங்களுக்கு அர்ப்பணம் செய்கிறார்கள். அக்கினி ஸோமரஸத்தைத் தன் முதுகில் தூக்கிச் சென்று மற்ற தெய்வங்களுக்கு வழங்குவதாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே. VIII. 43.11) பிறகு வேள்வி புரியும் அந்தணர்கள் மிகுதி உள்ள ஸோமரசத்தைக் குடிக்கிறார்கள்.

ஸோமக் கொடியின் நீண்ட தண்டுகளை நசுக்கிப் பிழிகிறார்கள். பசுமாடுகள் தங்கள் மடியிலிருந்து பாலைக் கொடுப்பது போல இந்தத் தண்டுகள் ரஸத்தைக் கொடுக்கின் றன. ஸோமக் கொடியை விண்ணிலிருந்து ஒரு கழுகு பூமிக்குக் கொண்டு வந்ததாக ரிக்குகள் கூறகின்றன. பல ரிக்குகள் ஸோமரசத்தின் போதை கொடுக்கும் தன்மையைச் சொல்லுகின்றன. உணவுடன் ஸோமரசத்தைப் பருகும் படியாகத் தெய்வங்களை சில ரிக்குகள் வேண்டுகின்றன. 'ஒளி வீசும் துளி' என்ற பொருள் படும் 'இந்து' என்ற வட மொழிச் சொல் ஸோமரசத்தைக் குறிக்க ரிக் வேதத்தில் அடிக்கடி உபயோகத்தில் உள்ளது அது கடலைப் போல் பொங்குவதாகவும், அலைகள் உள்ளதாயும் சில ரிக்குகள் வருணிக்கின்றன.

ரிக் வேதத்தில் ஸோமரசத்தைப் பற்றிப் பல கற்பனைகளைக் காண்கிறோம். ஒரு ரிக் பேசுகிறது: 'அவன் (இந்திரன்) விண்ணையும் மண்ணையும் பிரித்து நிலைநாட்டினான்; ஏழு கடிவாளங்கள் கொண்ட ஸூரியனின் தேரை அவன் பூட்டினான். வலிமையைக் கொடுக்கும் ஸோமரசத்தை பால் கொடுக்கும் பசு மாடுகளிடம் அவன் வைத்தான்; பத்து விரல்கள் அந்த

ஊற்றின் முதிர்ச்சியடைந்த ரசத்தை சற்றும் மிச்சம் இல்லாமல் பிழிகின்றன. (ரி.வே.VI. 44.24) இன்னுமொரு ரிக் கூறுகிறது: 'தெய்வங்களைப் போற்றும் மக்கள் மகிழச்சியுடன் வாழும் விஷ்ணுவினுடைய பிரியமான மாளிகையை அடைவோமாக; ஏனென்றால் விஷ்ணுவினுடைய உயர்ந்த காலடியில் தேன் (ஸோமரசம்) கிணறு ஊற்றாகப் பெருகுகிறது. (ரி.வே.I. 154.5)

ஸோமக் கொடியும் அதன் ரசமும் பழுப்பு நிறமாகவும், சிவப்பாகவும் இருப்பதாக ரிக்வேதம் சில இடங்களில் கூறுகிறது. ஆனால் பெரும்பாலும் அவைகளின் நிறப் பழுப்புக் கலந்த சிவப்பாகும். சில ரிக்குகள் ஸோமரசம் பொன்போலத் தகதக என்று மின்னுகிறது என்று கூறுகின்றன. ஸோமக் கொடி சிவப்பு மரத்தின் கிளை என்று ஒரு ரிக் சொல்லுகிறது. சடங்குகளுக்காக ஸோமக் கொடியை வாங்கும் பொழுது அதற்கு விலையாக ஒரு பசுமாட்டைக் கொடுப்பார்கள்; அந்தப் பசுமாடும் ஸோமக் கொடியை ஒத்த பழுப்பு நிறமாகவோ சிவப்பாகவோ இருக்க வேண்டும் என்று வேதம் கூறுகிறது. (தைத்திரிய ஸம்ஹிதை VI. 1.6.7)

ஸோமரசம் கைகளாலும் விரல்களாலும் சுத்தப்படுத்தப் படுகிறது என்று ரிக்குகள் சொல்லுகின்றன. ஒரு ரிக் கூறுகிறது, (ஸோமரசத்தைப் பிழியும் வேள்வியின் கடைசி தினத்தன்று, மெல்லிய உருவம் படைத்த பத்து சகோதரிகள் (விரல்கள்) ஸோமக் கொடியை எடுத்து அதை இரு கற்களுக்கு நடுவில் அழுத்தமாகப் பிடித்து கொள்ளு கிறார்கள்,' (ரி.வே. IX. 1.7) இன்னுமொரு ரிக் கூறுகிறது. 'வேள்விபுரியும் குருவின் பெண்கள் (விரல்கள்), ஒரு அழகான இளைஞனுக்கு அலங்காரம் செய்வது போல, அவனுக்கு (ஸாமக் கொடிக்கு) ஜோடனை செய்கிறார்கள்; கொடியினுடைய ரசத்தை, ஆடையைப் போல, அவனுக்கு அணிவிக்கிறார்கள். (ரி.வே.14.5)

ஸோமரசத்தை மிகுந்த சிரத்தையுடன் பிழிய வேண்டும் என்பதை ஒரு ரிக் அழகாகச் சொல்லுகிறது. 'எப்பொழுதும் உபயோகிக்கும் இந்தக் கம்பளி நூலாலான வடிகட்டியின் மூலமாக, ஸூரியனின் பெண் நுரைத்துக் கொண்டு ஓடி வரும் ஸோமரசத்தை சுத்தப்படுத்தட்டும்,' ஸூரியனின் பெண் என்றால் அது சிரத்தையைக் குறிக்கிறது என்று சதபதப் பிராம்மணம் கூறுகிறது. (ச.பி. XII. 7.3.11) மக்கள் ஓதும் துதிகளாலும் ஸோமரசம் சுத்தப்படுத்தப்படுவதாக சில ரிக்குகள் கூறுகின்றன.

ஸோமக் கொடியிடம் ஒரு ரிக் கூறுகிறது: 'விண்ணில் உயரமாகத் தூக்கிவைக்கப்பட்ட அவன் (சந்திரன்) உன்னுடைய நெருங்கிய உறவினன்; பூமியின் உயர்ந்த மலைப்பாகங்களில் உன் குழந்தைகள் வளருகின்றன. ஸோம ரசத்தைப் பிழியும் கற்கள், மாட்டுத் தோலின் மேல், உன்னக் கடித்து, மென்று, மையாக ஆக்குகின்றன; முனிவர்கள் தங்களுடைய கைகளால் உன்னுடைய பாலைக் கறந்து அது ஆறாகப் பெருகும்படி செய்கிறார்கள்.' (ரி.வே.IX. 79.4) இந்த ரிக்கிற்கு விளக்கம் தருகையில் ஸாயனர் கூறுகிறார்: 'வேள்விக்காக ஸோமரசம் பிழியும் பொழுது கருப்பு மான் தோலின் மேல் பிழிகிறார்கள் ஆனால் ஸோமரசத்தை விற்பவர்கள் மாட்டுத் தோலின் மீது ஊற்றி அளவெடுத்து விற்கிறார்கள்.'

ஸோமரசத்தை நசுக்கிப் பிழியும் கற்களைப் புகழ்ந்து ஒரு ஸூக்தம் முழுவதும் பாடுகிறது. அதிலிருந்து ஒரு ரிக்: 'புத்துணர்ச்சியைத் தரும் பானத்தைப் பருகிய அந்தக் கற்கள், ஸோமரசத்தைக் கண்டு கொண்டதால், இந்திரனைச் சப்தமிட்டுக் கூவி அழைக்கின்றன. பத்து சகோதரிகளால் (விரல்களால்) அணைக்கப்பட்ட அவைகள், துணிச்சலுடன் அந்த சகோதரிகளுடன் நடனமாடுகின்றன; மணி ஓசை போன்ற அவைகளுடைய ஒலியை பூமி எதிரொலிக்கச் செய்கிறது.' (ரி.வே. X.94.4)

ரிக் வேதம் பெரும்பாலும் கற்களை உபயோகித்தே ஸோமரத்தைப் பிழிவதாகக் கூறுகிறது. ஆனாலும் ரிக் வேத காலத்திலேயே ஸோமரசத்தை உரல்—உலக்கை கொண்டு பிழிந்தார்கள் என்று சில ரிக்குகளிலிருந்து தெரியவருகிறது. (ரி.வே.I. 28.1.4)

செம்மறியாட்டிலிருந்து எடுத்த கம்பளி நூலால் நெய்த வடிகட்டியில் பிழியப்பட்ட ஸோமசரத்தை மேலும் வடிகட்டி சுத்தப்படுத்துகிறார்கள் என்று பல ரிக்குகள் கூறுகின்றன. வடிகட்டியவுடன் அதை 'ஸோம பவமான' என்று குறிப்பிடுகிறார்கள்; புனிதமான ஸோமரசம் என்று அச்சொல்லிற்கு பொருள் ஆகும். மற்றவைகளுடன் கலக்காத தனி ஸோமரசம் பெரும்பாலும் இந்திரனுக்கும் வாயுவிற்கும் அளிக்கப்படுகின்றன; பாலுடன் கலந்த ஸோமரசத்தை மித்திரனுக்கும் வருணனுக்கும், தேனுடன் கலந்த ஸோம ரசத்தை அசுவினி தேவதைகளுக்கும் அளிக்கிறார்கள்.

வடிகட்டிய பிறகு, ஸோமரசம் ஜாடிகளிலும் பீப்பாய்களிலும் சேகரித்து வைக்கப்படுகிறது. காடுகளில் எருமைகள் ஓடுவது போலவும், பறவைகள் இறக்கைகளை அடித்துக் கொண்டு பறப்பது போலவும், ஸோமரசம் ஜாடிகளில் அலைக்கப்படுகிறது; ஒரு பறவை மரத்தின் மேல் உட்காருவதுபோல ஸோமரசம் ஜாடிகளில் தங்குகிறது. ஜாடிகளில் இருக்கும் தண்ணீருடன் ஸோமரசம் கலக்கிறது. உறுமிக்கொண்டு ஓடும் காளைமாடு போல, ஸோமரசம் ஜாடிக்குள் ஓடி, தண்ணீரின் மடிக்குள் போகிறது; தண்ணீரை ஆடையாக உடுத்திக் கொண்டு, அது ஜாடிக்குள் இங்குமட்டும் அலைக்கப்படுகிறது. சில சமயங்களில் ஸோமரசத்தைப் பாலுடன் கலப்பதை ரிக்குகள் குறிப்பிடுகின்றன. தண்ணீரை ஆடையாக உடுத்திக் கொள்ளும் தெய்வமான ஸோமன் பசும்பாலையும் உடுத்த விருப்பம் கொள்ளுகிறான் என்று ஒரு ரிக் கூறுகிறது.

ஒரு ரிக் சொல்லுகிறது: 'பசுமாட்டிலிருந்து பாலைக் கறப்பது போல ஸோமத் தண்டிலிருந்து ஸோமரசத்தைக் கற்களால் பிழிந்து, தண்ணீரால் அதைச்சுத்தப்படுத்துங்கள் பாலால் செய்த ஆடையை மக்கள் அதற்கு வருந்துகிறார்கள்." (VIII. 1.17). இப்படியாக ஸோமரசம் ஜாடிக்குள் போவதைப் பற்றிய கற்பனைகள் ஓடுகின்றன.

ஸோமரசத்துடன் மூன்று பொருள்கள் கலப்பதாக ரிக் வேதம் கூறுகிறது; அவைகள், பால், தயிர், மற்றும் பார்லி (தானியம்) ஆகும். இக்கலவைகளை மினுமினுக்கும் ஆடையாக ரிக் வேதம் கூறுகிறது; இவைகளால் ஸோம ரசம் மிகுந்த பொலிவுடன் அலங்கரிக்கப்பட்டதாக ரிக்வேதம் கூறுகிறது. ஒன்றிரண்டு இடங்களில் ஸோமரத்துடன் நெய்யையும் அல்லது தேனையும் சேர்க்கிறார்கள் என்று ரிக் வேதம் கூறுகிறது. ஒரு ஆற்றைப் போலவோ கடலைப்போலவோ, ஸோமரசம் பொங்குவதாகச் சில ரிக்குகள் சொல்லுகின்றன.

வேள்விகளில் தினம் மும்முறை ஸோமரசத்தைப் பிழிகிறார்கள். காலையில் பிழியும் ஸோமரசத்தை முதலில் இந்திரனுக்கும் பிறகு மற்ற தெய்வங்களுக்கும் கொடுக்கிறார் கள். நடுப்பகலில் பிழியும் ரசத்தை இந்திரனுக்கு மட்டும் கொடுக்கிறார்கள். மாலையில் ரசத்தை ரிஷிகளுக்குக் கொடுக்கிறார்கள்.

ஸோமரசத்திற்கு மூன்று இருப்பிடங்கள் உள்ளதாக வேதம் கூறுகிறது. முதலில் ஒரு பாத்திரத்தில் அதைப் பிழிகிறார்கள். இரண்டாவதாக வடிகட்டியில் அது சுத்தம் செய்யப்படுகிறது, அதன் மூன்றாவது இருப்பிடம் அதை சேகரித்து வைக்கும் ஜாடியாகும்.

ஸோமரசத்தைத் தண்ணீருடன் கலப்பதால், அவைகளுக் குள்ள தொடர்பை ரிக் வேதம் பலவிதமாகக் கூறுகிறது. ஸோமனுடைய கட்டளைகளைத் தண்ணீர் பின்பற்றுகிறது.

வன் ஆறுகளுக்குத் தலைவன், அவன் விண்ணிலுள்ள ண்ணீருக்குப் புருஷன். அவன் கடலின் அரசன், நீர் லைகள் எல்லாம் அவனுடைய சகோதரிகள். அவனே மழையை உண்டாக்குகிறான்.

ஸோமத் துளிகள் நீரில் வளருவதாகவும் நீரின் குழந்தை னவும் வேதம் குறிப்பிடுகிறது. ஏழு முக்கிய நதிகள் கோதரிகள் எனவும் ஸோமனுக்குத் தாயார்களாக ருக்கிறார்கள் எனவும் வேதம் கூறுகிறது.

வடிகட்டியபின் ஸோமரசம் ஜாடிக்குள் விழும் த்தத்தை வேதம் வருணிக்கிறது. மழைபெய்வதைப் ாலவும், படைவீரர்கள் போரில் சண்டையிடும் சத்தத்திற்கு ராவும் அது இருப்பதாக வேதம் கூறுகிறது. கற்கள் ாடியைப் பிழியும் போது உண்டாகும் ஒலியை வேதம் டியுடன் ஒப்பிடுகிறது. ஜாடிக்குள் மினுமினுப்புடன் விழும் ாமரசத்தை மின்னலுடன் சில ரிக்குகள் ஒப்பிடுகின்றன.

பாலையும் நீரையும் பசுமாடுகளுக்கும் ஸோம ரசத்தைக் ளை மாட்டுக்கும் ஒப்பிடுகிறார்கள். ஸோமரசம் லுடனும் நீருடனும் இரண்டறக் கலப்பதன் விளைவே ந்த உவமையாகும். வணங்குவோருக்கு மக்கட்பேறு ணிக்கும் தெய்வம் ஸோமன் என சில ரிக்குகள் றுகின்றன.

பிழிந்து சுத்தம் செய்யும் பொழுது, ஸோமரசம் வகமாக ஓடுகிறது. பத்துப் பெண்கள் (விரல்கள்) ாமரசத்தை, ஒரு வேகமாக ஓடும் குதிரையைப் போல, த்தம் செய்கிறார்கள் என்று ஒரு ரிக் கூறுகிறது. சில சமயம் ாடிக்குள் விழும் ஸோமரசத்தைப் பறக்கும் ஒரு றவையுடன் வேதம் ஒப்பிடுகிறது.

ஸோம ரசத்தின் நிறம் மஞ்சளாகவும் மினுமினுப்புடன் டியதாகவும் இருக்கிறது. ஸோமனுடைய கிரணங்களை

வேதம் ஸூரியனுடைய கிரணங்களுடன் ஒப்பிடுகிறது. ஸூரியனுடைய கிரணங்களை ஆடையாக உடுத்தி இருக்கிறான் ஸோமன். அவன் ஸூரியனுடைய தேரில் ஏறி, ஸூரியனைப் போல, எல்லாப் பிராணிகளுக்கும் மேலே நிலைபெறுகிறான். ஸூரியனைப் போல, அவன் விண்ணையும் மண்ணையும் தன் கிரணங்களால் நிரப்புகிறான். ஒளி வீசும் மகனாக அவன் பிறந்த பொழுது, அவனுடைய பெற்றோர்களைப் (விண்ணையும் மண்ணையும்) பிரகாசிக்கும்படி செய்கிறான். இருளைப் போக்கிப் பிரகாசிக்கும் வெளிச்சத்தை அவன் கொடுக்கிறான்.

மற்ற உணவுகளையும் பானங்களையும் விட, ஸோம ரசம் குடிப்பதால் உண்டாகும் புத்துணர்ச்சியும், சுறுசுறுப்பும், உற்சாகமும் மக்களை இயற்கைக்கு மேற்பட்ட செயல்களைப் புரியத் தூண்டியது; ஆனால் அதை ஒரு தெய்வீகமான பான மாகவும், சாவாமையைத் தருவதாகவும் மக்கள் கருதினர். இதனால் அதை அமிர்தம் என்று கூறுவதும் உண்டு. தெய்வங்கள் பாலுடன் கலந்த ஸோமரத்தைக் குடித்து, புத்துணர்ச்சியும் சாவாமையும் பெற்று மகிழ்கிறார்கள். மனிதனும் அதைக் குடித்துச் சாவாமையைப் பெறுகிறான்.

வேதம் ஸோமரசத்தை மருந்து என்றும் கூறுகிறது. அது நோயாளியைக் குணப்படுத்துகிறது; குருடனுக்கு பார்வை தருகிறது; நொண்டியை நடக்க வைக்கிறது; உடம்பின் ஒவ்வொரு அங்கத்தையும் அது சென்றடைகிறது; நீண்ட ஆயுளை அளிக்கிறது; பாவங்களை அகற்றுகிறது; பொய்களை அழிக்கிறது; உண்மையை வளர்க்கிறது.

ஒரு படகோட்டி படகை ஓட்டுவது போல, ஸோமரசம் குரலைத் தூண்டிப் பேசவைக்கிறது. இதனால் தான் அதைச் சொல்லின் செல்வன் என்று வேதம் கூறுகிறது. சிந்தனை களுக்கு அதிபன். அவன் பாசுரங்களை உண்டாக்குபவன்

வன் கவிகளுக்குத் தலைவன்; குருக்களுக்குள் அவன் ரிஷி. வன் வேள்விக்கு ஆன்மாகவும், தெய்வங்களுக்குக் ருவாகவும் இருக்கிறான். ரிஷிகளுள் அவன் மிகுந்த றிவுள்ள ரிஷி. அவன் பல கண்களால் கூர்மையான றிவுடன் எல்லா ஜீவராசிகளையும் பார்க்கிறான்.

ஸோமன் முன்னோர்களை அரிய செயல்களைச் சய்யத் தூண்டினான்; அவன் அவர்களுடன் இணைந்திருக் றான். முன்னோர்களும் அவனிடம் பிரியமாக இருக்கிறார் ர்.

ஸோமரசத்தின் புத்துணர்ச்சியும் சற்றுப்போதை ட்டும் தன்மையும் சிறப்பித்துப் பேசப் பெறுகிறது. ந்திரன் விருத்திரனுடனும் மற்ற அசுரர்களுடனும் இடும் ண்டைகளில் இந்திரனுக்கு வலியூட்ட இத்தன்மை பெரிதும் தவுகிறது. இந்திரன் ஸோமரசத்தைக் குடித்த பிறகு போரில் வன்முன் .எவரும் நிற்க முடியாது. ஸோமன் ந்திரனுடைய ஆத்மா; இந்திரனுடைய உண்மைத் தோழன். ஸாமபானம் நூறுகோட்டைகளைத் தகர்க்கிறது, ருத்திரனைக் கொல்லுகிறது என்றெல்லாம் வேதம் பசுகிறது.

ஸோமன் ஸூரியனை விண்ணில் உதயமாகச் சய்கிறான். அவன் ஸூரியனுக்கு ஒளியைத் தருகிறான். வன் உஷஸை ப்ரகாசிக்கும்படி செய்கிறான். ஸோமன் விண்ணையும் மண்ணையும் உண்டாக்குகிறான்; அவன் விண்ணைத் தாங்குகிறான்; அவன் நான்கு திசைகளுக்கும் தலைவன்.

ஸோமன் சிறந்த போர் வீரன்; எப்பொழுதும் வெப்பவன்; போர்களில் வெல்ல முடியாதவன். வீரர்களில் வன் சிறந்தவன். அவன் போர்புரிந்து பசுக்களையும் திரைகளையும், தேர்களையும் பொன்னையும் வென்று ன்னை வணங்குவோருக்கு அளிக்கிறான்.

ஸோமன் வீரனாகையால் கையில் ஆயுதங்களை வைத்திருக்கிறான்; அவைகள் கூராகவும் பார்ப்பதற்கு அச்சம் விளைவிப்பதாயும் இருக்கின்றன.

அவன் இந்திரனுடைய தேரோட்டி; சில சமயங்களில் இந்திரனுடன் தேரில் போகிறான். அவன் தேரோட்டிகளில் சிறந்தவன். வேகமாப் பறக்கும் குதிரைகள் அவனுக்குச் சொந்தமாக இருக்கின்றன.

ஸோமக் கொடி மலைகளில் வளருவதாகப் பல ரிக்குகள் கூறுகின்றன. பூமியில் உள்ள மலைகளைத் தான் இந்த ரிக்குகள் குறிப்பிடுகின்றன. அதே சமயம், அது விண்ணில் விளைவதாகவும் விண்ணே அதனுடைய முதல் இருப்பிடம் என்றும் சில ரிக்குகள் கூறுகின்றன. 'விண்ணின் மைந்தன்' என்றும் அதை ஒரு ரிக் பேசுகிறது. பர்ஜன்யன் அதன் தகப்பன் என்றும் வேதம் கூறுகிறது. அது வேள்விகளில் அடிக்கடி புதியதாகப் பிழியப்படுவதால் அதைக் குழந்தை எனவும், எப்பொழுதும் இளைஞன் என்றும் ரிக்குகள் குறிக்கின்றன. அது விண்ணின் பால் என்று ரிக்குகள் கூறுகின்றன. ஸோமன் விண் முழுவதும் பரவி இருக்கிறான். அவன் விண்ணிற்கு அதிபன். அவன் விண்ணிலிருந்து எல்லாப் பிராணிகளையும் பார்க்கிறான். தெய்வமான ஸூரியனைப் போல அவன் எல்லா உலகங்களுக்கும் மேலே நிற்கிறான். அவன் விண்ணின் தொப்புளில், செம்மறியாட்டு முடியிலான வடிகட்டியில் இருப்பதாக ஒரு ரிக்கூறுகிறது. (IX.12.4)

ஒரு கழுகு நூறு கோட்டைகளைப் பிளந்து, விண்ணிலிருந்து ஸோமக்கொடியின் தண்டைப் பிடுங்கி, அதை இரு கால்களுக்கும் நடுவில் இடுக்கிக் கொண்டு, வாயு வேகம் மனோவேகமாக காற்று மண்டலத்தில் பறந்து வந்து, இந்திரனிடம் அதைக் கொடு ந்தது என ரிக்குகள் கூறகின்றன. கழுகு ஸோமக்கொடியை எடுத்துப் பறந்து போகும்

ாழுது, விண்ணிலிருக்கும் ஸோமக் கொடியைக் காக்கும்
ல்லாளியான கிருசானு கழுகின் மேல் ஒரு அம்மை
கிறான். ஆனால் அந்த அம்பு கழுகைத் தாக்காமல்,
க்காமல், அதன் ஒரு இறகை மட்டும் துண்டித்துக் கீழே
ழும்படி செய்கிறது. கழுகு சற்றும் தயங்காமல், தளராமல்
ந்து இந்திரனிடம் வந்து சேர்கிறது. ஆராய்ச்சியாளர்கள்
தன் உட்பொருளை விளக்குகிறார்கள். கழுகு
ன்னலையும், கோட்டைகள் மேகங்களையும், ஸோமக்
ாடி மழை நீரையும் குறிக்கின்றன. இருசானு வரட்சியின்
க்கன். இயற்கை நிகழ்ச்சியான இடி இடித்து (கோட்டை
ளத் தகர்த்து) மின்னல் மின்னி மழை பெய்வதை இது
ிக்கிறது. கீழே விழுந்த கழுகின் இறகு புண்ணியமான
ாச இலையாக மாறியதாகப் பிராம்மண நூல்கள்
துகின்றன. இன்னும் பலாச இலைகளைச் சடங்குகளில்
ம் பயன்படுத்துகிறோம்.

ஸோமனை செடிகளுக்கெல்லாம் அரசன் என்று
க்குகள் கூறுகின்றன. அவன் ஆறுகளுக்கு அரசன்,
ிக்கெல்லாம் அரசன், தெய்வங்களுக்கும் மனிதர்களுக்கும்
ரசன்.

வேதகாலத்திற்குப் பிற்பட்ட நூல்களில் ஸோமன் என்ற
சால் சந்திரனுக்கு மறுபெயராக விளங்குகிறது;
ாமனைத் தெய்வங்கள் வேளை தவறாமல் குடித்து
ருவதால், அவன் தேய்கிறான்; கடைசியில் ஸூரியன்
வனை நிரப்புகிறான். ஸோமனாகிய சந்திரனிடம் அமிர்தம்
ருப்பதால் அதைக் குடிக்கும் தெய்வங்கள் மரிப்பதில்லை.
ாமனாகிய சந்திரனுக்கு 27 நக்ஷத்திரங்களும் மனைவிகள்
ள யஜுர்வேதம் அறிவிக்கிறது. ரிக்வேதத்தில்
பெரும்பாலும் ஸோமனை ஒரு தாவரமாகவே கருதுகிறார்
ள். ஆனால் கடைசியில் (பத்தாவது மண்டலத்தில்) ஸோமன்
ந்திரனையும் குறிப்பதாக ரிக்குகள் உள்ளன. பாத்திரத்
துள்ள ஸோமரசம் நீரிலுள்ள சந்திரனின் பிரதி பிம்பத்தை

ஒத்திருக்கிறது என்று ஒரு ரிக் சொல்லுகிறது. பெரும்பாலும் ஸோமனைத் துதிக்கும் பாசுரங்கள் கொண்ட ஒன்பதாவது மண்டலம் பூராவும் சந்திரனையே குறிப்பதாக ஒரு ஆராய்ச்சியாளர் கூறுகிறார். ஸோமன் என்ற தெய்வமான சந்திரன் தான் வேத மதத்தின் நடு நாயகனாகவும் ஆணி வேராகவும் உள்ளது என மற்றுமொரு ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார். ஆனால் பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள் ரிக்வேதத்தில் வரும் ஸோமன் தாவரத்தையே (கொடியையே) குறிப்பதாக நம்புகிறார்கள்.

வேதகால ஸோம ரசத்திற்கும் பாரசீக நாட்டு ஜொராஸ்டிரிய மதத்தின் ஹோமம் என்ற ரசத்திற்கும் பல ஒற்றுமைகளை ஆராய்ச்சியாளர்கள் காண்கிறார்கள். இரண்டும் தாவரத்திலிருந்து பிழியப்பட்ட மஞ்சள் நிறப் பானம் இரண்டையும் பாலில் கலந்து உண்கிறார்கள். இரண்டையும் விண்ணிலிருந்து கழுகு பூமிக்கு கொணர்ந்தது. இரண்டையும் தெய்வமாக வணங்குகிறார்கள். இரண்டும் வணங்குவோருக்கு மக்கள் பேற்றையும் குதிரைகளையும் கொடுக்க வல்லன. இரண்டும் சற்றுப் போதை யூட்டும் தெய்வீகபானங்கள். ஒரே வேற்றுமை என்னவென்றால், வேதத்தில் அது தெய்வங்களுக்குத் தினம் மும்முறையும், பாரசீக மத நூலில் தெய்வங்களுக்குத் தினம் இரண்டு முறையும் அளிக்கப்படுகிறது.

'ஸு' என்ற சொல்லிற்கு வடமொழியில் பல பொருட்கள் உள்ளன. அதை வினைச் சொல்லாக நோக்கினால், ஆப்தேயின் அகராதியின்படி, அதற்கு ரசத்தைப் பிழிதல் என்று பொருளாகும். இந்த 'ஸு' என்ற வினைச் சொல்லிருந்து ஸோமன் என்ற சொல் பிழியப்பட்ட ரசம் என்ற பொருளில், உருவாகியிருக்கிறது.

* * *

# அத்தியாயம் 5

# மற்ற தெய்வங்கள்

## .1 துவஷ்டா

துவஷ்டாவை தேவதச்சன் என்று காஞ்சி காமகோடி ரமாச்சாரியார் கூறுகிறார். சௌனகர் அவன் ருவங்களை உண்டுபண்ணுபவன் (ரூபகிருந்) என்கிறார். ிருஹத்தேவதா I. 84).

அவன் கைவேலையில் மிகவும் தேர்ச்சி பெற்றவன். ந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தை அவன் நிர்மாணித்ததாக க் வேதம் பல இடங்களில் பேசுகிறது. அவன் பிரும்ஹணஸ் தியின் இரும்புக் கோடாலியைக் கூர்மையாக்கினான். ள்வியில் உபயோகிக்கும் மரக் கரண்டிகளை அவன் ாரிக்கிறான். தெய்வங்கள் அருந்தும் பானங்களை ற்றிவைக்கும் பாத்திரங்களை அவன் கொண்டுவருகிறான். கமாக ஓடும் குதிரைகளை அவன் உண்டுபண்ணுகிறான்; திரைகளுக்கு வேகத்தை அவன் தருகிறான்.

துவஷ்டா உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் வரவர்களுடைய உருவத்தைக் கொடுக்கிறான். இது பற்றி ு ரிக் பேசுகிறது: ‘எல்லாவற்றையும் உண்டாக்கும் தெய்வ ன துவஷ்டா மனித குலத்தையே பெற்று பலவிதத்திலும் ணவளிக்கிறான். எல்லா ஜீவராசிகளும் அவனுக்குச் ாந்தமானதே; தனக்கு மட்டுமே சொந்தமான அவனுடைய லான ஆட்சி உயர்ந்தது.’ (ரி.வே. III. 55.19)

துவஷ்டாவின் மகள் சரண்யூவிற்கு யமன், யமீ என்ற ரட்டையர்கள் பிறந்தார்கள். ஆகையால் யமனும், யமீயும் வஷ்டாவின் பேரனும் பேத்தியும் ஆவார்கள். வாயு

அவனுடைய மாப்பிள்ளை என்று ஒரு ரிக் கூறுகிறது. பிருஹஸ்பதி அவனுடைய மகன் என்கிறது ஒரு ரிக். துவஷ்டாவின் பத்து பெண்கள் (விரல்கள்) அக்கினியை உண்டாக்கின; ஆகையால் அக்கினியும் அவனுடைய மகன் ஆகும். ஸோமனைக் காக்கும் பொறுப்பு அவனுடையது.

துவஷ்டாவைப் பற்றி ஒரு சுவையான கதையை நாம் தைத்திரீய ஸம்ஹிதையில் காண்கிறோம். துவஷ்டாவிற்கும் இந்திரனுக்கும் விரோதம் ஏற்பட்டது. ஆகையால் இந்திரனை வதைக்கக் கூடிய மகன் தனக்குப் பிறக்க வேண்டும் என்று விரும்பி, அதற்கான மந்திரத்தை ஜபம் பண்ணினான். அப்பொழுது எழுத்துக்களின் (அக்ஷரங்களின்) உச்சரிப்பின் உயர்த்தல், தாழ்த்தளில் (ஸ்வரம்) பிழை ஏற்பட்டது. அதனால் அவன் விரும்பிய பலனான 'இந்திரனை வதைக்கக் கூடிய மகன்' என்பதற்கு நேர்மாறாக 'இந்திரன் வதைக்கக் கூடிய மகன், அதாவது இந்திரனால் வதைக்கப்படக் கூடிய மகன் தனக்குப் பிறக்க வேண்டும் என்று அவன் ஜபம் செய்ததாக ஆகி விட்டது. அதே மாதிரி அவனுக்கு விச்வரூபன் என்ற மகன் பிறந்து, அவனை இந்திரன் கொன்றான் என்று கதை முடிகிறது.

ஆப்தேயின் அகராதியில் துவஷ்டாவைப் பற்றிய பின்வரும் ரஸமான குறிப்பு உள்ளது. துவஷ்டாவிற்கு ஸம்ஞா என்ற மகள் இருந்தாள். அவன் அவளை ஸூரியனுக்கு மணம் செய்து கொடுத்தான். ஸம்ஞா ஸூரியனுடன் வசிக்கலானாள். ஆனால் அவளால் ஸூரியனுடைய கண்ணைப் பறிக்கும் ஒளியையும், கடும் வெப்பத்தையும் தாங்க முடியவில்லை. அவள் படும் கஷ்டத்தை உணர்ந்த துவஷ்டா, ஸூரியனைத் தன்னுடைய இயந்திரத்தில் ஏற்றி, அவனுடைய உருண்டை வடிவிலிருந்து ஒரு சிறிய பாகத்தைச் செதுக்கி எடுத்துவிட்டான். ஸூரியனுடைய வெப்பமும் தணிந்து, கண் கூசும் ஒளியும் சற்று மங்கியது. ஸம்ஞாவும் மகிழ்ச்சியாகத் தன் புருஷனுடன்

சிக்கலானாள். துவஷ்டா ஸூரியனிடமிருந்து செதுக்கி எடுத்த பாகத்தை வைத்துக் கொண்டு பல ஆயுதங்களை உண்டாக்கினான். சிவனுடைய திரிசூலத்தையும், விஷ்ணுவினுடைய சுதர்சன சக்கரத்தையும் மற்றும் பல ஆயுதங்களையும் அவன் ஸூரியனிடமிருந்து செதுக்கி எடுத்த பாகத்திலிருந்து செய்தான்.

* * *

## 5.2 விசுவகர்மா

விசுவகர்மா என்ற சொல்லுக்கு உலகத்தையும், உலகிலுள்ள எல்லாவற்றையும் சிருட்டித்தவன் என்று பொருள் கொள்ளலாம். ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் அவனைப் பற்றி இரண்டு ஸூக்தங்கள் உள்ளன. (ரி.வே.X. 81,82). அவனுக்கு நாற்புறமும் கண்களும், வாய்களும், கைகளும், கால்களும் உள்ளன; அவன் விண்ணையும் மண்ணையும் உண்டாக்கி, அவைகளைக் கைகளாலும், இறக்கைகளாலும் ஒருங்கிணைத் தான். (ரி.வே.X. 81,3).

ஒரு ரிக் அழகான கேள்விகளை எழுப்புகிறது: 'எந்த மரத்திலிருந்து அவர்கள் விண்ணையும் மண்ணையும் படைத்தார்கள்? எங்கு நின்று கொண்டு அவன் இவைகளை உண்டாக்கினான் என்று சிந்தனையாளர்களான நீங்கள் உங்கள் மனதிற்குள்ளேயே ஆராய்ந்து பாருங்கள்!' (ரி.வே.X. 81.4).

அவன் பேச்சுக்கு அதிபன்; அவன் மனோவேகமாகச் செயல்களைப் புரிகிறான்; எப்போதும் நல்லதையே செய்கிறான். அவன் சிறந்த அறிவாளி. அவன் இருப்பவை

எல்லாவற்றையும் அறிவான். அவன் தெய்வங்களுக்குப் பெயர்களைக் கொடுக்கிறான். எல்லா விஷயங்களையும் தெரிந்துகொள்ள, மற்றவர்கள் அவனை நாடுகிறார்கள். பிராம்மண நூல்கள் விசுவகர்மாவையும் பிரஜாபதியையும் ஒருங்கிணைத்தும் பேசுகின்றன.

* * *

## 5.3 பிரஜாபதி

பத்தாவது மண்டலத்தில் ஹிரண்யகர்ப்ப ஸூக்தம் எனப்படும் 121வது ஸூக்தம் சற்று மாறுதலாகவும், புதுமையாகவும் அமைந்துள்ளது. இந்த ஸூக்தத்துக்குத் தேவதை 'யார்' (க:). பத்து ரிக்குகள் கொண்ட இந்த ஸூக்தத்தில், முதல் ஒன்பது ரிக்குகளிலும் கடைசி அடி (பாதம்) இப்படி அமைந்துள்ளது: 'எந்தத் தெய்வத்தை நாங்கள் வணங்குவோம்?' (கஸ்மை தேவாய ஹவிஷா விதேம). பத்தாவது ரிக்கில் இந்தத் தெய்வம் பிரஜாபதி என்பதைக் காண்கிறோம். முதல் ஒன்பது ரிக்குகளிலும் பிரஜாபதியைப் பற்றிய பல குறிப்புகள் உள்ளன. பிரஜாபதி என்றால் மக்களின் தலைவன் என்று பொருள்.

அவன் முதலில் உண்டானவன்; அவன் எல்லா ஜீவராசிகளுக்கும் அதிபதி; விண்ணையும் மண்ணையும் நிலை நிறுத்தியவன் அவன். எல்லோருக்கும் பிராணனையும் சக்தியையும் கொடுக்கிறான்; அவனுடைய கட்டளைகளை மற்ற தெய்வங்கள் ஏற்கிறார்கள்; அவன் மரணத்திற்கு அதிபன்; அவனுடைய நிழலே சாகாமை ஆகும். நகர்ந்து கொண்டும், மூச்சு விட்டுக் கொண்டும், தூங்கிக் கொண்டும் இருக்கிற ஜீவ ராசிகள் உள்ள இவ்வுலகிற்கு அவன் பேரரசன்; மனிதர்களுக்கும், ஆடுமாடுகளுக்கும் அவன் தலைவன்.

பனி மூடிய உச்சிகளை உடைய மலைகளும், கடலும், காற்று மண்டலங்களும் அவனுக்குச் சொந்தமானதே. அவன் வெளிச்சத்தையும், வானத்தையும் தாங்குகிறான்; அவன் காற்று மண்டலத்தை அளக்கிறான்.

யார் என்ற கேள்விக்கு விடை பகரும் பத்தாவது ரிக்கைத் தற்காலத்திலும் சடங்குகளில் ஓதுவதை நாம் கேட்கிறோம். அந்த ரிக் வருமாறு:

பிரஜாபதே ந த்வதேதான்யன்யோ
விச்வா ஜாதானி பரிதா பபூவ ।
யத் காமாஸ்தே ஜுஹுமஸ்தன்னோ அஸ்து
வயம் ஸ்யாம பதயோ ரயீனாம் ||

(ரி.வே.X.12 1.10)

**இதன் பொருள் :**

'நீ ஒருவனே இவ்வுலகில் உண்டான எல்லாவற்றையும் அறிவாய்; மற்றெவருமிலர். நாங்கள் உன்னை அழைக்கும் பொழுது, நாங்கள் விரும்பியதை நீ அருள்வாயாக; நாங்கள் எல்லா செல்வத்துக்கும் அதிபர்களாகும்படி செய்வாயாக.'

இந்த ஸூக்தத்தில் பிரஜாபதியை முதல் தெய்வமாக வழிபடுகிறார்கள். ஆனால் முதல் ஒன்பது மண்டலங்களிலும் அவருடைய பெயர் காணப்படவில்லை. இதனால் ஆராய்ச்சி யாளர்கள் பிரஜாபதியை வேதகாலத்திலேயே சற்றுப் பின்னால் வந்த தெய்வமாகக் கருதுகிறார்கள். அதர்வ வேதத்திலும், வாஜஸதேயி ஸம்ஹிதையிலும் எல்லாப் பிரம்மண நூல்களிலும், பிரஜாபதியை முதல் தெய்வமாகப் பேசுகிறார்கள். பிற்கால நூல்கள் மும்மூர்த்திகளில் ஒருவரான பிரம்மாவையும் பிரஜாபதியையும் ஒருங்கிணைக்கின்றன.

* * *

## 5.4 அதிதி

சௌனகர் கூறுகிறார்: 'உலகைச் சுற்றியுள்ள காற்று மண்டலத்தின் நடுவில் அவன் இருக்கிறான். நான்கு பக்கங்களிலும் அவனை யாரும் தொந்திரவு செய்யவில்லை. 'ரிஷிகள் அவனை அதிதி என்று கூறுகிறார்கள்.' (பிருஹத் தேவதா II. 46). இதில் அதிதியை ஆணாகச் சொல்லியது குறிப்பிடத்தக்கது. எல்லா வேத நூல்களிலும் அதிதியைப் பெண்ணாகவே, தாயாகவே, பேசுகிறார்கள். யாஸ்கரும் பெரும்பாலும் சௌனகர் சொன்னதையே கூறுகிறார்; ஆனால் அவர் அதிதியைப் பெண்ணாகத், தாயாகக் குறிப்பிடுகிறார். (நிருக்தம் IV. 22). ரிக் வேதத்தில் உரையாசிரியர் ஸாயனர் அதிதியை, பூமி எனக் கூறுகிறார். (ரி.வே. I. 24.1. உரை) லண்டனில் பல ஆண்டுகள் வேதநூல் ஆராய்ச்சியில் ஈடுபட்ட ஜெர்மனி நாட்டு வேத வித்தகர் புரொபசர் மாக்ஸ்முல்லர் என்பவர் பின் வருமாறு சொல்லுகிறார். 'அதிதி என்பவள் அளவில்லாததைக் குறிக்கப் புனையப்பட்ட முதல் சொல்லாகும்; அவள் மிகப் பழமையான பெண் தெய்வம், அளவில்லாதது என்பது காரணங்களுடன் மிக நுண்ணியமாக நீண்டகாலம் விவாதிக்கப்பட்டு அதன் பிறகு ஒப்புக் கொள்ளப்பட்ட சொல்லல்ல; ஆனால் பார்க்கக்கூடிய அளவில்லாதது, பூமிக்குப் புறம்பாலும், மேகங்களுக்குப் புறம்பாகவும், விண்ணிற்குப் புறம்பாகவும் உள்ள அகண்ட விஸ்தாரமான பரப்பு ஆகும்.' *

---

* *'Aditi, as ancient god or goddess, is in reality the earliest name invented to express the Infinite; not the Infinite as the result of a long process of abstract reasoning, but the visible Infinite, the endless expanse beyond the earth, beyond the clouds beyond the sky.' (Professor Muller (Trans. of the Rgveda, I.230)*

ஏ.ஏ.மாக்டானல் என்னும் ஆங்கிலேய வேத வித்தகர் கூறுகிறார்: 'கட்டுவது எனப் பொருள்படும் 'தா' என்ற வடமொழி வினைச் சொல்லிலிருந்து திதியும், அதிலிருந்து அதிதி என்றால் 'அவிழ்த்து விடுதல்' என்று பொருள்படும் சொல்லும் உருவாகியுள்ளன.

சுனச்சேபனின் கதையை 'மகரிஷிகள் வரலாறு' என்ற என்னுடைய நூலில் விசுவாமித்திரர் என்ற தலைப்பில் காணலாம்.

சுனச்சேபன், வேள்விக்கம்பத்தில் கட்டப்பட்ட பொழுது, வருணனையும் மற்ற தெய்வங்களையும் துதிக்கிறான்: 'உங்களில் எந்தத்தெய்வம் என்னை, என் பெற்றோர்களைச் சந்திப்பதற்காக, வலிமையுள்ள அதிதியிடம் கொணர்ந்து செல்வீர்கள்?' (ரி.வே. I. 24.1) இங்கு பெற்றோர்கள் என்பது தியாவா—பிருதிவீ (விண்ணையும் மண்ணையும்) குறிக்கும். அதிதி என்பது இயற்கையைக் குறிப்பதாகப் பல ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

அதிதியின் உடம்பிலிருந்து எட்டு மகன்கள் உயிர் பெற்றெழுந்ததாக ரிக் வேதம் கூறுகிறது. (ரி.வே.X .72.8), மற்றும் அதர்வ வேதத்திலும், சதபத பிராம்மணத்திலும், மற்ற வேத நூல்களிலும் அதிதிக்கு எட்டு மகன்கள் என்பதையே காண்கிறோம். ஆனால் சதபதப் பிராம்மணத்திலும், மற்ற வேத நூல்களிலும் அதிதிக்கு எட்டு மகன்கள் என்பதையே காண்கிறோம். ஆனால் சதபதப் பிராம்மணம் வேறு ஓரிடத்தில் அதிதிக்கு பன்னிரண்டு மகன்கள் என்று சொல்லுகிறது. இந்தப் பன்னிரண்டு மகன்களைப் பன்னிரண்டு மாதங்களுடன் ஒருங்கிணைக்கிறார்கள். ரிக் வேதத்தில் அவளுடைய பெயரைச் சொல்லும் பொழுது, பெரும்பாலும் அவளுடைய தாய்மையை முக்கியமாகக் குறிப்பிடுகிறார்கள்.

ஆபத்துகளிலிருந்து காக்கும்படி அதிதியை வேண்டுகிறார்கள். ஆனால் பெரும்பாலும் மக்கள் பாபங்களிலிருந்து விடுதலையைக் கோரியே அதிதியை வழிபடுகிறார்கள்.

ஒரு ரிக் கூறுகிறது: 'அதிதியே விண்ணாவாள்; அதிதி நடுவிலுள்ள காற்று மண்டலம், அதிதி தாயாகவும், தகப்பனாகவும், மகனாகவும் இருக்கிறாள். அதிதியே எல்லாத் தெய்வங்களும் ஆவாள்; ஐந்து குழுக்களாக உள்ள மனிதர்களும் அதிதியேதான்; இது வரை பிறந்ததெல்லாமும், இனி பிறக்கப் போகும் எல்லாமும் அதிதியே தான்.' (ரி.வே.I. 89.10). பகவத் சிருஷ்டியில் எல்லாமாக அதிதி விளங்குகிறாள் என்று இந்த ரிக் பேசுகிறது.

'அத்' என்ற வடமொழிச் சொல்லிற்கு உண்பது என்று பொருளாகும். இந்த வினைச் சொல்லிலிருந்து அதிதி உருவானதாகக் கடோபநிஷத் கூறுகிறது. 'பிரம்மம் எல்லாத் தேவதைகள் வடிவாக, எல்லாவற்றையும் உண்பதால் அதிதி என்ற பெயர் உள்ளதாக இருக்கிறது; அது முக்கியப் பிராண வடிவில் தோன்றி இதய குகையில் புகுந்துறைகிறது; தோன்றும் பொருள் ஒவ்வொன்றுடனும் அது தோன்றுகிறது.' (க.உ.IV. 7) ஆகவே அதிதியே பரப்பிரம்மம் என்கிறது உபநிஷத்.

ஒரே ரிக்கில் அதிதியைத் தக்ஷனின் தாயாகவும், மகனாகவும் வேதம் பேசுகிறது; இதைப்பற்றிய விளக்கத்தை ஆதித்தியர்கள் என்ற தலைப்பில் காணலாம். (அத்தியாயம் 2.9)

பிரகாசமாக உள்ள ஆதித்தியர்களின் தாயாக இருப்பதால் அதிதிக்கும் வெளிச்சத்துடன் தொடர்பு உண்டு. மக்கள் அவளிடம் ஒளியை வேண்டுகிறார்கள். அவளுடைய அழியாத ஒளியைப் புகழ்கிறார்கள்; உஷஸ் அவளுடைய முகமாக உள்ளது.

பல வேத நூல்களில் அதிதியைப் பால் சுரக்கும் பசுமாடாகப் பேசுகிறார்கள். சில இடங்களில் வேள்விப் பசுவை அதிதி எனவே அழைக்கிறார்கள்.

இருவரை அதிதியைப் பற்றி கூறியதிலிருந்து, மூன்று கருத்துக்கள் தெளிவாகின்றன. முதலாவதாக அவளுடைய தாய்மையை வேதம் அடிக்கடி வற்புறுத்துகிறது. எல்லாத் தெய்வங்களுக்கும் தாயாகவும், முக்கியமாக எட்டு (அல்லது பன்னிரண்டு) ஆதித்தியர்களுக் தாயாகவும் அவள் விளங்குகிறாள். இரண்டாவதாக பாவங்களிலிருந்தும் பந்தங்களிலிருந்தும் மக்கள் அவளிடம் விடுதலையைக் கோருகிறார்கள்.

மூன்றாவதாக, எல்லையில்லாததும், அளவற்றதும், எல்லாமுமாக விளங்கும் அதிதி, பிற்கால தத்துவ விசாரணைகளுக்கும், ஒரு கருவாக அமைந்திருக்கிறாள் என்று சொன்னால், அது மிகையாகாது. ரிக் வேதத்தில், சிற்சில இடங்களில் இம்மாதிரியான தத்துவ ஆராய்ச்சிகளுக்குக் கோடி காட்டும் படியாகச் சில சொற்களையும் சொற்றொடர்களையும் புனைந்திருக்கிறார்கள். உதாரணமாக, 'ஏகம் ஸத் விப்ரா: பஹுதா வதந்தி.' (ரி.வே.I. 164.46) என்ற வாக்கியம் ஆகும். இதன் பொருள், 'மெய்ப்பொருள் ஒன்றேயாகும், அறிவாளிகள் அதைப்பல விதமாகக் கூறுகிறார்கள்.' இந்தக் கருத்து உபநிஷதங்களிலுள்ள தத்துவ விசாரணைகளுக்கு மையாக விளங்குகிறது. அதே மாதிரி, 'அதிதிர் ஜாதம், அதிதிர் ஜனித்வம்! (ரி.வே.I. 89.10) என்ற வாக்கியம் ஆகும். இதுவரை உண்டான உயிருள்ள உயிரற்ற எல்லாமாகவும் இனி உண்டாகப் போகும் உயிருள்ள உயிரற்ற எல்லாமாகவுமாக அதிதி இருக்கிறாள் என்று பொருள்படும். இவ்வாக்கியத்திலிருந்து இந்த உலகப் படைப்பில் அவளன்றி வேறில்லை என்பது தெளிவாகிறது.

ஆக, மெய்ப்பொருள் ஒன்றே என்ற ரிக் வேதக் கருத்தை, அதிதி மேலும் உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

'அளவில்லாதது' (Infinity) என்ற ஆழமான வேதாந்தக் கருத்தை உருவகப்படுத்தும் விதமாக அதிதி விளங்குகிறாள்.

பெண்ணாகவும், தாயாகவும் இருக்கும் அதிதி, பிற்காலத்தில் வளர்ந்த சக்தி உபாசனைக்கு அடிகோலியிருக்கலாம் என்றும் சொல்ல வாய்ப்பு உண்டு.

இப்படியாக, அதிதி வேதகால தெய்வங்களில் ஒரு முக்கிய தெய்வமாகவும், ஆழ்ந்த கருத்தைச் சுட்டிக் காட்டும் குறியீடாகவும் பிரகாசிக்கிறாள்.

## 5.5 சில பெண் தெய்வங்கள்

வேதகாலத்தில் பெண் தெய்வங்கள் முக்கியத்துவம் பெறாமல் இருந்தன. அவர்களுக்கு வேள்விகளில் ஸோம பானம் கொடுப்பதில்லை. அவர்களில் ஓரளவு பிரசித்தி பெற்ற தெய்வம் உஷஸ் ஆவாள். அடுத்தாற்போல் ஸரஸ்வதியையும், பிருத்வீயையும் அதிதியையும் கூறலாம். இந்த நான்கு தெய்வங்களையும் குறித்து ஏற்கனவே பார்த்தாகி விட்டது. வேதம் வணங்கும் இன்னும் சில பெண் தெய்வங்களை இப்பொழுது பார்ப்போம்.

'வாக்' என்பது உருவகப் படுத்திய பேச்சு ஆகும். பத்தாவது மண்டலத்தில், 125வது ஸூக்தம் வாக்கைத் தேவதையாகக் கொண்டுள்ளது. இங்கு பேச்சு என்பது சாதாரணமாகத் தினசரி வாழ்க்கையில் நடைமுறையில் உள்ள பேச்சல்ல. ஆன்மீகமான பேச்சு, மனிதர்களுக்கும் தெய்வங்களுக்கும் நடுவில் நடக்கும் உரையாடலாகிய வேதப்பாசுரங்கள் தான் இந்த வாக் ஆகும்.

மற்றத் தெய்வங்களுடன் தான் சுற்றுவதாக வாக் கூறுகிறாள்: 'அக்கினியில் ஆஹுதிகளைக் கொடுத்து சிரத்தையுடன் வேள்வி புரிபவனுக்கு செல்வங்களை அவள் அள்ளிக் கொடுக்கிறாள். மகாராணியாக இருந்து கொண்டு அவள்

செல்வங்களைச் சேகரிக்கிறாள்; வணங்கத் தகுதியுள்ளோர் களில் அவள் முதலாவதாக விளங்குகிறாள். தெய்வங்கள் அவளைப் பல வீடுகளுக்குள் நுழைந்து அவைகளை தனக்கு இருப்பிடமாகக் கொள்ளும் படி செய்திருக்கிறார்கள்.' (ரி.வே.X. 125. 1.3)

வாக் தனக்குப் பிரியமானவனைப் பலசாலியாகவும், முனிவராகவும், ரிஷியாகவும் செய்கிறாள். அவள் ருத்திரனுடைய வில்லை வளைத்து, அதன் அம்பால் வழி பாட்டை வெறுப்பவளை அடித்துக் கொல்லுகிறாள். அவளுடைய இருப்பிடம் கடல் நீரில் உள்ளது; அங்கிருந்து கொண்டே அவள் விண்ணைத் தன் நெற்றியால் தொடுகிறாள். அவள் சூறாவளியைப் போலப் பெருமூச்சு விடுகிறாள்; அவள் எல்லா ஜீவராசிகளையும் தாங்குகிறாள்.' (ரி.வே.X. 125. 5.8)

யாஸ்கர் இடியை 'மாத்தியமிகா வாக்) அதாவது நடுமண்டலத்திலுள்ள குரல் என்று கூறுகிறார். (திருக்தம் XI. 27).

ஒரு சமயம் வாக் தேவதையை தேவர்களும் அசுரர்களும் அடைய விரும்பியதால் அவர்களுக்குள் போட்டி ஏற்பட்டது. பெண்ணான வாக் தேவதையை ஆடிப்பாடி மகிழ்விக்கலாம் என்று நன்கு அறிந்திருந்தார்கள் தேவர்கள். அதே மாதிரி அவள் முன் ஆடிப்பாடித் தேவர்கள் அவளை மகிழ்வித்து அடைந்தார்கள். (சதபதப் பிராம்மணம் III. 2.4.6)

அடுத்த பெண் தெய்வமான ராத்திரி, உருவம் பெற்று, பத்தாவது மண்டலத்தில் 127வது ஸூக்தத்திற்கு தேவதையாக இருக்கிறாள். 'ராத்திரி தன்னுடைய பல கண்களுடன் பார்க்கிறாள்; அவள் தன் பெருமைகளையெல்லாம் அணியாக அணிந்திருக்கிறாள். சாகாமை பெற்ற அவள் உயர்ந்த இடங்களையும் தாழ்ந்த இடங்களையும் நிரப்புகிறாள்; தன் வெளிச்சத்தால் அவள் இருளை வெல்கிறாள். அந்தப்

பெண் தெய்வம் தன் சகோதரியான உஷஸைத்தன், இடத்தில் அமர்த்துகிறாள்; அதன் பிறகு இருள் மறைகிறது.' (ரி.வே.X. 127. 1.3)

ராத்திரி தேவதையின் ஸூக்தம் தொடர்கிறது: 'பறவைகள் மரத்திலுள்ள தத்தம் கூடுகளுக்குச் செல்லுமாப் போல, நாங்கள் நீ போகும் வழியில் வந்திருக்கிறோம்; எங்களுக்கு நீ அருள் புரிவாயாக. கிராம மக்கள் தங்களுடைய வீடுகளுக்குச் செல்லுகிறார்கள்; பருந்து உள்பட, நடப்பவை எல்லாமும், பறப்பவை எல்லாமும் தத்தம் இருப்பிடங்களை அடைகின்றன. ஓ தெய்வமே! ஓநாய்ளும், திருடர்களும் நெருங்காமல் காப்பாற்று. அவள் இருளைப் பல வண்ணங்களில் அலங்கரிக்கிறாள். ஓ காலை வேளையே! கடனைத்தீர்ப்பது போல இருளை நீக்கி விடு. விண்ணின் மகளாகிய இரவே! ஒரு வெற்றி வீரனைப் போல இத்துதிகளை ஏற்றுக் கொள்! (ரி.வே. X.127. 4.8)

ஸினிவாலி என்ற பெண் தெய்வம் மற்ற தெய்வங்களின் சகோதரி; அவள் விரல்களும் கைகளும் அழகாக இருக்கின்றன. அவள் கூந்தல் அடர்த்தியாக இருக்கிறது. அவுள் பல மகன்களுக்குத் தாயாக விளங்குகிறாள். அவள் மனித குலத்தின் மகாராணியாக இருக்கிறாள். எல்லோரும் அவளிடம் மக்கட் பேறை வேண்டுகிறார்கள். (ரி.வே. II. 32 6.7) மற்றுமொரு ரிக்கில், ஸினிவாலியை ஸரஸ்வதியுடன் கூட வழிபட்டுக் கர்ப்பத்தைப் பெண்ணின் வயிற்றில் வைக்கும்படி வேண்டுகிறார்கள். (ரி.வே. X 184.2)

ராகா என்ற பெண் தெய்வம் பௌர்ணமி தினத்திற்குத் தேவதையாக விளங்குகிறாள். 'அவள் காது கொடுத்துக் கேட்பதில் சுறுசுறுப்பாக இருக்கிறாள். மங்களமான அவள் நாங்கள் சொல்வதைப் கேட்கட்டும்; அவளே பார்க்கவும் செய்யட்டும். எப்பொழுதுமே உடைந்து போகாத ஊசியால், அவள் கையிலுள்ளதைத் தைத்துக்கொண்டே எங்களுக்குப் புகழத்தகுந்த செல்வந்தரான வீரப்புதல்வர்களை அருளட்டும்.

ராகாவே! அன்பான அழகான எண்ணங்களுடன் நீ, வள்விகளில் ஆஹுதிகளைக் கொடுப்பவனுக்கு, செல்வங் ளை அள்ளி வீசுகிறாய். அருள் பாலிப்பவளே! இன்று நீ ங்களிடம் வந்து, பற்பல விதவிதமான உணவுகளைக் கொடுப்பாயாக.' (ரி.வே. II. 32. 4.5)

குங்கூ அல்லது குஹூ என்ற அமாவாசை தினத் தெய்வத்தின் பெயர் மட்டும் ரிக் வேதத்தில் காணலாம்; ஆனால் அவளைப் பற்றிய விவரங்கள் ஏதும் வேதம் றவில்லை.

அரண்யாணி என்பவள் காடுகளின் தெய்வமாக க்வேதம் பேசுகிறது. 'பார்வையிலிருந்து மறைபவள் போலத் தோன்றும் காட்டின் தெய்வமே! நீ ஏன் கிராமத்திற்கு ரமாட்டேன் என்கிறாய்? உனக்குப் பயமா?' (ரி.வே. X. 46.1).' இன்னும்: 'இப்பொழுது நான் நல்வாசனையுள்ள ளும், நோய்களைக் குணப்படுத்த வல்லவளும் ஆன ாட்டின் ராணியைப் புகழ்ந்து விட்டேன். தாவரங்களின் யான அவள் உழமாட்டாள்; ஆனால் அவள் நிறைய ணவுப் பொருள்களை வைத்திருக்கிறாள்!' (ரி.வே.X. 146.6)

ஸூரியனின் மகளான ஸூரியா ஸாவித்திரியை அவளுடைய திருமண ஸூக்தத்தில் (ரி.வே.X. 85), சில ரிக்குகளும் மற்றும் சில ரிக்குகளும் தேவதையாகப் போற்றுகின்றன. புரந்தி என்பவள் செழுமைக்குத் தேவதையாக விளங்குகிறாள். திஷணா என்பவள் வேதம் பேசும் மற்றொரு செழுமைத் தெய்வமாகும். இலா ன்பவளைப் புஷ்டிக்குத் தேவதையாக வேதம் பேசுகிறது. ஸரஸ்வதியுடன் சேர்ந்து இடா, பாரதி என்று இரு தெய்வங்களை வேதம் சொல்லுகிறது. மருத்துக்களின் ாயான பிருஷ்ணியையும் ஒரு தேவதையாக வேதம் றுகிறது. அப்ஸரஸான ஊர்வசி, புருரவஸுடன நடக்கும் ரையாடலில், சில ரிக்குகளுக்குத் தேவதையாக இருக்கிறாள். ரி.வே.X. 95).

இது தவிர, இந்திராணி, வருணானி போன்ற சில தெய்வங்களின் மனைவிகளையும் வேதம் குறிப்பிடுகிறது.

## 5.6 சில்லறைத் தெய்வங்கள்

அப்ஸரஸ் என்பது தண்ணீர் எனப் பொருள்படும். 'அப்' என்ற வடமொழிச் சொல்லிலிருந்து உருவாகியுள்ளது. தண்ணீரை (கடலை)க் கடைந்ததால் உண்டான உத்தமப் பெண்களே அப்ஸரஸ் ஆகும் என வால்மீகி ராமாயணத்தில் ஒரு சுலோகம் சொல்லுகிறது. (பால காண்டம் ஸர்கம் 45 சுலோகம் **32**). அவர்களுடைய இருப்பிடம் தண்ணீர் என்றும், ஒரு நொடியில் அவர்கள் அதிலிருந்து வெளிவந்தும் திரும்பவும் அதற்குள் போகவும் செய்கிறார்கள் என்று அதர்வ வேதம் கூறுகிறது. (அ.வே.II **2.3**)

தேவதைகளான அப்ஸரஸ் பெண்கள் இந்திரனுடைய சபையில் இருந்து கொண்டு அவனுக்குப் பணிவிடை புரிகிறார்கள். அவர்களுள் முக்கியமானவள் ஊர்வசி. வஸிஷ்டரும் அகஸ்தியரும் அவளுடைய மகன்களாகும்.

அப்ஸரஸ் பெண்கள் கந்தர்வர்களின் காதலிகளாகவும், மனைவிகளாகவும் இருக்கிறார்கள். ஒரு ரிக் கூறுகிறது: 'அந்தப் பெண்ணான அப்ஸரஸ், புன்சிரிப்புடன், தன்னுடைய காதலனை விண்ணில் தாங்குகிறாள்; அந்தக் கந்தர்வன், தன் தோழனின் இருப்பிடத்தில் சுற்றுகிறான்; வேனன் (ஸூரியன்) தன் தோழனான கந்தர்வனைத் தன்னுடைய தங்கச் சிறகில் உட்கார வைக்கிறான். (ரி.வே. X. **123.5**)

அவர்கள் ஆல மரங்களிலும் அச்வத்த மரங்களிலும் இருந்து கொண்டு தங்களுடைய தம்புராக்களையும் ஜாலராக்களையும் ஒலித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அதர்வ வேதம் பேசுகிறது. (அ.வே. IV. **37.4**). இந்த மரங்களிலுள்ள அப்ஸரஸ் பெண்களையும் கந்தர்வர்களையும், வழியில்

போகும் திருமண ஊர்வலத்திற்கு அருளாசி வழங்கும்படி, கேட்டுக் கொள்ளுகிறார்கள். (அதர்வவேதம் XIV. 2.9) அவர்கள் ஆடிப் பாடி விளையாடிக் கொண்டிருப்பதாக சதபதப் பிராம்மணம் கூறுகிறது. அவர்கள் சூதாட்டத்தில் பிரியமுள்ளவர்கள்; மற்றவர்களுக்கு விளையாட்டுகளில் அவர்கள் அதிருஷ்டத்தைக் கொடுக்கிறார்கள்.

அப்ஸரஸ் பெண்கள் மிகவும் அழகு வாய்ந்தவர்கள்; பெரும்பாலும் கந்தர்வர்களே அவர்களுடைய காதலர்களாக இருக்கிறார்கள்; ஆனால், சில சமயங்களில், மனிதர்களும் அவர்களுடைய காதலர்களாக விளங்குகிறார்கள்.

மானிடர்களுக்கும் அப்ஸரஸ் பெண்களுக்கும் இடையே ஏற்படும் காதலில் ஒரே ஒரு வரலாறு மட்டும் ரிக்வேதத்தில் உள்ளது. புரூரவஸ் என்ற பேரரசன் ஊர்வசி எனும் அப்ஸரஸைக் காதலிக்கிறான். பல நிபந்தனைகளுடன் ஊர்வசி அவனுடைய காதலை ஏற்கச் சம்மதிக்கிறாள். புரூரவஸ் நான்கு ஆண்டுகள் ஊர்வசியுடன் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கிறான். ஊர்வசி தங்களை விட்டு, ஒரு மானுடனுடன் வாழ்வதைப் பொறாத கந்தர்வர்கள், தந்திரமாக, புரூரவஸ் ஒரு நிபந்தனையை மீறும்படி செய்கிறார்கள். அந்த நொடியில், ஊர்வசி மறைகிறாள். பிரிவாற்றாமையைத் தாங்க முடியாமல் புரூரவஸ் எல்லா இடங்களிலும் சுற்றுகிறான். கடைசியில் ஊர்வசியும் மற்றும் சில அப்ஸரஸ் பெண்களும், நீர்ப்பறவைகளாக மாறி, ஒரு தாமரைத் தடாகத்தில் நீந்தி விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவன் அவளைத் திரும்பத் தன்னுடன் வரும்படி மன்றாடிக் கேட்கிறான். அவள் மறுக்கிறாள். திரும்பவும் மிகவும் வற்புறுத்தலுக்குப் பிறகு, ஊர்வசி ஓராண்டு கழிந்தபின், அவனுடன் ஓரிரவு கழிக்கச் சம்மதிக்கிறாள். அந்த ஓரிரவுக்குப் பிறகு, கந்தர்வர்கள் வந்து புரூரவஸ்ஸையும் ஒரு கந்தர்வனாக்கி ஊர்வசியை அழைத்துச் செல்லுகிறார்கள். இக் கதையில் புரூரவஸ்ஸுக்

கும் ஊர்வசிக்கு மிடையே நடந்த உரையாடல் மட்டும் ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் 95வது ஸூக்தமாக உள்ளது. கதையின் விரிவாக்கத்தைச் சதபதப் பிராம்மணத்தில் காணலாம். இந்தக் கதையைச் சிறந்த கலை அழகுடன் காளிதாசன் 'விக்ரமோர் வசீயம்' என்ற வடமொழி நாடகமாகப் படைத்துத்தந்தான்.

கந்தர்வர்கள் என்பது சற்று தெய்வாம்சம் உள்ள ஆண்களுடைய குழுவாகும். அவர்கள் காற்று மண்டலத்தின் உயர்ந்த பகுதியிலோ அல்லது விண்ணிலோ இருக்கிறார்கள். ரிக் வேதகாலத்தில் அவர்களுடைய முக்கியக் கடமை ஸோமனைக் காப்பதாகும். தெய்வங்கள் கூட ஸோமனைக் காக்கும் கந்தர்வனுடைய அனுமதியின் பேரில் தான் ஸோம ரசத்தைப் பருக முடியும். விச்வாவசு என்ற கந்தர்வனின் பெயர் ஸோமனுடன் இணைக்கப்பட்டுச் சில வேத நூல்களில் காணப்படுகிறது. கந்தர்வர்கள் பரந்த வெளியை அளக்கிறார்கள்.

கந்தர்வர்கள் தண்ணீருடன் தொடர்பு கொண்டுள்ள தாக வேதம் பேசுகிறது. கந்தர்வனும் அப்ஸரஸும் தண்ணீரில் இருப்பதாக அதர்வதேம் கூறுகிறது.

ரிக் வேதத்தில் திருமணச் சடங்கை விவரிக்கும் ஸூக்தத்தில் ஸூரியா என்னும் ஸூரியனின் மகள்தான் மணமகளாக இருக்கிறாள். முதலில் ஸோமன் அவளை மணந்ததாகவும், பிறகு ஸோமன் அவளைக் கந்தர்வனுக்குக் கொடுத்ததாகவும், பிறகு கந்தர்வன் அவளை அக்கினிக்கும் கொடுத்ததாகவும், மூன்றாவது கணவனான அக்கினி கடைசியில் அவளைச் சடங்கில் மணமகனாக இருப்பவனுக்குக் கொடுத்ததாகவும், ரிக்குகள் பேசுகின்றன. (ரி.வே. X. 85. 40.41) இதில் கூறப்பட்ட முதல் மூன்று கணவன்களும் உலக ரீதியில் மணமகளுடைய புருஷர்களல்ல, திருமணத்திற்கு முன், சிறு பெண்ணான அவளுடைய கற்பைக்காக்க நியமிக்கப்பட்ட தெய்வங்களாகும்.

இதே ஸூக்தத்தில் இன்னுமொரு ரிக் விசுவாசஸு என்ற கந்தர்வனிடம் கூறுகிறது: 'இங்கிருந்து எழுந்துவிடு, இந்தப் பெண்ணிற்கு ஒரு கணவன் கிடைத்து விட்டான். ஓ விசுவாவஸுவே, உன்னை நான் துதிகளாலும் காணிக்கை களாலும் புகழ்கிறேன். வேறு ஒரு அழகான பெண்ணை அவளுடைய தகப்பன் வீட்டில் தேடிப்பிடித்து, அவளைக் காக்கும் பழமையான வேலையில் ஈடுபடுவாயாக.' (ரி.வே. X. 85.21).

புதுமணத் தம்பதிகளுக்கு உரிய காலத்தில் மக்கட் பேறு உண்டாகக் கந்தர்வனையும் அப்ஸரஸையும் வேண்டு கிறார்கள்.

ராமாயணம் முதலிய பிற்கால நூல்களில், கந்தர்வர்கள் சிறந்த பாடகர்கள் என்பதைக் காண்கிறோம். ஆனால் வேத நூல்களில் இதைப்பற்றிய தெளிவான குறிப்புகளைக் காண வில்லை.

கந்தர்வன் நல்வாசனையுள்ள ஆடைகளை உடுத்தியிருந் தாக ஒரு ரிக் கூறுகிறது. (ரி.வே. X. 123.7) இதிலிருந்துதான் அவனுக்குக் கந்தர்வன் என்ற பெயர் உண்டாகியிருக்கலாம். (வட மொழியில் 'கந்தம்' என்ற சொல் வாசனையைக் குறிக்கும்.)

வாஸ்தோஷ்பதியை வீட்டைக்காக்கும் தேவதையாக மக்கள் வழிபடுகிறார்கள். அவனுக்கென்று தனியாக ஒரே ஒரு ஸூக்தம் உள்ளது. அதில் மக்கள் அவனை வேண்டுகிறார்கள்: 'நோய்கள் வராமல் தடுத்து, நாங்கள் மகிழ்ச்சியுடன் வீட்டிற்குள் நுழைவதற்கு அருள் புரிவாயாக. நாங்கள் கேட்பதையெல்லாம் கொடுத்து, நான்கு கால்களுள்ள பிராணிகளையும் இரண்டுகாலுள்ள மனிதர்களையும் செழுமையுடன் வளர அருள்புரிவாயாக. ஓ வீட்டைக்காப்போனே! எங்கள் வளர்ச்சிக்கு அருள் புரி; எங்களுடைய ஆடுமாடுகளையும், குதிரைகளையும்

அதிகமாக்குவாயாக. உன் நட்புடன் நாங்கள் எப்பொழுதும் இளமையுடனிருக்க அருள் செய்; ஒரு தகப்பன் மகன்களிடம் மகிழ்ந்து இருக்குமாப் போல, நீ எங்களிடம் மகிழ்ந்திரு, நன்மை பயக்கும் உன் நட்பால், நாங்கள் வெற்றிவீரர்களாகத் திகழ்வோமாக! ஓய்விலும், செயல்களிலும் எங்களுடைய க்ஷேமத்தைக் காப்பாயாக; உன் அருளாசியை வழங்கி ஓ தெய்வமே, எங்களை எப்பொழுதும் காப்பாற்று.' (ரி.வே.VIII. 54. 1.3).

வாஸ்தோஷ்பதி நோய்களை அழிக்கிறான்; அவன் ஒரு உறுதியானத் தூணாக நிற்கிறான்; ஸோமரசத்தை வழங்குபவர்களை அவன் ஒரு கேடயம போலப் பாதுகாக்கிறான்.

வடமொழியில் 'வாஸ்து' என்ற சொல்லிற்கு 'வீடு அல்லது வீட்டு மனை' என்று பொருளாகும். ஆகையால் வாஸ்தோஷ்பதி என்பது வீட்டைக் காக்கும் தேவதையாகும்.

க்ஷேத்ரஸ்ய பதி வயலுக்குத் தேவதையாக விளங்குகிறான். விவசாயத் தொடர்பான பொருள்களைத் துதிக்கும் ஒரு ரிக்வேத ஸூக்தத்தில் முதல் மூன்று ரிக்குகளும் இவனை வழிபடுகின்றன: 'ஒரு நண்பனிடமிருந்து அடைவது போல, நாங்கள் இந்த வயலின் தலைவனிடமிருந்து, எங்கள் ஆடு, மாடு, குதிரைகளுக்குத் தேவையான புஷ்டி தரும் உணவை அடைகிறோம். இதில் அவன் எங்களுக்கு நன்மை பயக்கட்டும். பசு பாலை ஈவது போல, வயலின் தலைவனே, நீயும் இனிமையான உணவை எங்களுக்குத்தங்கு தடை இல்லாமல் அளி. சுத்தமாக உருக்கிய நெய்யைப் போல, இனிமையான உணவை எல்லாத் தெய்வங்களும் எங்களுக்கு அருளட்டும். செடி கொடிகளும், விண்ணும், தண்ணீரும், காற்று மண்டலத்தின் நடுப்பாகமும், எங்களுக்கு இனிமை பயப்பனவாக இருக்கட்டும். வயலின் தலைவன் எங்களுக்கு இனியதையே செய்யட்டும், நாங்களும்,

நோயில்லாமல், உன்னையே பின்பற்ற அருள் புரிவாயாக.' (ரி.வே. IV. 57.1.3)

அவனிடம் செழுமையை வேண்டுகிறார்கள். அவன் மக்களுக்கு அருகில் வசிப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. ஒரு வயலை உழுவதற்குமுன் மக்கள் அவனை வழிபடுகிறார்கள் என்று ஆபஸ்தம்ப கிருஹ்ய ஸூத்திரம் கூறுகிறது.

* * *

## 5.7 யமன்

யமன் விவஸ்வானுக்கும் அவன் மனைவி சரண்யூவிற்கும் பிறந்தவன். அவன் தங்கை யமியும் அவனும் இரட்டையர்களாகப் பிறந்தார்கள். அசுவினி தேவதைகள் அவனுடைய தம்பிகள் ஆவார்கள். இந்த விவரங்களை விவஸ்வானுடைய வரலாற்றில் காணலாம் (அத்தியாயம் 2.8). யமன் இறந்தவர்களுடைய உலகிற்கு அதிபதி.

இரட்டையர்களான யமனும் யமியும் மனிதகுலத்தின் முதல் பிறப்புக்களாக இருந்தார்கள். யமி யமனிடம் பாலுறவு கொள்ள விரும்பி அவனை அணுகுகிறாள். யமன் தர்ம நியாயங்களை எடுத்துரைத்து, அவள் கேட்பது தவறு என்று விளக்குகிறான். இந்த உரையாடல் ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் பத்தாது ஸூக்தமாக உள்ளது.

மற்ற தெய்வங்களுடன் யமன் குலவுகிறான். முக்கியமாக ரிக்வேத ரிஷிகள் அவனை வருணனுடனும் பிருஹஸ்பதியுடனும் சேர்த்துத் தங்கள் ரிக்குகளில் புகழ்கிறார்கள். அக்கினி அவனுடைய நெருங்கிய நண்பன். இறந்தவர்களில் உடம்பை எரித்து அவர்களின் ஆன்மாவை அக்கினி யமனுடைய உலகிற்கு எடுத்துச் செல்லுவதால், அவர்களிருவருக்கும் நெருங்கிய உறவு உள்ளது. அக்கினி,

வேலைப் பளுவால் தளர்ந்து போய், கடலுக்கடியில் ஒளிந்துகொண்டான். தெய்வங்கள் அவனைத் தேடினார்கள். அப்பொழுது யமன்தான் அக்கினியைக் கண்டுபிடித்தான். இந்த விஷயத்தை அக்கினியின் வரலாற்றில் காணலாம். (அத்தியாயம் *4.3*)

சில ரிக்குகளில் உள்ள தெய்வங்கள் பட்டியலில் யமனின் பெயரையும் காணலாம். ரிக்வேத ரிஷிகள் அவனை ஒரு அரசன் என்று குறிப்பிடுகிறார்கள். இறந்தவர்களின் உலகை அவன் ஆள்வதால் அரசனாகிறான். இறந்தவர்கள் மேலுலகிற்குச் செல்லும் பொழுது, அவர்கள் இரண்டு அரசர்களைப் பார்க்கிறார்கள். ஒருவன் வருணன், மற்றவன் யமன் என்று ஒரு ரிக் கூறுகிறது.

யமனைப் புகழ்ந்து ஒரு ஸூக்தம் பேசுகிறது: 'நல்ல இலைகளை ஆடையாக உடுத்திய ஒரு மரத்தின் மேல் யமன் மற்ற தெய்வங்களுடன் அமர்ந்து ஸோமரசத்தைக் குடிக்கிறான்; வீட்டின் தலைவனான அவன் நம்முடைய பழைய முன்னோர்களை எல்லாம், ஒரு தகப்பனைப் போல, மிகுந்த கனிவுடன் பேணுகிறான்.' (ரி.வே. X. *135.1*). இன்னுமொரு ரிக்: 'இதுதான் யமனுடைய இருப்பிடம்; இதுதான் தெய்வங்களின் வீடு. இங்கு பாடகர்கள் அவனுக்காக புல்லாங்குழலை ஊதிப் பாசுரங்களால் அவனைப் புகழ்கிறார்கள்.' (ரி.வே. X. *135.7*)

'தெய்வங்களுக்காக, யமன் சாவை விரும்பி ஏற்றுக் கொண்டான்; மனிதர்களுக்காக அவன் சாகாமையை விரும்ப வில்லை; தனக்குப் பிரியமான உடம்பை அவன் அர்ப்பணிக்கிறான்,' என்று கூறுகிறது ஒரு ரிக் (ரி.வே. X. *13.4*) ஆக, இறந்தவர்களில் அவன் முதலாவதாகிறான். இறந்த பின் அவன் உயரமான இடங்களில் தேடி மற்றவர்கள் வருவதற்குப் பாதையைக் காண்பிப்பதாக ஒரு ரிக் கூறுகிறது. இறந்தவர்களில் முதலாவதான அவன் இறந்தவர்களின் உலகிற்கு அரசனாக இருப்பது பொருத்தமே.

'யம்' என்ற வடமொழி வினைச் சொல்லிற்கு 'தடுத்தல்', நிறுத்துதல்' என்று பொருளாகும். இந்த வினைச் சொல்லிருந்து யமன் என்ற பெயர் உருவானதாக வேதத்தில் ஆதாரம் ஏதுவுமில்லை. ஆனால் 'யம:' என்ற வட மொழிச் சொல்லிற்கு 'இரட்டையர்களில் ஒருவன்' என்று பொருளை ஆப்தேயின் அகராதி கூறுகிறது. வேதகாலத்து இரட்டையர்களில் முதல்வனான யமனுக்கு அப்பெயர் வந்தது பொருத்தமே.

ஆந்தையும், புறாவும் யமனுடைய தூதர்கள் என்று ரிக் வேதம் கூறுகிறது. இப்பறவைகள் வீட்டிற்கு வந்தால் அது அந்த வீட்டில் வரப்போகும் சாவைக் குறிக்கலாம் என்ற கருத்து வேதகாலத்தில் இருந்தது. இங்கிலாந்திலும் சில இடங்களில் (வடக்கு லின்கன்ஷயர்) இதே கருத்து உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

ஆனால் ரிக் வேதத்தில் யமனுடைய முக்கிய தூதர்களாக இருப்பது இருநாய்கள். அவை, இந்திரனுடைய நாயான சரமாவின் குட்டிகள்.

ரிக் வேதத்தில் ஒரு ஸூக்தத்தில் ரிஷி இந்த நாய்க்குட்டிகளைப் பற்றிக் கூறுகிறார். 'சரமாவின் இரு நாய்க்குட்டிகள் கரும் பழுப்பு நிறமாகவும் நான்கு கண்களுடனும் உள்ளன. இறந்தவர்கள் உலகிற்குப் போகும் பாதையை அவைகள் காத்து வருகின்றன. இந்த நாய்க்குட்டிகள் மக்களிடையே சுற்றி வருகின்றன; அவைகள் மக்களுக்கு நல் வாழ்வை அளிக்கட்டும். இறந்தவர்களின் ஆன்மாவே! நீ வேகமாக ஓடி இந்த நாய்க்குட்டிகளைத் தாண்டிப் போய் யமனிடம் சேர்ந்துவிடு; அங்கே நம் கனிவான முன்னோர்கள் யமனுடன் சேர்ந்து மகிழ்ச்சியாக வாழ்கிறார்கள்! (ரி.வே.X. 14. 10.12)

இந்த நாய்க்குட்டிகளைப் பற்றிய இன்னும் சில ரிக்குகளைப் பார்க்கலாம்: 'ஓ சரமாவின் பழுப்பு நிறமான

பிரகாசமுள்ள மகனே! உன்னுடைய பற்களை நீ காட்டும் பொழுதும், நீ கடிக்கும் பொழுதும் அவைகள் நீண்ட கத்தியின் முனை போல ஒளி வீசுகின்றன; நீ உறங்கப் போவாயாக. சரமாவின் மகனே; நீ திரும்பிப் போய்த் திருடர்கள் முன் குரைப்பாயாக! இந்திரனைப் புகழ்ந்து பாடும் எங்களிடம் ஏன் குரைக்கிறாய்? எங்களை ஏன் பயமுறுத்த முயலுகிறாய்? உறங்கப் போ! அந்தக் காட்டுப் பன்றியிடம் நீ விழிப்புடன் இரு; அந்தத் காட்டுப் பன்றியும் உன்னைக் கண்டு அஞ்சட்டும். இந்திரனைப் புகழ்ந்து பாடும் எங்களிடம் ஏன் குரைக்கிறாய்? எங்களை ஏன் பயமுறுத்த முயலுகிறாய்? உறங்கப் போ! (ரி.வே. VIII. 55. 2.4)

ஆக, இந்த இரண்டு நாய்க்குட்டிகளும், யமனுடைய தூதர்களாகப் பூமியில் மக்களிடையே சஞ்சரித்து, இறப்பவர் களின் ஆன்மா யமனிடம் போக உதவுகின்றன; போகும் பாதையையும் காத்து எவரும் எதுவும் ஆன்மாக்களைத் தொந்திரவு செய்யாமலிருக்க உதவுகின்றன.

இப்படியாக யமன் ஒரு அரசனாக விண்ணிலுள்ள இறந்தவர்களின் உலகிற்கு அதிபனாக, தெய்வங்களில் ஒருவனாக விளங்குகிறான்.

* * *

## 5.8 ரிபுக்கள்

அங்கிரஸ் வம்சத்தைச் சேர்ந்த ஸுதன்வன் என்பவருக்கு மூன்று மகன்கள் இருந்தார்கள், அவர்களுடைய பெயர்கள் முறையே ரிபு, வாஜன் மற்றும் விப்வன் ஆகும். ஆனால் பெரும்பாலும் அவர்கள் மூவரையும் ஒருங்கிணைத்து ரிபுக்கள் என்றே வேதம் குறிப்பிடுகிறது. அவர்கள் இடைவிடாமல் மிகுந்த சிரத்தையுடனும், கவனத்துடனும் நல்ல காரியங்களையே செய்து வந்தார்கள்;

தவிர, அவர்களுடைய கைவேலைத்திறன் மிகுதியாக இருந்தது. ஆகையால், அவர்கள் தெய்வத்தன்மை அடைந்தார்கள்; துதிப்பதற்கும் வணங்குவதற்கும் உரியவர் களானார்கள். அவர்கள் ஸூரியக் கிரணங்களுடன் ஒருங்கிணைத்து, தெளிவற்ற ஒரு கருத்து நிலவுகிறது. வேதகலத் தொடக்கத்திலேயே, மானிடர்களும் விடாமுயற்சியால் தெய்வத்தன்மையை அடையமுடியும் என்ற கொள்கைக்கு ரிபுக்கள் நல்ல சான்றாவார்.

ரிக் வேதத்தில் பதினொரு ஸூக்தங்கள் ரிபுக்களைத் துதிக்கின்றன. சில ரிக்குகளில், வேள்விபுரிபவர்கள் அவர்களை வேள்விக்கு வரும்படி அழைத்து, ஸோம ரசத்தைக் குடிக்கும்படி வேண்டுகிறார்கள் ரிபுக்கள் இந்திரனுடன் நெருங்கிய தொடர்பு உள்ளவர்கள்.

ஸுதன்வனுடைய மகன்கள் ஒவ்வொரு தேவைக்கும் உகந்த திட்டங்களை மாயமாகத் தயாரித்து, வேள்விகளில் தங்கள் பங்கைப் பெற்றார்கள் என்று ஒரு ரிக்கூறுகிறது. (III. 60.1)

இன்னுமொரு ரிக்: "உங்களுடைய கைத்திறனால் நீங்கள் தெய்வத்தன்மைக்கு உயர்த்தப்பட்டீர்கள் உங்களை, கழுகு களைப் போல, விண்ணில் பதித்திருக்கிறார்கள்." (IV. 35.8).

காற்றுமண்டலத்திலிருந்து மனிதர்களான அவர்கள், தங்களுடைய சக்தியால், விண்ணிற்கு ஏறினார்கள். நுட்பமான கை வேலைத்திறனால், அவர்கள் சாகாமையை அடைந்து, தெய்வங்களுடன் சேர்ந்து, அவர்களுடைய நட்பையும் பெற்றார்கள். அவர்கள் பெரும் தவமிருந்து, தெய்வங்களுடன் ஒன்றாகி, வேள்விகளில் ஸோரசத்தைப் பெறும் உரிமையைப் பெற்றார்கள் என்று ஐதரேயப் பிராம்மணம் கூறுகிறது. வேள்விகளில் மாலையில் தயாரிக்கப்படும் ஸோமரசத்தை, ரிபுக்கள், தங்களுடைய நுட்பமான கைவேலைத் திறனால், பெறுகிறார்கள்.

மற்ற தெய்வங்களைப் போலவே ரிபுக்களையும், வேள்வி புரியும் மக்கள் வேண்டிய வரன்களைக் கொடுக்கும் படி கேட்கிறார்கள் செல்வம், செழிப்பு, ஆடுமாடுகள், குதிரைகள், வீரப் புதல்வர்கள் ஆகிய வரன்களை அவர்கள் ரிபுக்களிடம் வேண்டுகிறார்கள். மற்றும், தேக வலிமை, சக்தி, கை வேலைத் திறன் ஆகியவற்றையும் வேண்டுகிறார்கள். யாருக்கு ரிபுக்கள் உதவுகிறார்களோ அவர்களைப் போரில் யாராலும் வெல்ல முடியாது.

துவஷ்டாவைப் போலவே ரிபுக்களையும் அவர்களுடைய கைவேலைத் திறனுக்காகப் புகழ்கிறார்கள். அவர்கள் குதிரையில்லாமலும், கடிவாளமில்லாமலும், மூன்று சக்கரங்கள் கொண்டதுமான ஒரு தேரை நிர்மாணித்தார்கள்; அது காற்று மண்டலத்திலும், மற்ற எல்லா இடங்களிலும் சஞ்சரிக்க வல்லது. அசுவினி தேவதைகளுக்கும், இந்திரனுக்கும் அவர்கள் தேர்களைச் செய்து கொடுத்தார்கள். ரிபுக்கள் அமிர்தத்தைச் சுரக்கும் ஒரு பசுமாட்டையும் படைத்ததாக வேதம் கூறுகிறது.

ரிபுக்களுடைய வயதான பெற்றோர்கள், அழிந்து போய்க் கொண்டிருக்கும் ஒரு மரத்தூணைப் போல, மெலிந்து இருந்த பொழுது, ரிபுக்கள் அவர்களுக்கு மீண்டும் இளமையைத் தருகிறார்கள். பெற்றோர்கள் என்பது விண்ணையும் மண்ணையும் குறிக்கின்றன. மீண்டும் இளமையைத் தருவது வசந்த காலத்தைக் குறிப்பதாகும்.

தெய்வங்கள் வேள்விகளில் ஸோம ரசத்தைக் குடிப்பதற்காக, துவஷ்டா ஒரு மரக்குவளையைச் செய்தான். அது மிகவும் நேர்த்தியாக இருந்தபோதிலும், ஒரே ஒரு குவளை மட்டும் போதாது என்று தெய்வங்கள் கருதினார்கள். ஆகையால் அவர்கள் அக்கினியை ரிபுக்களிடம் தூதனுப்பி, அதை நான்காகச் செய்யும்படி உத்திரவிட்டார்கள். அக்கினி ரிபுக்களிடம் வந்தபொழுது, அவர்கள் கேட்டார்கள்.

'இளையவனும், சிறந்தவனுமான நீ எதற்காக எங்களிடம் வந்திருக்கிறாய்! நாங்கள் அப்படி என்ன சொல்லி விட்டோம்! உயர்ந்தவரான துவஷ்டா செய்த குவளையை நாங்கள் குறை கூறவில்லை. அது செய்யப்பட்ட மரத்தை மட்டும் புகழ்ந்தோம்.' அக்கினி விடை பகர்ந்தான். 'அந்த ஒரு குவளையை நான்காகச் செய்யும் படி தெய்வங்கள் உங்களுக்குப் பணித்ததைக் கூறவே தான் இங்கு வந்துள்ளேன்.

இதை நீங்கள் செவ்வனே செய்து முடிந்தால், ஓ சுதன்வானின் மைந்தர்களே, நீங்களும் தெய்வங்களுடன் சேர்ந்து வேள்விகளில் பங்கு பெறலாம். 'ரிபுக்கள் அவ்வாறே செய்து, அமரத்துவம் எய்தி, வேள்விகளில் பங்கு ஏற்கும் உரிமையைப் பெற்றார்கள் என்று கதை போகிறது. (ரி.வே. I. *161. 1.2)* இதைப் பற்றி ரிக்வேதம் பல இடங்களில் பேசுகிறது.

மேலும் கதை தொடர்கிறது. பளபளக்கும் நான்கு குவளைகளைக் கண்ட துவஷ்டாவிற்குப் பொறாமை மேலிட்டது. (ரி.வே.IV. *33.6)*. அவன் தெய்வங்களின் மனைவிகளின் நடுவில் ஒளிந்து கொண்டான். பிறகு வெளிவந்து அவன் கூவினான். 'தெய்வங்களின் குடிக்கும் குவளையான இதை அவ மதித்த அந்த மனிதர்களை நாம் கொல்ல வேண்டும்' என்று (ரி.வே.I. *161. 4.5)*. பிறகு என்ன நடந்தது என்று வேதம் தெளிவுபடுத்தவில்லை. துவஷ்டாவைச் சமாதானம் செய்து, ரிபுக்களை தெய்வத் தன்மைக்கு உயர்த்தினார்கள் என்று ஊகிக்கலாம். ஆராய்ச்சியாளர்கள் இதன் உட்பொருளைக் கூறுகிறார்கள். துவஷ்டா செய்த குவளை ஒரு முழு ஆண்டைக் குறிக்கிறது; ரிபுக்கள் அதை வசந்த காலம், கோடைகாலம், கார் காலம், குளிர் காலம் என்று நான்கு பருவங்களாக வகுத்தார்கள்.

மற்றுமோர் ரிக்கில் ரிபுக்கள், ஒரு கோலை எடுத்து, நிலத்தை அளப்பது போல, வேள்விக்கான ஒரே குவளையின் அகல வாயை அளந்தார்கள் என்று வேதம் கூறுகிறது.

ரிபுக்களின் உயர்ந்த வேலைத்திறனைப் பற்றிக் கூறுகையில், அவர்கள் தோலிலிருந்து பசுமாட்டைச் செய்ததாகவும், வேள்வியையும், துதியையும் உருவாக்கிய தாகவும், வேதம் சொல்லுகிறது.

ரிபுக்களைப் பற்றிய மற்றுமோர் கதையை வேதம் கூறுகிறது. காற்றால் தூண்டப்பட்டு வெகு வேகமாகச் சென்று ரிபுக்கள் விண்ணை முழுவதும் சுற்றினார்கள். பலகாலம் விண்ணில் அலைந்து திரிந்து கடைசியில் ஸவிதாவின் வீட்டை அடைந்தார்கள். ஸவிதாவின் அருளினால் ரிபுக்கள் சாகமையைப் பெற்றார்கள். பன்னிரண்டு நாட்கள் அவர்கள் ஸவிதாவின் அதிதிகளாக அவனுடைய உபசாரத்தில் மகிழ்ந்து இருந்தார்கள்; நிலங்களில் பயிர்களைச் செழுமையாக வளரும்படி செய்தார்கள்; ஆறுகளைக் கொணர்ந்தார்கள்; வரண்ட நிலத்தில் அவர்கள் செடிகொடிகளைப் பரப்பினார்கள்; பள்ளமான இடங்களில் அவர்கள் நீரை நிரப்பினார்கள். அவர்களுடைய திறமையால், அவர்கள் மனிதர்களுக்காக உயரமான இடங்களில் புற்களை வளரும்படியும் பள்ளத்தாக்கில் நீர் வரும்படியும் செய்தார்கள். (ரி.வே.I. 110. 1.3; I. 161.11; IV. 33. 1.7)

* * *

## அத்தியாயம் 6

# புருஷ ஸூக்தம்

உலகப் படைப்பைக் கூறுவதாக அமைந்துள்ள இந்த ஸூக்தம் எல்லா வேதங்களிலும் உள்ளது. ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் பதினாறு ரிக்குகள் கொண்ட தொண்ணூறாவது ஸூக்தமாக இது அமைந்துள்ளது. சுக்ல யஜுர் வேதத்தில் வாஜஸநேய ஸம்ஹிதையிலும் *(31–1–16)* கிருஷ்ண யஜுர் வேத தைத்திரீய ஆரண்யகத்திலும் *(3–12–13)*, ஸாம வேதத்திலும் *(4–3)* அதர்வ வேதத்திலும் *(19–6–3)* சிற்சில மாறுதல்களுடன் புருஷஸூக்தம் உள்ளது.

இந்த ஸூக்தம் தெளிவாகப் புரிந்து கொள்ளும் படியாக அமையவில்லை. காஞ்சி காமகோடி பரமாச்சாரி யார் கூறுகிறார். "புருஷ ஸூக்தமானது ரொம்பவும் symbolical ஆகவும், allegorical ஆகவும் (உருவக அணி கொண்டதாகவும், ஆழ்ந்த உள்ளுறைப் பொருளைச் சம்பவம் போல் சொல்வதாகவும்) இருக்கிறது. ...பரம புருஷனை யக்ஞப்பசுவாகப் பலிகொடுப்பது என்றால் என்ன? அதை நேர் அர்த்தம் பண்ணிக் கொண்டால் சரியாகாது அல்லவா? ...இதெல்லாம் மந்திர அர்த்தத்தை தியானம் பண்ணி, அதிலேயே ஊறியவர்களுக்குத் தான் அனுபவ ரூபத்தில் அர்த்தமாகும். நாம் வார்த்தைகளின் அர்த்தத்தை மட்டும் பார்த்துப் புரிந்து கொள்ள முடியாது." *

---

* "தெய்வத்தின் குரல்" இரண்டாம் பகுதி வானதி பதிப்பகம் — பக்கம் *224.*

இப்படியிருந்த போதிலும் ஸாயனரின் உரையையும் மற்ற விளக்கங்களையும் வைத்துக்கொண்டு இதை ஓரளவு புரிந்து கொள்ள முயலுவோம். இந்த முயற்சியில் ரிக்வேதத்திலுள்ள ஸூக்தத்தை எடுத்துக் கொள்வோம்.

வடமொழியில் புருஷன் என்பதை 'புரெள சேதே' என்று பிரிப்பார்கள். உடலில் உறைபவன் என்று இதற்குப் பொருளாகும். நம் தேகத்துக்குள் இருக்கும் ஜீவாத்மாவை இது குறிக்கிறது. ஜீவாத்மா—பரமாத்மா அபேதத்தால், (வேற்றுமை இல்லாததால்), புருஷன் என்ற சொல் ஒன்றேயான மெய்ப் பொருளான பரமபுருஷனையும் குறிக்கும்.

ஆயிரக் கணக்கான, அதாவது எண்ணற்ற தலைகளும், கண்களும், கால்களும் உள்ளவனாகப் பரமபுருஷன் புருஷ ஸூக்தத்தில் காக்ஷியளிக்கிறான். உலகிலுள்ள ஸகல ஜீவராசிகளுடைய தலைகளும், கண்களும், கால்களும் அவனுடையவே. அவன் விண்ணையும் மண்ணையும் வியாபித்து எங்கும் நிறைந்துள்ளான். பத்து விரல்களால் எண்ணிக் கணக்கிடும் கணித இயல் நியதியில் அவனுடைய பெருமையை அளவிட முடியாது. இதுவரை இருந்ததும், இப்போதிருப்பதும், இனி வரப் போவதும், இவைகட்கு அப்பால் உள்ளதும் எல்லாம் பரம புருஷனே. அவனிட மிருந்தே அனைத்தும் தோன்றுகின்றன; அவனிடமே நிலை பெறுகின்றன; அவனிடமே மீண்டும் லயிக்கின்றன. அவனே அனைத்திற்கும் ஆத்மா. அவனுடைய பெருமையின் கால் பகுதியே, இருந்ததும் இருப்பதும், இருக்கப் போவதுமான இவ்வுலகனைத்துமாக உள்ளது; முக்கால் பங்கு, காணப்படாமல் என்றும் அழியாமல், விண்ணில் மறைந் துள்ளது.

பரம புருஷனிடமிருந்து 'விராட்' உண்டாயிற்று. எதில் உயிருள்ள, உயிரற்ற எல்லா வஸ்துக்களும் விதவிதமாகப்

அதுவே விராட் என்ற பிரம்மாண்டம் என
பிரகாசிக்கிறதோ விளக்குகிறார். மஹத் முதலிய ரூபங்களில் வித
ஸாயனார் பிரகாசிப்பதால் பிரகிருதியே விராட்
விதமாகப் என்று ரங்கநாத முனிவர் என்கிற ஸ்ரீ
எனப்படுகிறது பரமாசாரியார் தன்னுடைய உரையில் கூறுகிறார்.
வைஷ்ண

பரம புருஷன் தன்னுடைய மாயையாலேயே பெரிய உடம்பைப் படைத்து அதில் உயிருள்ளவராக நுழைந்து விராட்டிற்கு அபிமானமான படைப்போனாகத் தோன்றியவர் என்று ஸாயனார் மேலும் விளக்குகிறார்.

படைப்போன் தன்னுடைய தொழிலாகிய படைப்பைத் தொடங்க வேண்டும். அதற்குமுன் பரம புருஷனை வழிபட விரும்பினார். வழிபாடு என்றால் வேள்விதான். படைப்புக்கு முன்னால் ஒன்றுமே இல்லாமல் இருந்த பொழுது எந்தத்திர வியங்களை (பொருள்களை) வைத்துக் கொண்டு வேள்வி புரிவது? முதன் முதலில் அக்கினியே இல்லையே! பிறகு வேள்விக்கு வேண்டிய நெய், ஹவிஸ் (அன்னம்), ஸமித் இவையும் இல்லையே? எதை எதில் போட்டு (ஆஹுதி செய்து) வேள்வியைப் புரிவது? இருப்பதெல்லாம் ஆறு ருதுக்கள். (பருவங்கள்) தான்.

குளிர் காலத்தில் பசும் புற்கள் மேல் பனி பெய்து, புல் லெல்லாம் கருகிப் போய்விடுகின்றன. பிறகு இள வேனிற் பருவத்தில் புல் வளரத் தொடங்குகிறது. எங்கு பார்த்தாலும் பசும் புல் செழுமையாக வளர்ந்து காட்சி அளிக்கிறது. பின்னால் பிரம்மா சிருஷ்டித் தொழிலைச் செய்து முடித்த பின் பசுக்கள் இந்தப் பசும் புற்றரைகளில் மேய்ந்து, நிறையப் பாலைக் கொடுக்கின்றன. இதிலிருந்து வெண்ணையும், நெய்யும் உண்டாகின்றன. இந்த நெய்யைப் பிற்கால மக்கள் தாங்கள் புரியும் வேள்விகளுக்கு உபயோகிக்கிறார்கள். ஆகையால் ஒன்றும் இல்லாத பொழுது படைப்போன் புரியும் வேள்விக்கு இளவேனிற்காலத்தையே நெய்யாக உபயோகித்தார். (பத்ம புராணம்).

வெயில் காலத்தில் மகரிஷிகள் பலாசச் சமித்தைச் சேகரிக்கிறார்கள் அவர்கள் தோஷத்தைப் போக்க, ஒரு ஆண்டு நீண்ட ஸத்ரயாகத்தைச் செய்கின்றனர். பலாச மரங்களே இல்லாத சமயத்தில் படைப்போன் தான் புரியும் வேள்விக்குக் கோடைகாலத்தையே ஸமித்தாக உபயோகித்தார். (பத்ம புராணம்)

கோடையின் வெப்பத்திற்கும் பிறகு நல்ல மழை பெய்து, பிற்காலத்தில் தாவரங்கள் செழிப்பாக வளர்ந்து எங்கும் பசுமை தாண்டவமாடும் சமயம் சிறந்த காலமாகும். பூமியில் சுபீக்ஷம் நிறைந்து பயிர்களும் செழிப்பாக வளர்ந்து தாவரங்கள் எல்லாம் பூத்துக் காய்த்துப் பழுத்துக் குலுங்கும் நேரம். மக்கள் நன்றாக உண்டு களிப்புறுகிறார்கள். இதற்கெல்லாம் முன்பு படைப்போன் செய்த வேள்வியில் இந்த சரத் காலத்தையே தன் வேள்வியில், ஹவிஸாக (அன்னமாக) உபயோகித்தது சாலப் பொருத்தமே.

படைப்போன், தன்னுடைய மனத்தாலேயே, தியானம் செய்து, வேள்வியைப் புரிந்தார். வேள்விக்கு இன்னும் சில அந்தணர்கள் (ரிக்விக்குகள்) வேண்டுமே, அதற்கு என்ன செய்வது? தனது இந்திரியங்களாகிய தேவர்களையே ரிக்விக்குகளாக வைத்துக் கொண்டு அந்த மானஸீக வேள்வியைப் புரிந்தார். இந்த வேள்விக்குப் பரமபுருஷனே அக்கினியாக விளங்கினார். படைப்போன், தன்னையே பூரண ஹுதியாக அர்ப்பணம் செய்து, இந்த மானஸீக வேள்வியை முடித்தார்.

இங்கு முக்கியமான ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். வேதம் முழுவதும் உரை எழுதிய ஸாயனாச்சாரியாரும், புருஷ ஸூக்தத்திற்கு மட்டுமே உரை எழுதிய பல பண்டிதர்களும் இந்த வேள்வி மனத்தளவில் செய்யப்பட்டது, மானசீக வேள்வி என்று கூறுகிறார்கள். ஆனால் வேதங்களிலுள்ள எந்த புருஷ ஸூக்த மந்திரத்

திலும், இதற்கு ஆதாரமாக, படைப்போன் செய்த வேள்வி மானசீக வேள்வி என்று கூற ஒரு சொற்றொடரும் இல்லை. வேள்விக்குப் பிறகு தான் அக்கினியே உண்டாயிற்று. (முகாதிந்த்ர: சாக்னிச்ச). அச்சமயம் அக்கினியே உலகில் இல்லை. ஆகையால் மானசீக வேள்விதான் நடந்தது என்று ஊகிக்கலாம். ஒரு வேளை, உண்மையிலேயே, கட்டப்பட்ட யக்ஞப் பசுவான படைப்போனை (அபத்னன் புருஷம் பசும்) வெட்டி, அதை ஏதே ஒரு விதமாகத் தேவர்கள் ஆஹுதி செய்தார்கள் என்று வைத்துக் கொண்டால், அது மகத்தான தியாகம் ஆகிறது. கிறிஸ்தவ மதத்தில் ஏசுகிறிஸ்து, மக்களின் நன்மைக்காக, தன்னையே சிலுவையில் மாய்த்துக் கொண்டதை ஒத்திருக்கிறது.

இந்த வேள்வி எப்படி வந்தது என்பதை சாகல்ய பிராம்மணம் கூறுகிறது. அதிகமாக விருத்தி அடைந்த தேகத்துடன் விராட் புருஷன் ஒன்றும் செய்யாமல் இருக்கவே, பரம புருஷன் அவரைப்பார்த்துக் கேட்டார்: "படைப்போனே, ஏன் செயலற்றிருக்கிறீர்?" படைப்போன் விடை பகர்ந்தார்: "அறியாமையால்" மீண்டும் பரம புருஷன் கூறினார்: "படைப்போனே! படைப்பின் பொருட்டு ஒரு வேள்வியைப் புரியும். அதனால் எல்லா உயிர்களையும் படைக்கும் திறமையைப் பெறுவீர். இந்த வேள்வியில் உமது இந்திரியத் தேவதைகளை ரிக் விக்குகளாகச் செய்து, உமது சரீரத்தை ஹவிஸாகச் செய்து என்னை ஹவிஸைப் புசிப்பவனாகத் தியானித்து, என்னிடம் மனதைவைத்து அக்கினி வடிவான என்னிடம் புகுவீராக. என்னுடைய அங்கஸ்பர்சம் ஏற்பட்டவுடனேயே, உலகத்தின் கோச வடிவான உமது சரீரம் பருத்துப் பிரம்மாண்டமாகும். அதிலிருந்து உண்டாகும் பிராணி வர்க்கங்களை முன் ஸர்க்கத்தில் போல, வெவ்வேறு உடல்களில் இருக்கச் செய்து, நீர் சிருஷ்டிகர்த்தா ஆவீர்."

வேள்வியின் முடிவில் படைப்போன் படைக்கும் தொழிலைத் தொடங்கினார். எல்லாவிதமான பிராணி

வர்க்கங்களையும், பறவைகளையும், மனிதர்களையும் படைத்தார். அவருடைய மனத்திலிருந்து சந்திரனும், கண்ணிலிருந்து ஸூரியனும், வாயிலிருந்து இந்திரனும், அக்கினியும், பிராணனிலிருந்து வாயுவும் உண்டாயின. அவருடைய தொப்புளிலிருந்து வானவெளியும், தலையிலிருந்து தேவலோகமும், கால்களிலிருந்து பூமியும், காதிலிருந்து திசைகளும் தோன்றின.

பிற்கால சிறந்த வேதாந்த நூலான பகவத் கீதை இந்த வேள்வியைப் பின் வருமாறு குறிப்பிடுகிறது:

ஸஹயக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா
புரோவாச ப்ரஜாபதி: |
அனேன ப்ரஸவிஷ்யத்வம்
ஏஷவோऽஸ்த்விஷ்டகாமதுக் ||

(பகவத் கீதை III. 10)

**பொருள் :**

சிருஷ்டித் துவக்கத்தில், பிரம்ம தேவன் யக்ஞத்தோடே பிரஜைகளை படைத்து. "இதனால் விருத்தி அடையுங்கள் இது உங்களுக்குக் காமதேனுவாகட்டும் என்றார்.

(சுவாமி சித்பவாநந்தர் உரை).

யாகத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளது சிருஷ்டி. யக்ஞயே காமதேனு என்று உருவகப்படுத்தி இயம்பப்படுகிறது. வாழ்க்கையை யக்ஞமாக நடாத்துபவனுக்கு ஆக்கமே அதிகரிக்கிறது.

யக்ஞம் சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும், முக்தி ஈறாக அனைத்தையும் ஈனும். இதை அறிபவரே சிருஷ்டியின் உட்கருத்தை உள்ளவாறு அறிபவர். இப்படியாக இந்தச் சுலோகத்தின் பொருளை சுவாமி சித்பவாநந்தர் விளக்குகிறார்.

சிருஷ்டிக்கு வேள்வி அடிப்படையாக விளங்குகிறது. வேள்விக்கு அடிப்படையாக உள்ளது தியாகமாகும். தியான யக்ஞத்தில் பிரம்மா தன்னையே பூரணா ஹுதியாகப் பரம புருஷனுக்கு அர்ப்பணம் செய்த தியாகமே. சிருஷ்டிக்குத் தூண்டுகோலாக விளங்கியது.

நம் மதத்தில் தியாகத்திற்கு மிகுந்த உயர்வான இடம் அளிக்கப்பட்டுள்ளது. ஈசாவாஸ்ய உபநிஷத்தின் முதல் சுலோகம் பின்வருமாறு உள்ளது:

ஈசாவாஸ்ய மிதம்ஸர்வம் யத்கிஞ்ச ஜத்யாம் ஜகத்
தேன த்யக்தேன புஞ்ஜீதா: மா கிருத: கஸ்யஸ்வித்தனம்

பொருள்:

"இவ்வுலகில் எல்லாப் பொருள்களும் தோன்றி மறைவாயுள்ளன; அவையெல்லாவற்றையும் இறைவன் வியாபித்திருக்கிறான். (ஒரு பொருளை மற்றவர்களுக்குக்) கொடுப்பதால் இன்பமுறுவாயாக. எவனுடைய பொருளுக்கும் பேராசைப்படாதே."

சிருஷ்டி யக்ஞத்தில் தியாகத்தின் உயர்வைப் பார்த்தோம். இதையே ஈசாவாஸ்யம் வேறு விதமாகக் கூறுகிறது. ஒரு பொருளை அடைவதால் நாம் இன்படைகிறோம். ஆனால் அதை மற்றவர்களுக்கு (அப்பொருள் மிக அவசியமாகத் தேவைப்படுபவர்களுக்குக்) கொடுத்து அவர்கள் பயனடைவதைப் பார்த்து எழும் மகிழ்ச்சி பன் மடங்கானது. கொடுப்பதிலேயே ஒரு தனி இன்பம் உளது. மனப்பக்குவம் அடைந்தவர்களுக்கு இது நன்கு புரியும்.

நம் மத நூல்களான வேதம், உபநிஷத், ராமாயணம், பாரதம், புராணம் முதலிய எல்லா நூல்களும் காணாமல் போய், ஈசாவால்ய உபநிஷத்தின முதல் சுலோகம் மட்டும் இருந்தால் கூட, அது ஹிந்து மதத்தின் உயர்வுக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் என்று காத்தி அடிகள் கூறியுள்ளார்.

மஹா நாராயண உபநிஷத் கூறுகிறது:

நகர்மணா ந ப்ரஜயா தனேன
தியாகேன ஏகே அமிருதத்வமானசு; | (XII. 14)

பொருள்:

"சடங்குகளாலும், மக்கட் பேற்றாலும், செல்வத்தாலும் அவர்கள் சாகமையை அடையவில்லை, தியாகத்தால் மட்டுமே சிலர் சாகாமையை அடைந்துள்ளார்கள்."

இதிலிருந்து சடங்கு, மக்கட் பேறு, செல்வமெல்லாம் உபயோகமில்லை என்று பொருள் இல்லை. இவைகளால் ஓரளவு பிரயோஜனம் உண்டு. ஆனால் உயர்ந்த லட்சியமாகிய சாகாமையை அடையத் தியாகமே ஒரே வழியாகும் என்று உபநிஷதம் சுட்டிக்காட்டுகிறது.

தியாகம் என்றால் என்ன? இதற்கு உரை எழுதிய பட்ட பாஸ்காரும் ஸாயனரும் சற்று வேறுபட்ட கருத்துக்களைக் கூறுகிறார்கள். பட்டபாஸ்கார் இது பலத்தியாகத்தைக் குறிக்கிறது. மத சம்பந்தமான சடங்குகளுடைய பலனையும், தான தருமங்களுடைய பலனையும் தியாகம் செய்வதே இங்கு சொல்லப்படுகிறது என்பது அவருடைய வாதம். பகவத் கீதையில் சொல்லியுள்ள 'கர்மண்யே வாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன' (II.47) என்பதை இக்கருத்து ஒத்திருக்கிறது.

பொருள்:

வினையாற்ற கடமைப்பட்டுள்ளோம். வினைப் பலனில் ஒரு பொழுதும் உரிமை பாரட்டாதே (சுத்தானந்த பாரதி). கர்மாக்களுடைய பலன்களை ஒருவன் தியாகம் செய்யும் பொழுது, கர்மாக்கள் அவனைக் கட்டுப்படுத்துவதில்லை.

ஸாயனருடைய கூற்றின் படி ஒருவன் உலகத்தையே துறந்து ஸந்தியாசம் வாங்கிக் கொண்டு, உலகப்பற்றின்றி, எப்பொழுதும் பரமபுருஷனைத் தியானம் செய்தால் தான்

அவனுக்கு மோக்ஷம் கிட்டும். வேள்வி முதலிய சடங்குகளைப் புரிவதால் ஒருவனுக்குச் சித்தசுத்தியும், திடமனதும் ஏற்பட்டு மேலும் பரம்பொருளை அறிய ஆவல் ஏற்படுமே தவிர, இச்சடங்குகள் மட்டுமே அவனுக்கு மோக்ஷத்தை அளிக்க முடியாது. உலகப்பற்றுகளை எல்லாம் விட்டால் ஒழிய, மோக்ஷத்திற்கு ஒருவன் அடிகோல முடியாது.

புருஷ ஸூக்த ரிஷி மேலும் கூறுகிறார். 'ஸூரியனைப் போன்ற காந்தி உள்ளவரும் இருளுக்கு அப்பாலுள்ள வருமான பரமபுருஷனை நான் அறிவேன். அவனை அறிபவன் இங்கேயே இப்பிறவியிலேயே முக்தியை அடைகிறான். அதைத் தவிர மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை.

ஸூக்தம் தொடர்கிறது: "தேவர்கள் இந்த மானஸ யக்ஞத்தால் யக்ஞபுருஷனான பரமாத்மாவை வழிபட்டார் கள். இந்த சிருஷ்டி—வேள்வியிலிருந்து எழுந்த முதல் தர்மங்களே மனித குலத்தின் சாச்வதமான நெறிமுறைகளா யின." இத்துடன் ஸூக்தம் முடிகிறது.

படைப்போன் இருக்கிறார். பருவங்கள் உள்ளன. உலகத்தையே படைக்கப் போகிறவர் அச்சமயம், வேறு ஒன்றுமே இல்லாத நிலையில் இருந்தார். படைக்கும் தொழிலைத் தொடங்கவேண்டும். இருப்பதை வைத்துக் கொண்டு இந்தப் பெருமுற்சிக்கு முன் இறைவனை வழிபட வேண்டும். இந்த வழிபாட்டை எப்படிச் செய்கிறார். படைப் போன் என்று புருஷ ஸூக்தம் கூறுகிறது. அச்சமயம் படைப் போன் புரிந்த மானஸ வேள்வியில், அவர் பரம புருஷனையே அக்கினியாக பாவித்தார். பிற்காலத்தில் எல்லோரும், தற்காலத்தில் நாமும் அக்கினியில் பொருள் களை இறைவனுக்காக அர்ப்பணம் செய்கிறோம். அப்பொழுது பிரம்மா இறைவனை அக்கினியாக பாவித்து

பருவங்களையும் தன்னையுமே அந்த அக்கினியில், மனத்தளவில், அர்ப்பணம் செய்து, நாம் அக்கினியை இறைவனாகப் பாவித்துப் பொருள்களை அவனுக்காக அக்கினியில் அர்ப்பணம் செய்ய வழிகாட்டினார். நாம் வேள்விகள், சடங்குகள், புரியும் பொழுது நமக்குள் இருக்க வேண்டிய பாவமும், இறைவனுக்காக நாம் அர்ப்பணம் செய்யும், பொழுது உள்ள தியாக உணர்வுமே புருஷ ஸூக்தத்தின் இரு முக்கிய பாடங்களாக அமைகின்றன. படைப்போன் நம்மைப் படைத்தது மட்டுமல்லாமல், வாழ்க்கை நெறி முறைகளையும் (தானிதர்மாணி பிரதமான்யாஸன்) தன் நடத்தை மூலம், நமக்கு வழிகாட்டியுள்ளார். இனி, இந்த பதிநாறு ரிக்குகளின் பொருளைப் பார்ப்போம்.

"ஆயிரக்கணக்காக தலைகளையும், கண்களையும், கால்களையும் உள்ள பரமபுருஷன் பூமியை எங்கும் வியாபித்து, பத்து விரல்களால் கணக்கிடப்படும் அளவுகளை யெல்லாம் கடந்து நிற்கிறார். முன்னாலிருந்ததெல்லாமும், இனி வரப் போவதெல்லாமும், இப்பொழுது காணப்படுவ தெல்லாமும் அந்தப் பரம புருஷனேயாகும். மேலும் சாகாமைக்கு அதிபனாக அவன் விளங்குகிறான். எந்தப் பிராணிகள் எல்லாம் உணவால் வெளிப்பட்டு உயிர் வாழ்கின்றனவோ அவை எல்லாம் பரம புருஷனே ஆகும்." (ரி.வே.X. **90. 1.2**).

"இங்கு காணப்படுவதெல்லாம் அவருடைய மஹிமையே. அந்தப் பரம புருஷன் இவ்வனைத்தையும் காட்டிலும் அதிகமானவர். உண்டானவை எல்லாம் அவருடைய கால் பங்கு ஆகும். இவருடைய முக்கால் பங்கு அழிவற்றதாய் மேலுலகில் உள்ளது. முக்கால் பங்கெனப்படும் பரம புருஷன் இவ்வுலகிற்கு மேலே விளங்குகிறார். இவருடைய கால் பங்கு மட்டும் இவ்வுலகில் மீண்டும் மீண்டும் தோன்றுகிறது. அதிலிருந்து உணவை உண்டு

வாழும் பிராணிகளும், உணவை வேண்டாத ஜடப் பொருள்களும் ஆகிய எல்லாம் எங்கும் வெளிப்படையாகத் தோன்றலாயின. (ரி.வே.X. 90. 3.4)

"அந்த ஆதி புருஷனிடமிருந்து விராட் உண்டாயிற்று. அதிலிருந்து படைப்போன் என்ற புருஷன் உண்டானார். பிறகு அவர் பூமியைப் படைத்தார்; அதன் பின் அவர் எல்லா ஜீவ ராசிகளுக்கும் உடலை உண்டு பண்ணினார். தேவர்கள் விராட் புருஷனையே ஹவிஸாகப் பாவித்து ஆதி புருஷனை நோக்கி மானஸ வேள்வியைப் புரிந்தார்கள்; இவ்வேள்விக்கு இள வேனிர்காலம் நெய்யாகவும், கோடைகாலம் ஸமித்தாகவும், சரத்காலம் ஹவிஸ் ஆகவும் ஆயின. (ரி.வே.X. 90. 5.6)

"முதலில் உண்டான அந்த வேள்வியில், ஸாத்யர்கள் எனப்படும் தேவர்களும், மஹரிஷிகளும் யக்ஞ புருஷனைப் புரோக்ஷணம் செய்து யாகத்தை நடத்தினார்கள். 'ஸர்வஹீத்' எனப்படும் அந்த வேள்வியிலிருந்து தயிரும் நெய்யும் உண்டாயிற்று. காற்றில் சஞ்சரிக்கும் பறவைகளையும், காட்டில் வாழும் விலங்குகளையும் கிராமங்களில் உள்ள பிராணிகளையும் படைப்போன் படைத்தார்." (ரி.வே.X . 90.28)

"ஸர்வஹீத் எனப்படும் அந்த வேள்வியிலிருந்து ரிக் வேத் மந்திரங்களும் ஸாம வேத மந்திரங்களும் உண்டாயின. அதிலிருந்து காயத்ரி முதலிய பண்களும் (சந்தஸ்ஸுகளும்) உண்டாயின. யஜுர் வேதமும் அதிலிருந்தே உண்டாயிற்று. அதிலிருந்து குதிரைகளும் உண்டாயின. அந்த வேள்வியிலிருந்து ஒரு வரிசைப் பற்களுள்ள பிராணிகளும், இருவரிசைப் பற்களுள்ள பிராணிகளும் உண்டாயின. அதிலிருந்தே வெள்ளாடுகளும், செம்மறியாடுகளும் உற்பத்தியாயன." (ரி.வே.X. 90. 9.10)

"விராட் புருஷன் தோன்றிய பொழுது, தேவர்கள் அவனை எந்தெந்த விதமாகப் பயன்படுத்தினார்கள்? இப்

புருஷனுடைய முகம் எதுவாக ஆயிற்று? கைகளாக எவர்கள் சொல்லப்படுகிறார்கள் தொடைகளாகவும் கால்களாகவும் எவர்கள் ஆனார்கள்? அந்த விராட் புருஷனுடைய உடம்பின் பற்பல அங்கங்களிலிருந்தும் நான்கு ஜாதியான மனிதர்கள் தோன்றினார்கள். (ரி.வே.X . 90. 11.12)

"மனத்திலிருந்து சந்திரனும், கண்ணிலிருந்து ஸூரியனும் உண்டானார்கள். விராட் புருஷனுடைய முகத்திலிருந்து இந்திரனும், அக்கினியும் உண்டானார்கள். பிராணனிலிருந்து வாயு உண்டாயிற்று அந்த விராட் புருஷனுடைய தொப்புளிலிருந்து வானவெளி உண்டாயிற்று; தலையிலிருந்து விண்ணுலகமும் நன்றாக அமைந்த கால்களிலிருந்து மண்ணுலகமும், காதுகளிலிருந்து நாற்றிசைகளும் உண்டாயின; அவ்வாறே எல்லா உலகங்களையும் ஸங்கல்ப மாத்திரத்தில் அந்த விராட் புருஷ தோற்றுவித்தார். (ரி.வே.X. 9. 13.14)

புருஷனின் பிராணனிலிருந்து வாயு உண்டாயிற்று என்பது பொருத்தமான கருத்தாகும். அவன் மனத்திலிருந்து சந்திரன் பிறந்தான் என்பது மிகவும் அழகான, கவிதைச் சுவை மிகுந்த ஒரு சித்திரமாகும். புருஷனின் மனம் குளிர்ந்ததாய்க் கருணைமிக்கதாய் இருக்கிறது. கோபம் என்ற நெருப்புக்கு அங்கே இடமில்லை. இங்கிருந்து குளிர்ந்த கிரணமுடைய சந்திரன் தோன்றினான் என்பது எத்தனை அழகான ஓர் படைப்பு! உயர்ந்தோர் கண்களில் ஓர் ஒளி இருக்கும். "ஒளிபடைத்த கண்ணினாய்" என்பான் பாரதியும். இத்தகைய கண்ணிலிருந்து ஸூரியன் பிறந்தான் என்பதும் ஓர் அழகிய கவிதைச் சித்திரமே.

இந்த வேள்விக்குக் காயத்ரி முதலிய ஏழு பண்கள் (சந்தஸ்ஸுகள்) பரிதிகளாக (வேள்வித் தீயைச் சுற்றி வைக்கப்படுபவை) ஆயின. இருபத்தொன்றான தத்துவங்கள் ஸமித்துகளாக ஆகின. வேள்வியைப் புரியும் தேவர்கள்

படைப்போனை ஹோமப் பசுவாகக் கட்டினார்கள். தேவர்கள் இந்த மானஸ வேள்வியால் யக்ஞ புருஷனை வழிபட்டார்கள். அந்த வேள்வியைச் சார்ந்த தருமங்கள் முதன்மை பெற்றன. இந்த வேள்வியில் முதலில் பரம புருஷனை வழிபட்ட ஸாத்தியர்கள் என்ற தேவர்கள் எங்கு இருக்கிறார்களோ, அதே சுவர்க்க லோகத்திற்கு அதே வழிபாட்டால், மகான்களும் அடைகிறார்கள். (ரி.வே.X.90. 15–16)

* * *

அத்தியாயம் 7

# வேதம் கூறும் சில தெய்வங்கள்

## 7.1 மனிதர்கள்

*அரசர்கள்* ரிக் வேதத்தில் இரண்டு ஸூக்தங்கள் (X.173; X. 174) அரசனைத் தேவதையாகக் கொண்டிருக்கின்றன. இதில் முதலாவது ஸூக்தம் புதிதாக முடிசூட்டப்பட்ட அரசனுக்கு வருணன், இந்திரன், ஸோமன் முதலிய தெய்வங்கள் அருளாசி வழங்கும்படி அவர்களை வேண்டுவதாக அமைந்துள்ளது. இரண்டாவது ஸூக்தம் எதிரிகளைப் போரில்வென்று, மேலும் எதிரிகளே இல்லாமல் விளங்கும் அரசனைப் புகழ்வதாக அமைந்துள்ளது. இதில் கடைசி இரண்டு ரிக்குகளும் அரசனே, தான் எல்லா மக்களுக்கும் பேரரசனாக ஆட்சி செலுத்த, தெய்வங்களை வேண்டுவதாக அமைந்திருக்கின்றன.

*முன்னோர்கள்* நமது முன்னோர்களைத் தெய்வத் தன்மை உடையவர்களாகக் கருதி அவர்களை வழிபடுவது தற்சமயம் நம் மதத்தில் வழக்கமாக உள்ளது. இது வேதகாலத்திலிருந்தே தொடர்ந்து வந்து கொண்டு இருக்கிறது. ரிக் வேதத்தில் பதிநான்கு ரிக்குகள் கொண்ட ஒரு ஸூக்தத்திற்கு (X. 15) முன்னோர்கள் தேவதைகளாக இருக்கிறார்கள். அதிலுள்ள முதல் ரிக்கை இன்றும் அந்தணர்கள் அமாவாசைத் தர்ப்பணத்தின் பொழுது

ஓதுகிறார்கள். அது வருமாறு:

உதீரதாம் அவர உத்பராஸ:
உன்மத்யமா: பிதரஸ் ஸோம்யாஸ: |
அஸும் யஈயு: அவ்ருகாருதக்ஞா:
தே நோ அவந்து பிதரோ ஹவேஷு ||
(ரி.வே.X. 15.1)

இதன் பொருள்:

'(வேதத்தில் சொல்லிய ஸோமயாகம் முதலிய முக்கிய வேள்விகளையும் மற்ற எல்லா கர்மாக்களையும் ஒழுங்காக அனுஷ்டித்த) உத்தம பித்ருக்களைப் போலவே, (வேதத்தில் கூறிய சாதாரண சடங்குகளை மட்டும் அனுஷ்டித்த) நடுத்தர பித்ருக்களும், (ஒரு கர்மாவையும் செய்யாத) அதமபித்ருக் களும் உயர்ந்த கதியை அடையட்டும். நம்மிடம் கோப மற்றவர்களாய், அவர்கள் நாம் செய்யும் நற்கர்மாவை உணர்ந்து, நாம் அழைக்கும்போது வந்த நம்மைக் காத்தருள வேண்டும்.'

இந்த ஸூக்தத்திலிருந்து இன்னுமொரு ரிக்: 'சிவந்த காலை வேளைகளின் மடியில் தவழ்ந்து கொண்டு, (ஒளிவீசும் வேள்வித்தீயின் அருகில் உட்கார்ந்து கொண்டு), ஆஹுதிகளைக் கொண்டு வருபவனுககுச் செல்வங்களை வழங்குங்கள். ஓ முன்னோர்களே! உங்களுடைய மைந்தர்களுக்கு எல்லாப் பொருள்களையும் அள்ளிக் கொடுங்கள்; அவர்களுக்குப் புத்துணர்ச்சியையும் ஊட்டுங்கள்.' (ரி.வே. X. 15.7)

இந்த ஸூக்தத்தின் இன்னுமொரு ரிக்கை இன்றும் அமாவாசைத் தர்ப்பணத்தின் பொழுது அந்தணர்கள் ஓதுகிறார்கள். (கடைசி பாதம் வேறாக உள்ளது).

'யே சேஹ பிதரோ யே ச நேஹ
யாம்ச வித்மயான உசந ப்ரவித்ம |
அக்னே தான் வேத்த யதிதே ஜாத வேத:

ஸ்வதாபிர்யக்ஞம் ஸுகிருதம் ஜுஷஸ்வ ||
(ரி.வே. X. 15.13)

இதன் பொருள்:

'எந்தப் பித்ருக்கள் இவ்வுலகில் இருக்கின்றனரோ, எவர்கள் இங்கு இல்லையோ, எவர்களை நாங்கள் அறிவோமோ, எவர்களை அறியமாட்டாமோ, அவர்களை எல்லாம், ஓ அக்னி பகவானே, நீ, அனைத்தையும் அறியும் ஜாதவேதஸ் ஆகையால், அறிவாய். நன்றாகச் சமைக்கப்பட்ட உணவுகளுடன் கூடிய வேள்வியை ஏற்றுக்கொள்.'

தம்பதி ஒரு ஸூக்தம் கூறுகிறது: 'எவன் வேள்விகளை முறையாகப் புரிந்து, தனக்கு பாலுடன் கலந்து ஸோம ரசத்தைக் கொடுக்கிறானோ, அவனை இந்திரன் காப்பாற்று கிறான். அவனுக்கு நல்ல சக்தியையும் கொடுக்கிறான். அவன் வீட்டில் பால் தங்கு தடையில்லாமல் எப்பொழுதும் வேண்டிய அளவு இருக்கிறது; அவனுக்கு மக்கட்பேற்றை இந்திரன் அருளுகிறான்,' (ரி.வே. VIII. 31. 1.4.)

இந்த ஸூக்தம் மேலும் தொடர்கிறது:

'கணவனும் மனைவியும், ஒரே எண்ணமுள்ளவர்களாய், ஸோமரசத்தைப் பிழிந்து சுத்தம் செய்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய உணவு கிடைக்கிறது; இணைந்தே அவர்கள் வேள்விக்கு வருகிறார்கள்; அவர்களுக்கு ஒரு பொழுதும் வலிமை குறைவதில்லை. அவர்கள் தெய்வங்க ளுடைய அருளை எப்பொழுதும் மறப்பதில்லை. அவர்கள் புகழின் உச்சியை எட்டுகிறார்கள். மகன்களும், மகள்களும் கூடவே இருந்து கொண்டு இருக்க அவர்கள் நீண்ட ஆயுளைப் பெறுகிறார்கள். அவர்கள் இருவரும் பொன்னாலான நகைகளை அணிந்திருக்கிறார்கள். அவர்கள் தெய்வத்திற்கு வேள்விபுரிந்து உணவுகளைப் படைக் கிறார்கள். ஒரே சமயத்தில் அவர்கள் காதலின் கட்டளை

களை நிறைவேற்றி, தெய்வங்களையும் கௌரவிக்கிறார்கள். (ரி.வே. VIII. *31. 5.9*)

ஸூக்தத்தின் இறுதியில் தம்பதிகளுக்கு அருளாசி வழங்கும்படி எல்லாத் தெய்வங்களையும் வேண்டுகிறார்கள்.

மற்றவர்கள், தவிர, தான தருமங்கள் தாராள மனப்பான்மையுடன் செய்த சில அரசர்களின் பெயர்களைக் கூறி, சில ரிக்குகள் அவர்களைப் புகழ்கின்றன. தச்சனும் வியாபாரியுமான பிருபூ என்பவன் சிறந்த கொடையாளியாக விளங்கியதையும் பற்றி வேதம் புகழ்கிறது. அங்கிரஸ் என்ற மகரிஷி எப்படி வியக்கத்தக்கப் பல சாதனைகளைப் புரிந்தார் என்று பரவசத்துடன் பாராட்டிச் சில ரிக்குகள் பேசுகின்றன. (X. *62. 1.6*)

* * *

## 7.2 பிராணிகள்

**குதிரை:**

ரிக் வேதத்தில் ததிக்ரா என்ற தெய்வாம்சமுள்ள குதிரைக்கு நான்கு ஸூக்தங்கள் உள்ளன. மக்கள் ததிக்ராவைத் துதித்து வேண்டிய வரங்களைக் கேட்கிறார்கள். அந்தணர்கள் செய்யும் சந்தியாவந்தனத்தில் பின் வரும் மந்திரம் உள்ளது:

ததிக்ராவ்ணோ அகாரிஷம்
ஜிஷ்ணோரச்வஸ்ய வாஜின: ।
ஸுரபினோ முகாகரத்
ப்ரண ஆயும்ஷி தாரிஷத் ॥
(ரி.வே. IV. *39.6*)

**பொருள்:**

'எல்லாவற்றையும் வெல்லும் வேகமாகச் செல்லும் வலிமையுள்ள குதிரையான ததிக்ராவை நான் துதிகளால் புகழ்ந்து பாடுகிறேன்; எங்களுடைய வாய்கள், புலன்கள் நல்மணமாக இருக்க நீ அருள வேண்டும்; எங்களுடைய ஆயுளை அதிகரிக்க வேண்டும்.'

இக்குதிரைத் தேவதை ஒரு பருந்தைப்போல வெகு வேகமாகச் செல்லுகிறான்; அவன் பல வண்ணங்களில் உள்ளான். எல்லாரும் மதிக்கும் ஒரு அஞ்சா நெஞ்சம் படைத்த அரசனை அவன் ஒத்திருக்கிறான். அவன் புயற்காற்றைப் போலப் பறக்கிறான். ஒரு பசியுள்ள பருந்து தன் உணவை 'நோக்கிக் கீழே வேகமாகப் பறந்து வருவது போல அவன் புகழத்தக்க வேகத்துடன் செல்லுகிறான். சுற்றியுள்ள தேர்களை மாலையாக அணிவகுத்து, துகள் பரப்பி, அவன் தன்னைக்கட்டுப் படுத்தும் கடிவாளத்தை பற்களால் சத்தமுடன கடிக்கிறான். தன்னை நோக்கி வரும் எதிரிகளுக்கிடையே நேராக வேகத்துடன் போய்க் கொண்டு, புழுதியை மேலே கிளப்பி, அவன் அதைத்தன் நெற்றியில் விழும்படி செய்கிறான். விண்ணின் கர்ஜனை போன்ற அவனுடைய கனைப்பால், எதிர்ப்பவர்கள் பயந்து நடுங்குகிறார்கள். அவனைத் தடுக்க எவராலும் முடியாது. (ரி.வே. IV. *38*)

அவன் வெளிச்சத்திலுள்ள அன்னப்பறவை (இது ஸூரியனைக் குறிக்கும்); அவன் காற்று மண்டலத்தின் நடுவிலுள்ள வஸு (இது வாயுவைக் குறிக்கும்); அவன் வேள்வி குண்டத்திற்கு அருகில் இருக்கும் குருவாகவும், வீட்டிற்கு வந்த விருந்தாளியாகவும் உள்ளான். (இது அக்கினியைக் குறிக்கும்.) அவன் உயர்ந்த இடத்தில், மக்களுக்கு நடுவில் வசிக்கிறான்; அவன் விண்ணிலும், விண்ணைச் சுற்றியுள்ள கடலிலும்; ஆடுமாடுகளுக்கு நடுவிலும் வசிக்கிறான்; அவன் மலை போலக்

குவித்திருக்கும் மேகங்களின் பின்னிருந்து உதயமாகிறான். (இவையெல்லாம் ஸூரியனை குறிக்கும்.) என்றும் சாச்வதமாக உள்ள நீதி நெறி அவனேதான். (ரி.வே.IV. 40.5)

வடமொழியில் 'ததி' என்றால் 'தயிர்' எனப் பொருளாகும்; 'க்ரு' என்ற வினைச் சொல்லிற்குப் பல பொருள்கள் உள்ளன; அவைகளில் 'வாரி இறைத்தல்' என்பது ஒன்றாகும். ததிக்ரா என்ற குதிரை, விடியற்காலை உதயமாகும் ஸூரியனைக் குறிக்கும் என்றும், காலைப் பனியை அது போக்குவதால் அதற்கு ததிக்ரா என்ற பெயர் வந்ததாகவும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

பசுமாடு:

ரிக் வேதத்தில் பசுமாட்டைத் துதித்து மூன்று ஸூக்தங்கள் உள்ளன. 'பசுமாடுகள் வந்து நல்லதைச் செய்கின்றன; அவைகள் தொழுவத்தில் இளைப்பாறி மகிழ்ந்திருக்கட்டும்; அவைகள் நிறையக் கன்றுகளை ஈன்று, இந்திரனுக்காகப் பல நாட்கள் பாலைக் கொடுக்கட்டும். பசுக்கள் காணாமல் போகாமல் இருக்கட்டும்; திருடர்கள் அவைகளுக்கு தீங்கு இழைக்காமல் இருக்கட்டும்; கெட்ட எண்ணமுள்ள எதிரிகள் அவைகளுக்குத் தொந்திரவு கொடுக்காமலிருக்கட்டும். பசுக்களின் யஜமானன் பல்லாண்டு வாழ்ந்து வேள்விகள் புரிகிறான். வேள்வி புரிவோரின் இப்பசுக்கள் பரந்த பசும்புற்றரையில் திரிகின்றன; அவைகளை ஒரு ஆபத்தும் அணுகுவதில்லை, இப்பசுக்கள் பாகனாகவும், இந்திரனாகவும், ஸோமனாகவும் விளங்குகின்றன. ஓ பசுக்களே, நீங்கள் இளைத்தவர்களையும், ஒடுங்கிப்போனவர்ளையும் பலமுள்ளவர்களாக்கி, விகாரமானவர்களை அழகாக்குங்கள். உங்களுடைய மங்களமான சப்தத்தால் எங்கள் வீடுகளைச் செழிப்பாக்குங்கள். தெளிவான, இனிப்பான, நீரைக் குடியுங்கள்; திருடனும் பாவியும் உங்களுக்கு எஜமானராக ஆகாமலிருக்கட்டும்; ருத்திரனுடைய அம்பு உங்களை அணுகாமலிருக்கட்டும்.

உங்களுடைய பாலை ஸோமரசத்துடன் கலந்து இந்திரன் பருகி, தன்னுடைய வலிமையைப் பெருக்கட்டும்.' (ரி.வே. VI. 28. 1--8).

'செல்வந்தர்களே! திரும்புங்கள்; உங்கள் வழியில் மேலே போகாதீர்கள்; எங்களிடம் வாருங்கள். (இது வழி தவறிய பசுக்களிடம் கூறுவது) இந்திரனும் அக்கினியும் அவைகளை எங்களுக்குத் திருப்பிக் கொடுக்கட்டும். பசுக்கள் போகுமிடத்தையும், திரும்புவதையும், சுற்றுவதையும் அறிய வேண்டுகிறேன்; அவைகளை மேய்பவனையும் அறிய வேண்டுகிறேன். அவைகள் போவதையும் சுற்றுவதையும் திரும்புவதையும் நன்கறிந்த மேய்ப்பவனும் திரும்பட்டும். இந்திரனே, அவைகளைத் திருப்பிக் கொடு; அவைகள் உயிருடனிருப்பதைக் கண்டு நாங்கள் மகிழ்வோம்.' (ரி.வே.X. 19. 1.6)

பசுமாடு தேவதையாக விளங்கும் இன்னுமொரு ஸூக்தம் (X. 163) உள்ளது. ஆறு ரிக்குகள் கொண்ட இந்த ஸூக்தத்தில் பசுமாட்டின் ஒவ்வொரு அங்கமாகக் கூறி, அதிலிருந்து நோய்களை விரட்டுவதாக அமைந்துள்ளது.

பசுமாடு பால் கொடுக்கிறது; அதிலிருந்து தயிர், வெண்ணெய், நெய் எல்லாம் கிடைக்கிறது; இவை எல்லாம் வேள்விக்கு இன்றியமையாததாகும். ஆகையால் மனிதன் பசுவைத் தெய்வமாகக் கொண்டாடியதில் வியப்பில்லை அல்லவா? பசுவை அதிதி என்ற தெய்வமாக ரிக் வேதம் குறிப்பிடுகிறது. பல இடங்களில் ரிக்வேதம் பசுவைக் கொல்லக் கூடாது என்று கட்டளையிடுகிறது.

ரிக் வேதம் பசுமாட்டிற்கு இரண்டு உவமைகளைக் கூறுகிறது. உஷஸின் கிரணங்கள் பசுமாடு என்றும், உஷஸ் வீற்றிருக்கும் தேரைப் பசுமாடுகளாகிய கிரணங்கள் இழுத்துச் செல்லுகின்றன என்றும் வேதத்தில் காண்கிறோம்.

இரண்டாவதாக, நீருள்ள கார் மேகங்களைப் பசுமாட்டு டன் வேதம் ஒப்பிடுகிறது. நகர்ந்து கொண்டும், இடி இடித்துக் கொண்டும் மழையைப் பொழிந்து கொண்டும் உள்ள கார் மேகங்கள், மேய்ந்து கொண்டும், சப்தித்துக் கொண்டும், பாலைக் கொடுத்துக் கொண்டும் உள்ள பசுமாடுகளுடன் ஒப்பிடுவது சாலப்பொருத்தமே; மின்னலாகிய கன்றுக்குத் தாயாக மேகமாகிய பசுமாடு விளங்குகிறது.

இந்திரன் விருத்திரனைக் கொல்லும் கதையில், பசுமாடுகளை மேகத்திலுள்ள தண்ணீருக்கு ஒப்பிடுகிறார்கள். பசுமாடுகளாகிய தண்ணீரை வெளிவராமல் தடுக்கும் விருத்திராசுரனைக் கொன்று இந்திரன் பசுக்களை (தண்ணீரை) வெளிக் கொணர்கிறான்.

இதேகதையில் இன்னும் சில இடங்களில் வேதம் மேகங்களை மலைகளுடனும், மேகத்திலுள்ள நீரைப் பசுக்களுடனும் ஒப்பிடுகிறது. விருத்திரன் முதலிய அசுரர்கள் மலையின் மேல் இருந்து கொண்டு பசுக்களை (நீரை) வெளி வராமல் தடுக்கிறார்கள் இந்திரன் அவர்களைக் கொன்று பசுக்களை (நீரை) விடுவிக்கிறான்.

இதை விவரிக்கும் ஒரு ரிக் கூறுகிறது.

'ஒரு கோடாலி மரத்தை வெட்டி வீழ்த்துவது போல, இந்திரன் விருத்திரனக் கொன்று வீழ்த்தினான். அவனுடைய கோட்டைகளைத் தவிடு பொடியாக்கினான்; பிறகு ஆறுகளை வெட்டினான், புதிதாகச் செய்த ஒரு பானையை உடைப்பது போல, இந்திரன் அந்த மலைகளைப் பிளந்தான்; அவன், தன் தோழர்களான மருத்துக்களுடன், பசுக்களை வெளிக் கொணர்ந்தான்.' (ரி.வே.X. 89.7)

**நாய்கள்:**

ஸ்ரமா என்றும் நாயை இந்திரனுடைய வேட்டை நாயாகவும், தூதுவனாகவும் ரிக் வேதம் கூறுகிறது.

இந்திரனைப் பற்றிய வரலாற்றில் ஸரமா பசுக்களை விடுவிக்க பணிகளிடம் தூது போனது பற்றிய விவரங்களைப் பார்த்தோம். (அத்தியாயம் 3.1) சரமா விடியற்காலையைக் குறிக்கும் என்று சில ஆராய்ச்சியாளர் கள் கருதுகிறார்கள்.

ஸரமாவின் குட்டிகளான ஸாரமேயா என்று பெயர் உள்ள இரு நாய்கள் யமனின் காப்பாளர்களாக இருக்கிறார்கள். இறந்த மனிதனின் ஆத்மாவை, அந்த நான்கு கண்கள் உள்ள இரு நாய்களை விட வேகமாக ஓடி, யமனுடன் கூடி மகிழ்ந்திருக்கும் முன்னோர்களிடம் செல்லும்படி ஒரு ரிக் கூறுகிறது. அடுத்த ரிக், இறந்த மனிதனை அந்த இரண்டு நாய்களிடம் ஒப்படைத்து அவனைக் காக்கும்படி, யமனைக் கேட்டுக் கொள்ளுகிறது. அதற்கும் அடுத்த ரிக்கில் யமனுடைய இரண்டு தூதர்களான அந்த நாய்கள் தங்களுக்கு இவ்வுலகில் நல்வாழ்வு அருள, இறந்தவனின் சுற்றம் வேண்டுகிறார்கள். (ரி.வே.X.14. 10–12)

**தவளைகள்:**

ரிக் வேதத்தில் தவளைகளைத் தேவதையாகக் கொண்ட ஒரு ஸூக்தம் (VIII. 103) இருப்பது சற்று வியப்பாக உள்ளது. ஓராண்டு மௌனமாக இருந்த தவளைகள், பாஜன்யன் என்ற தெய்வத்தால் (மழையினால்) தூண்டப்பட்டுத் தங்கள் குரல்களை உயர்த்துகின்றன. தவளைகளின் கோஷ்டிகானம், அருகிலுள்ள, கன்றுகளுடன் கூடின பசுக்களின் சப்தம் போலக் கிளம்புகிறது. மழை பெய்தவுடன், தவளைகள் ஒன்றோடொன்று கூடிக் குலவுகின்றன. அதிராத்ரம் என்ற சடங்கில், அந்தணர்கள் ஸோமரசம் நிறைந்த பாத்திரத்தைச் சுற்றி உட்கார்ந்து மூன்று இரவுகள் மந்திரங்களை ஓதுவது போல, தவளைகள் குட்டையைச் சுற்றிலும் உட்கார்ந்து ஆண்டின் முதல் மழையைக் கௌரவிக்கின்றன. தவளைகள் எங்களுக்கு நூற்றுக்கணக்கான பசுக்களைக் கொடுத்து எங்களுக்கு நீண்ட ஆயுளையும் அருளட்டும் என்று ஸூக்தம் முடிகிறது.

மாக்ஸ்முல்லர் என்ற மேல் நாட்டு ஆராய்ச்சியாளர் இந்த ஸூக்தம் அந்தணர்களைக் கேலி செய்வதாக அமைந்துள்ளது என்கிறார்.

தார்க்ஷ்யன:

தார்க்ஷ்யன் என்ற தெய்வாம்சமான பறவையைப் புகழ்ந்து ரிக்வேதத்தில் ஒரு ஸூக்தம் உள்ளது. தார்க்ஷ்யனைப் பற்றிய ரிக் வேதக் குறிப்புகள் ததிக்ராவைப் பற்றிக் கூறியதை ஒத்திருக்கின்றன. 'அவன் தேர்களையும் மற்ற எல்லோரையும் போரில் வெல்கிறான். அவன் போருக்கு அதிவேகமாகச் செல்லுகிறான். நம்மைக் காப்பாற்றிக்கொள்ள, ஒரு கப்பலின் மேல் ஏறுவதுபோல், அவன் மீது ஏறுவோம். ஒரு இளம் பெண் தன் காதலனைத் தடுக்கமாட்டான் போல அவனை எவரும் தடுக்க முடியாது.' (ரி.வே.XII. 178. 1.3) பிற்கால நூல்களில், தார்க்ஷ்யன் விஷ்ணுவின் வாகனமான கருடனைக் குறிக்கும்.

பருந்து:

விண்ணில் இருந்த ஸோமனை காவலாளிகள் காத்து வந்தார்கள். மண்ணிலிருந்த மக்கள், தெய்வங்களுக்கு வேள்விகளில் கொடுப்பதற்கும் தாங்கள் பருகுவதற்கும், ஸோமரசத்தைப் பிழிய விரும்பினார்கள். அக்கினி பகவான் அந்த ஸோமனைப் பூமிக்குக் கொண்டு வர யாரை அனுப்பலாம் என்று சிந்தித்தான். நீண்ட ஆலோசனைக்குப் பிறகு வேகமாகப் பறக்கும் பருந்தை இக்காரியத்திற்காக நியமனம் செய்தான்.

பருந்து விண்ணிற்கும் பறந்து சென்று, காவலாளி களைப் போரில் வென்று, ஸோமத் தண்டைத் தூக்கிக் கொண்டு கீழே பறந்தது அச் சமயம் காவலாளிகளில் ஒருவனான கிருசானு என்பவன் பருந்துமேல், கடும் சினத்துடன், அம்புகளைச் சரமாரியாகப் பெய்தான். அந்த அம்புகள் பருந்திற்கு தீங்கு ஒன்றும் இழைக்கவில்லை. ஆனால் அம்புகள் பட்டு ஒரே ஒரு சிறகு மட்டும் பருந்தின் உடம்பிலிருந்து, பிய்ந்து, கீழே பூமியில் விழுந்தது. அதுதான் புனிதமான பலாச மரமாக வளர்ந்தது. இன்றும் பலாச

இலைகளை ஔபாசனம், சிராத்தம் முதலிய சடங்குகளில் உபயோகிக்கிறார்கள்.

பருந்து ஸோமத்தண்டைப் பூமிக்குக் கொணர்ந்தது என்றும் மக்கள் ஸோமரசத்தைப் பிழிந்தார்கள் என்றும், வேள்விகளில் தனக்கு அளிக்கப்பட்ட ஸோமரசத்தை இந்திரன் குடித்து மகிழ்ந்தான் என்றும் கதை முடிகிறது. (ரி.வே. IV. 27)

ஆராச்சியாளர்கள் இக்கதைக்கு இரு விதமான உட்கருத்தைக் கூறுகிறார்கள். முதலாவதாக, பருந்து விடியற்காலையையும் ஸோமரசம் ஸூரிய வெளிச்சத்தையும் குறிக்கும். இரண்டாவது கருத்தின்படி பருந்து மின்னலையும், ஸோமரசம் மேகத்திலுள்ள மழைநீரையும் குறிக்கும்; மின்னல் விண்ணிலிருந்து மண்ணில் மின்னிட்டு, மழை பொழிவதால் இக்கருத்து உருவாகிறது.

**சாதகப்பறவை:**

ரிக்வேதத்தில் நான்கு ரிக்குகள் கொண்ட ஒரு ஸூக்தத்துக்கு இப்பறவை தேவதையாக விளங்குகிறது. ஸூக்தம் கூறுகிறது:– 'ஒரு படகோட்டி தன் படகை ஓட்டுவது போல, இப்பறவை தன் குரலை உயர்த்தி, தான் யார் என்பதைத் திருமபத் திரும்பக் கூறுகிறது; ஓ பறவையே, நற்செய்திகளைக் கொண்டு வா; எப்பக்கத்திலிருந்தும் அழிவு உன்னை அணுகாமல் இருக்கட்டும். பருந்து உன்னைக் கொல்லாமலிருக்கட்டும். அம்புகளை எய்து கொண்டிருக்கும் வேடன் உன்னை அணுகாமலிருக்கட்டும்; முன்னோர்களிருக்கும் திக்கிலிருந்து கூவும் நீ நல்லதைக் கூறு; மகிழ்ச்சி தரும் செய்திகளைப் பேசு. மகிழ்ச்சி தரும் சகுனங்களை உடைய பறவையே! நற்செய்திகளைக் கொணர்ந்து, நீ எங்கள் வீட்டிற்குத் தென் திக்கிலிருந்து கூவுவாயாக, அதனால் திருடர்களும், பாவிகளும் எங்களுக்குத் தீங்கு இழைக்காமலிருக்கட்டும்.' (ரி.வே. II. 42 1.3)

இந்திரன் இப்பறவையின் வேஷத்தில் வருகிறான் என்ற கருத்து நிலவுகிறது.

## 7.3. பொருள்கள்

வேள்விக்கம்பம் :

இது வேள்விகளில் முக்கியமான ஒன்றாகும். வேள்விகளில் கொடுக்கப்படும் பலியை இதில் கட்டுவார்கள். வேள்விக் கம்பத்தை நட்டு, அதற்குப் பூஜை செய்த பிறகு, அதை ஒரு தேவதையாகவும், அக்கினி பகவானின் ஒரு உருவமாகவும் கருதினார்கள். பதினொரு ரிக்குகள் கொண்ட ஒரு ஸூக்தத்திற்குத் தேவதையாக இது விளங்குகிறது.

'மூட்டப்பட்ட தீயின் கிழக்குத் திக்கில் அந்தக் கம்பத்தை நட்டிருக்கிறார்கள். ஓ கம்பமே! ஏழ்மையையும், பஞ்சத்தையும், எங்களிடந்து வெகுதூரம் விரட்டிவிடு. எங்களுக்கு மிகுந்த நல்லதிர்ஷ்டத்தைக் கொடுக்க நிமிர்ந்து நில்! நல்லாடை உடுத்தி, இளம் வயதான அவள் வருகிறாள்; உயிர்ப்பித்து எழுந்த அவளுடைய புகழ் மேலும் மேலும் அதிகரிக்கிறது. (கம்பத்தை ஒரு பெண்ணாக உருவகப்படுத்துகிறது ரிக்) தியானம் செய்து கொண்டு கடவுளை வழிபடும் அறிவாளிகளான முனிவர்கள் இதை நட்டிருக்கிறார்கள். அறிவும் திறமையும் உள்ளவர்கள் பாட்டுக்களுடன் இதைப் பூஜிக்கிறார்கள்.' (ரி.வே.III. 8. 2.5)

'காட்டின் அரசானான உன்னைக் கோடாலி செதுக்கி யுள்ளது: அதை மதப்பற்றுள்ள மனிதர்கள் உறுதியாகப் பூமியில் நாட்டியுள்ளார்கள். தெய்வீகமான இந்தக் கம்பம் எங்களுக்குச் செல்வத்தையும் மக்கட்பேற்றையும் கொடுக்கட்டும்! கரண்டிகளைத் தூக்கும் மனிதர்களே, மரத்தை அறுத்துப் பூமியில் நாட்டிய கம்பம் வயல்களுக்கு ஆசியை அருளட்டும்; எங்களுடைய ஆஹுதிகளைத் தெய்வங்களுக் கொண்டு செல்லட்டும். (ரி.வே. III. 8 6.7.)

'பறக்கும் அன்னப்பறவைகளின் நீண்டு கொண்டே போகும் வரிசையைப் போல, இந்தக் கம்பங்கள் பளபளக்கும்

பல வண்ணங்களில் அமைந்திருக்கின்றன. முனிவர்களாள் தூக்கி நாட்டடப்பட கம்பங்கள், தெய்வங்களாக இருந்து கொண்டு மற்றத் தெய்வங்களின் இருப்பிடத்திற்குச் செல்லுகின்றன'. (ரி.வே. III. 8.9)

**ஸோமரசம் பிழியும் கற்கள்:**

ஸோமக் கொடியின் தண்டுகளை இருகற்களுக்கு நடுவில் வைத்துக் கற்களை அழுத்தித் தேய்த்து ஸோமரசத்தை வேதகாலத்தில் மக்கள் பிழிந்தார்கள். இந்தக் கற்களையே தேவதையாகப் பாவித்து ரிக் வேதத்தில் மூன்று ஸூக்தங்கள் உள்ளன.

'சதிகாரர்களான அரக்கர்களை வெகு தூரத்திற்கு விரட்டி விடு; நிர்ரிதி (மரணத்தின் தேவதை)யைத் தொலைவில் இருக்கச் செய்; ஏழ்மையைப் போக்கிவிடு. எங்களுக்கு செல்வத்தையும் வீர மைந்தர்களையும் கொடு.' (ரி.வே.X. 76.4)

'மனிதர்களை வேகமாகச் செலுத்தும் தேர்களைப் போல, கற்கள் ஸோமரசத்தைப் பிழிந்து ஓடச் செய்கின்றன; அவைகள் தண்டிலுள்ள எல்லா ரசத்தையும் பிழிந்து விடுகின்றன. பாத்திரத்தை நிரப்ப, பால் நிரம்பியிருக்கும் பசுவின் மடியைப் போலுள்ள தண்டிலிருந்து ரசத்தை அவைகள் எடுத்து விடுகின்றன; அப்பொழுது மனிதர்கள் தங்களுடைய உதடுகளால் (வேத ரிக்குகளை ஓதி) ஸோம ரசத்தைப் புனிதப்படுத்துகிறார்கள். (ரி.வே. X. 76.7)

'அக்கற்கள் உற்சாகமூட்டும் பானத்தைக் கண்டு கொண்டன; அந்த மகிழ்ச்சியில் உரக்கக்கூவி, இந்திரனை அழைக்கின்றன. துணிச்சலுடன் அவைகள் பத்து சகோதரி களுடன் (விரல்களுடனே) நாட்டியம் ஆடுகின்றன. அவர்களால் அணைக்கட பட்ட அக்கற்கள் மணி ஓசை

போன்ற சப்தத்தைச் செய்கின்றன; அதன் எதிரொலி பூமியெங்கும் கேட்கிறது.' (ரி.வே. X. 94.4)

'ஆழமாகக் குழியிடப்பட்டு, ஆனால் ஓட்டையில்லாமல் இருக்கும் ஓ கற்களே! உங்களுக்கு எப்பொழுதும் அலுப்பு சலிப்பே கிடையாது; மரணம் ஒரு பொழுதும் உங்களை அணுகாது; எக்காலத்திலும் இருக்கும் நீங்கள், நோயில்லாமல், பல விதங்களில் இடம் விட்டு இடம் செல்கிறீர்கள்; கொழு கொழுவென்றிருக்கும் நீங்கள் பற்றற்று இருக்கிறீர்கள். (ரி.வே. X. 94.11).

'உங்களுடைய தகப்பனார்கள் (மலைகள்) பலகாலமாக உறுதியாக நிற்கிறார்கள். ஓய்வை விரும்பும் அம்மலைகள், தங்களுடைய இருப்பிடத்திலிருந்து பிரிக்கப்படுவதில்லை. காலம் அவைகளைத் தொடுவதில்லை; பசும் செடிகளும், பசுமையான மரங்களும் எப்பொழுதும் அம்மலைகளில் இல்லாமலிருந்ததில்லை; விண்ணும் மண்ணும் அவர்கள் சொல்வதைக் கேட்கின்றன! (ரி.வே.X. 94.12)

'ஓ கற்களே! ஆபத்துக்களை வெகு தொலைவிற்கு விரட்டி விடுங்கள்; கெடுதல்களையும் போக்குங்கள். பசுமாடுகளை எங்களுக்கு மருந்தாகச் செய்யுங்கள். (பசுகொடுக்கும் பால் நோய்களைப் போக்கட்டும் என்று பொருள் கொள்ளலாம். இன்னுமொரு பொருள், விடியற்காலை வெளிச்சம் திருடர்களையும், பேய் பிசாசுகளையும் விரட்டட்டும் என்றும் கொள்ளலாம்) (ரி.வே. X . 175.2).

<u>மூலிகைகள்</u> இருபத்தி மூன்று ரிக்குகள் கொண்ட ஒரு ஸூக்தம் நோய் தீர்க்கும் மூலிகைகளைப் புகழ்கிறது.

'கைகளில் நிறைய மூலிகைகளை வைத்துள்ள மனிதன், மக்கள் கூட்டத்தின் நடுவில் இருக்கும் அரசனைப் போல விளங்குகிறான். அவர்களைக் கொல்பவனும், நோய்களை

விரட்டுபவனுமான அந்த முனிவனை மருத்துவன் என அழைக்கிறார்கள்! (ரி.வே. X. 97.6)

'அந்த மனிதனின் உடம்பில் அங்கம் அங்கமாக, ஓ மூலிகைகளே, நீங்கள் நகர்கிறீர்கள்; அவனிடமிருந்து நீங்கள், சண்டையைத் தீர்க்கும் மத்தியஸ்தனைப் போல, நோயை விரட்டி விடுங்கள்.' (ரி.வே. X. 97.12)

'ஓ நோயை! வேகமாகப் பறக்கும் பறவைகளுடன் பறந்து போய்விடு. காற்றின் வேகத்துடன் நீ பறந்து போ; புயற் காற்றுடன் நீ மறைந்து போய்விடு. (ரி.வே. X. 97.13)

இவைகளைத் தவிர, ரிக் வேதம் உணவு, தர்ப்பை, ரதம், ஆயுதங்கள், வேள்விக்கு ஸோமச் செடியை ஏற்றிச் செல்லும் இரு சிறுவண்டிகள் முதலியவைகளையும் தேவதைகளாகப் போற்றுகிறது.

## 7.4. உருவிலாத் தேவதைகள் (கருத்து, உணர்ச்சி, செயல் முதலியன)

### 1. படைப்பு

எல்லா மத நூல்களிலும் உலகம் எவ்வாறு படைக்கப் பட்டது என்பதைப் பற்றிய ஆராய்ச்சியைக் காணலாம். உதாரணமாக கிறிஸ்தவ மத நூலான பைபிளில் உலகம் ஆறு நாட்களில் படைக்கப்பட்டதாக நாம் காண்கிறோம். வேதம் இதைப்பற்றி என்ன சொல்லுகிறது! ரிக் வேதத்தில் சில ஸூக்தங்கள் இந்த உலகப்படைப்பைப் பற்றிக் கூறுகின் றன. அவைகளில் ஒன்றைப் பார்ப்போம்.

'ஆரம்பத்தில், இல்லாலிருப்பதும் இல்லை, இருப்பதும் இல்லை; காற்று மண்டலம் இல்லை; அதற்கு மேலே வானமும் இல்லை, எது எங்கே மூடியது? எது இருக்க இடம் தந்தது? அங்கே ஆழம் காணமுடியாத நீர் இருந்ததா?'

'அப்பொழுது சாவும் இல்லை, சாகாமையும் இல்லை; இரவையும் பகலையும் பிரிக்கும் அந்திவேளையும் இல்லை. அந்த ஒன்று மட்டும், மூச்சில்லாமல் ஆனால் தன்னியல்பாகவே மூச்சுவிட்டுக்கொண்டு இருந்தது; அது தவிர, வேறு ஒன்றும் இல்லை.'

'இருள் சூழ்ந்திருந்தது; முதலில் இருளில் மறைந்திருந்த எல்லாமான இது ஒழுங்குபடுத்த முடியாத குழப்பமாக இருந்தது. அங்கிருந்ததெல்லாம் உருவமில்லாமலும், ஒன்றுமில்லாமலும் இருந்தது; பெரிய தவத்தினால் அந்த ஒன்று உண்டானது.'

'அதற்குப் பிறகு, முதலில், மனதின் பீஜமான ஆசை (காமம்) எழுந்தது; தங்களுடைய இதயத்திற்குள் நோக்கிய முனிவர்கள், இருப்பதற்கும் இல்லாமலிருப்பதற்கும் உள்ள உறவைக் கண்டு கொண்டார்கள்.'

'(மேலுலகையும் கீழுலகையும் பிரிப்பதற்காக) குறுக்கே போடப்பட்ட கோடு நீட்டப்பட்டுள்ளது; அப்பொழுது அதற்கு மேலே என்ன இருந்தது, கீழே என்ன இருந்தது? பெற்றவர்கள் இருந்தார்கள்; மகத்தான சக்தி இயங்கியது; இங்கு தடையில்லாத செயல் இருந்தது; அங்கு வலிமை இருந்தது.'

'எங்கிருந்து அது பிறந்தது, எங்கிருந்து இந்தப் படைப்பு உண்டாயிற்று என்று யாருக்குத் தெரியும்? யார்தான் அதைக் கூறு முடியும்? இந்த உலகம் படைத்த பிறகு தெய்வங்கள் வந்தன. அப்படியானால் இது எங்கிருந்து வந்தது என்று யாருக்குத் தெரியும்?'

'இந்தப் படைப்பில் முதலில் உண்டு பண்ணப்பட்டவன் இவையெல்லாவற்றையும் உருவாக்கினான், அல்லது உருவாக்க வில்லையா? மேலுலகத்தின் உச்சியில் இருக்கும் அவனுடைய கண்கள் இந்த உலகத்தை ஆளுகின்றன;

நிச்சயமாக அவனுக்கு இது பற்றித் தெரிந்திருக்கும்; ஆனால், ஒரு வேளை, தெரியாமலும் இருக்கலாம்.' (ரி.வே. X. 129. 1-7)

அடுத்த ஸூக்தம் (X. 130) முதல் மனிதன் செய்த முதல் வேள்வியை வருணிக்கிறது. பின்னால் வந்த ரிஷி, தன் மனக் கண்ணால் இதைக் காண்பதாக கூறுகிறார்.

முதலில் கூறிய ஸூக்தம் (X. 129) பல மேல் நாட்டு ஆராய்ச்சியாளர்களை பிரமிக்க வைத்திருக்கிறது. இதன் கருத்தாழத்தையும் தத்துவ விசாரணையும் பற்றி அவர்கள் வெகுவாகப் புகழ்ந்துள்ளார்கள். அவர்களில் ஒருவர் கூறுகிறார்: 'இந்த வியக்கத்தக்க படைப்பின் ஸூக்தம் உலக வரலாற்றிலேயே, தத்துவ விசாரணையில், எஞ்சியுள்ள மிகப் பழமையான பாட்டு ஆகும்; இது உருவமிலாச்சிந்தனையில் மிக உயர்ந்த படியை எட்டிப் பிடித்ததைச் சுட்டிக் காண்பிக்கிறது; இது ஒரு மாபெரும் கவியின் புனைப்பு ஆகும். ...' *

மூன்றே ரிக்குகள் கொண்ட மற்றுமொரு ஸூக்தம் சற்று விவரமாக உலகப் படைப்பைப் பற்றிக் கூறுகிறது: 'பெரிய தவத்தால் சாச்வதமான நீதிநெறியும் வாய்மையும் உண்டாயின; பிறகு இரவும் அதன் பிறகு அலைகள் மிகுந்த வெள்ளப் பெருக்குடன் கூடிய கடலும் உண்டாயின. அதே அலைகள் மிகுந்த வெள்ளப்பெருக்குடன் கூடிய கடலிலிருந்து ஆண்டு உண்டாயிற்று; பகலையும் இரவையும் ஏற்படுத்திய தெய்வம் கண்களை மூடும் எல்லாப் பிராணி களையும் ஆள்கிறது. பிறகு தாதா முறையே ஸூரியனையும் சந்திரனையும் உருவாக்கினான்; அவன் விண்ணையும்

* *'This wonderful "Hymn of Creation", one of the oldest surviving records of philosophic doubt in the history of the world, marks the development of a high stage of abstract thinking, and it is the work of a very great poet.- A.L.Basham, Reader in the History of India, University of London in his book "The Wonder that was India". Groover Press Inc. New York 1954-Page 247)*

மண்ணையும், காற்று மண்டலத்தையும், வெளிச்சத்தையும் உருவாக்கினான்.'(ரி.வே. X. 190 1.3) இதை தவிர, முன்னாலேயே கூறப்பட்ட புருஷ ஸூக்தம் (அத்தியாயம் 6) ஹிரண்யகர்ப்ப ஸூக்தமும் (அத்தியாயம் 5.3) படைப்பைப் பற்றி, வேறு கோணங்களிலிருந்து, பார்க்கின்றன.

இப்படியாக வேதகால மக்கள் படைப்பையே ஒரு தேவதையாக வணங்கினார்கள்.

## 2. ஞானம்

ஞானத்தைத் தேவதையாகக் கொண்டு ரிக்வேதத்தில் ஒரு ஸூக்தம் உள்ளது. ஸாயனர், தம் உரையில், இது பரம பிரம்ம ஞானம், அதாவது மதத்தின் உயர்ந்த உண்மை களையும் தத்துவங்களையும் அறிவிப்பதாகும் என்கிறார்; மேலும் அது மனிதனுக்குத் தன்னுடைய சுபாவத்தையும், அவன் எப்படி பரமாத்மாவுடன் ஐக்கியமாகலாம் என்பதை யும் சொல்லிக் கொடுக்கிறது என்றும் கூறுகிறார். இந்த ஸூக்தத்திலிருந்து சில ரிக்குகளைப் பார்ப்போம்.

'ஓ பிருஹஸ்பதியே! மனிதர்கள், பொருள்களுக்குப் பெயர்களைச் சூட்டும் பொழுது, வாக்கின் முதற் சொற்களை அறிவித்தார்கள்; அப்பொழுது, அப்பொருள்களில் எதெதெல்லாம் அப்பழுக்கில்லாமலும், உயர்வாகவும் இருந்தனவோ, அதெதெல்லாம் வெளியே தெரிந்தன. (ரி.வே.X. 71.1)

'ஒரு மனிதன் வாக்கைப் பார்த்ததில்லை, ஆனாலும் அவன் பார்க்கிறான்; இன்னொருவனுக்குக் காது நன்றாகக் கேட்கிறது, ஆனாலும் அவன் வாக்கைக் கேட்டதில்லை; மற்று மொருவனுக்கோ, அவன், பிரியமுள்ள, நல்லாடை அணிந்த பெண் தன் கணவனுக்குத் தன் அழகைக் காட்டுவது போலக் காட்டுகிறான்.' (ரி.வே. X. 71.4)

'நட்பின் பெருமையை நன்கறிந்து அன்பான நண்பனைக் கை விட்டவனுக்கு வாக்குடன் ஒரு தொடர்பும் இல்லை; அவன் அவனைக் கேட்ட பொழுதிலும், அதனால் உபயோகம் ஒன்றும் இல்லை; நற்செய்கைகளின் வழியை அறிவானில்லை. (ரி.வே.X 71.6)

'நட்புள்ள அந்தணர்கள், ஒருங்கிணைந்து, தங்களுடைய இதயங்கள் நிர்மாணித்த உள்ளத்துடிப்புடன், வேள்விகளைப் புரிகிறார்கள்; அவர்கள் தங்களுடைய சாதனைகளால் மற்றவர்களை வெகு தூரம் பின் தங்க வைக்கிறார்கள்; பெயரளவில் மட்டும் அந்தணர்கள் ஆன சிலர் வேறு எங்கேயோ சுற்றுகிறார்கள். (ரி.வே. X.71.8)

பதினோரு ரிக்குகள் கொண்ட இந்த ஸூக்தத்தில் சில ரிக்குகளின் கருத்து தெளிவாகப் புலப்படவில்லை. இந்த ஸூக்தத்தின் முக்கிய நோக்கம், தெய்வத்தைப் பற்றி அறிந்து கொள்வதற்கு வேதத்தை நன்கு புரிந்து கொள்வது இன்றியமையாதது என்பது ஸாயனரின் கூற்று.

## 3. ஒற்றுமை

நாடாளுமன்றங்களின் கூட்டங்களில் இன்று நாம் காணமுடியாத ஒற்றுமையின் அவசியத்தைப் பற்றி ஆயிரமாயிரமாண்டுகளுக்கு முன்னரே ரிக்வேதம் வற்புறுத்து கிறது: 'கூடுங்கள், கூடிப்பேசுங்கள்; உங்கள் மனமெல்லாம் ஒரே எண்ணத்டன இருக்கட்டும்; இது பழைய தெய்வங்கள், ஒரு மிக்க, உட்கார்ந்து (வேள்வியில்) தங்கள் பங்கைப் பெறுவதை ஒத்திருக்கும். இந்த இடம் பொதுவானது, மன்றமும் பொதுவானது எல்லோர் மனதும் பொதுவானது; ஆகையால் எல்லோருடைய எண்ணங்களும் ஒரு நன்மைக்காக இருக்கட்டும். ஒரு பொதுவான கூற்றை உங்கள் முன்னிலையில் வைத்து, ஆஹுதிகளுடன் உங்களை வணங்குகிறேன். உங்களுடைய முடிவெல்லாம் ஒன்றாக

இருக்கட்டும்; உங்களுடைய மனதெல்லாம் ஒற்றுமையுடன் இயங்கட்டும். எல்லோருடைய எண்ணங்களும் இணைந்து, எல்லோரும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்ளட்டும். (ரி.வே. X. 191 2-4) நம் நாட்டு நாடாளுமன்றங்கள் இந்த வேதகால தத்துவங்களைக் கடைப்பிடித்தால் நாடு வெகுவாக முன்னேறும்.

## 4. சிரத்தை

சிரத்தையைத் தேவதையாக உருவகப்படுத்தி ஒரு ஸூக்தம் ரிக் வேதத்தில் உள்ளது. எக்காரியதைச் செய்தாலும், அதைச் சிரத்தையுடன் செய்ய வேண்டும் என்பதே ஸூக்தத்தின் குறிக்கோள்; முக்கியமாக, வேள்விகள் புரியும்பொழுது, சிரத்தை மிக அத்தியாவசியமாகிறது. ஸூக்தம் பேசுகிறது: ‘சிரத்தையால் அக்கினி மூட்டப்படு கிறது; நாம், சிரத்தையுடன், அக்கினியில் ஆஹுதிகளை வழங்குகிறோம். நாம், மகிழ்ச்சியின் உச்சியில், சிரத்தையைப் புகழ்ந்து கொண்டாடுகிறோம். ஓ சிரத்தையே, ஆஹுதிகளை வழங்குபவனுக்கும், வழங்கப் போகிறவனுக்கும் அருள் புரிவாயாக; தாராள மனப்பான்மையுடன் வழிபடு வோருக்கும் அருள் புரிவாயாக; நான் கூறிய இச் சொல்லிற்கும் அருள் புரிவாயாக. (ரி.வே. X. 151 1.2)

மேலும் ஸூக்தம் தொடர்கிறது: ‘அதிகாலையில் சிரத்தையையும், நடுப்பகலில் சிரத்தையையும், நாம் வேண்டு கிறோம்; ஸூரியன் அஸ்தமிக்கும் பொழுது, ஓ சிரத்தையே, எங்களுக்கு நம்பிக்கையை ஊட்டுவாயாக! (ரி.வே. X. 151.5)

## 5. தக்ஷிணை

வேள்விகளில் கொடுக்கப்படும் தஷிணையைத் தேவதையாக உருவகப்படுத்தி பதினொரு ரிக்குகள் கொண்ட ஸூக்தம் என்று ரிக்வேதத்தில் உள்ளது, ஸூக்தம் கூறுகிறது:

'இந்த மக்களுடைய தாராள மனப்பான்மையைக் காண்கிறோம்; உயிர் வாழ்பவர்களின் உலகம் இருளிலிருந்து விடுபடுகிறது. முன்னோர்கள் கொடுத்த மகத்தான ஜோதி நமக்குக் கிடைத்திருக்கிறது; தக்ஷிணையின் அகன்ற பாதை, தெளிவாகப் புலனாகிறது.' (ரி.வே. X. 107.1)

'தக்ஷிணை குதிரையையும், காளை மாட்டையும், மின்னும் பொன்னையும் தருகிறது; தக்ஷிணை நமக்கு உயிரைத் தரும் உணவைக் கொடுக்கிறது. அறிவாளி தக்ஷிணையைத் தன்னைக் காக்கும் கேடயமாகக் கொள்கிறான்' (ரி.வே. X. 107.7)

'தாராளமாகக் கொடுப்பவன் முதலில் நறுமணமுள்ள ஒரு வீட்டைப் பெறுகிறான்; பிறகு, நல்லாடை உடுத்திய பெண்ணை மணக்கிறான்; அவன் நல்ல மதுபானங்களைப் பெற்று, ஒரு காரணமுமில்லாமல் எதிர்ப்பவர்களைப் போரில் வெல்லுகிறான்! (ரி.வே. X. 107.9)

## 6. கொடை

கொடையைத் தேவதையாக உருவகப்படுத்தி ரிக் வேதத்தில் ஒரு ஸூக்தம் உள்ளது. ஸூக்தம் பேசுகிறது. 'மனிதன் பசியால் சாகவேண்டும் என இறைவன் விதிக்கவில்லை. நன்கு உண்பவனும் பல வழிகளில் சாகிறான். கொடையாளியுடைய செல்வம் என்றும் வீண்போவதில்லை கொடுக்காதவனுக்கு, சமயத்தில் ஆறுதல் கூற, ஒருவரும் முன்வருவதில்லை. முன்பு தனக்குச் சேவை புரிந்த நண்பன் ஒருவன் பசியுடன் ஒரு மனிதன் முன் வருகிறான்; வேண்டிய உணவு இருந்தும், அவன் தன் இதயத்தைக் கடினமாக்கிக் கொண்டு நண்பனுக்கு உணவு அளிக்க மறுக்கிறான். அப்படிப்பட்ட மனிதனுக்குச் சமயத்தில் ஆறுதல் கூற ஒருவரும் முன்வரமாட்டார்கள். பசியுடன் வரும் பிச்சைக்காரனுக்கு உணவளிப்பவன் செல்வந்தனா வான்; வாழ்க்கைப் போரில் அவன் வெற்றியையே காண்பான்;

உணவு உண்டவன், பிற்காலத்தில், அவனுக்கு நண்பனாகி, உதவி புரிவான். உணவு கேட்டு வரும் நண்பனுக்குக் கொடாதவன் உண்மைத் தோழன் அல்லன்; அந்த இடத்தை விட்டு அவன் புறப்படட்டும்; அது ஓய்வெடுக்கத் தகுதியல்ல. முன்பின் தெரியாத ஒருவனிடம் யாசிப்பது மேலாகும்! (ரி.வே. X. 117 1–4)

'யாசித்து வரும் ஏழைக்குச் செல்வந்தன் உணவு அளிக்கட்டும்; உருண்டு வரும் ஒரு வண்டியின் சக்கரம் போல, பணம் இன்று வரும், நாளை மற்றொருவனுக்குக் போகும். 'படைப்புப் பல படைத்து' மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளாமல், உண்பவன், உண்மையில் பாவத்தையே உண்கிறான்.' (ரி.வே. X. 117 5.6)

## 7. கோபம்

கோபத்தைத் தேவதையாக உருவகப்படுத்தி ரிக் வேதத்தில் இரண்டு ஸூக்தங்கள் உள்ளன. ஒரு ஸூக்தம் கூறுகிறது: 'பலசாலிகள் எல்லோரையும் விட மிகுந்த பலசாலியான கோபமே! இங்கு வா; நண்பனுக்காகத் தவத்தினால் எங்களுடைய எதிரிகளை விரட்டி விடு. எல்லா எதிரிகளையும், விருத்திரனையும், அரக்கர்களையும் கொல்லுபவனே! எங்களுக்கு எல்லாச் செல்வங்களையும் கொண்டு வா! (ரி.வே. X. 83.3)

'எல்லாவற்றையும் வெல்லும் கோபமே! வெற்றி வீரனே! தீயைப் போல ஜுவலித்துக்கொண்டிருக்கும் உன்னை நாங்கள் எங்களுடைய படைத்தலைவனாக இருக்கும்படி அழைக்கிறோம். எங்களுடைய எதிரிகளைக் கொன்று வீழ்ந்து; அவர்களுடைய சொத்துக்களை மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடு; உன்னுடைய வலிமையைக் காட்டி, எங்களை வெறுப்போர்களை விரட்டி விடு! (ரி.வே. X. 84.2)

## 7. ரதி (கூடலின்பம்)

அகஸ்தியரின் மனைவி லோபாமுத்திரை மனம் நொந்து தன் நிலையைக் கணவன் கேட்கக் கூறுவாள். ஒரு ஸூக்தத்திலே: "பல ஆண்டுகளாகத் தங்களுக்கு நான் முழுமனத்தோடு தொண்டு செய்துவருகிறேன். பகல்பொழுது என்றில்லை, பகலும், இரவும், விடியற் காலையும் என் உடல் நிலையைப் பாராமல் இந்தச் சேவையைச் செய்து வருகிறேன். இதனால் என் மேனியழகு குறைந்துபோய் முதுமையின் லக்ஷணங்கள் தோன்றத் தொடங்கி விட்டன. ஆகவே கணவன் மார்தம் மனைவிகளைக் கவனிக்க வேண்டும். அவர்களுடன் கூட வேண்டும்!

"தேவர்களுடன் ஸத்தியம் பற்றி இயல்பாகப் பேசும் சக்தி பெற்ற மகரிஷிகள் தமது விரதங்களுக்கு விதிகளுக்கும் எந்த வகையிலும் பங்கம் ஏற்படாமல் வாழ்ந்து சந்ததியைப் பெற்றார் ஆகவே கணவன்மார் தம் மனைவிகளுடன் உடல் உறவு கொள்ளத்தான் வேண்டும்" என்றாள் லோபா முத்திரை. (ரி.வே. I. 179. 1–2)

இதைக் கேட்டு அகஸ்திய முனிவர், "இத்தனை காலம் செய்த வழிபாடுகள் வீண்போகமாட்டா. இவற்றின் காரணமாகத் தெய்வங்கள் தம்மைக் காப்பாற்றும். தெய்வங்களின் அருளால் நாம் நம்முடைய (நியாயமான) ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். நாம் கணவனும் மனைவியுமாக ஒன்று சேர்ந்து முயன்றால் பற்பல பிரச்னை களுடன் போராடி வென்று விடலாம். புலன்களை அடக்கி வழிபடும் போது ஆசை எங்கிருந்தோ வந்து என்னை ஆட்கொண்டது. லோபாமுத்ரா வந்து என்னுடன் கூடலாம். அபலைகளான பெண்கள் தீரர்களான ஆண்களைக் கவர்ந்து விடுகிறார்கள் என்று கூறினார். (ரி.வே. I. 179. 3–4)

இந்த ஸம்பாஷனையை ஒட்டுக்கேட்டுக் கொண்டிருந்த அகஸ்தியரின் சிஷ்யன், "மனிதனுக்கு எத்தனையோ ஆசைகள்

தோன்றுகின்றன. என் குரு, குருபத்தினி இவர்களிடையே நடந்த அந்தரங்கமான ஸம்பாஷனையை ஒட்டுக்கேட்டுப் பாவத்தை ஸம்பாதித்துக்கொண்டேன். நான் யக்ஞத்தின் போது குடித்த ஸோமரசம் இந்தப் பாவத்தைப் போக்கட்டும். எனது குரு தக்க உபகரணங்களைப் பயன்படுத்தி (யக்ஞங்கள் முதலியவைகளைச் செய்து) தன் இனவிருத்தி சக்தி முதலியவற்றைப் பெறுவாராக!" என்று கூறி முடிக்கிறான். *(ரி.வே. I. 179. 5–6)*

இந்த ஸூக்தத்திற்குக் கூடலின்பம் (ரதி) தேவதையாக விளங்குவது குறிப்பிடத்தக்கது.

* * *

# 8. முடிவுரை

இதுகாரும் நாம் வேதம் வணங்கிய தெய்வங்களையும் வேதம் போற்றிய பிராணிகள், பொருள்கள், கருத்துக்கள் முதலியவைகளையும் பார்த்தோம். வேத காலத்தில் மக்கள் எந்தத் தெய்வங்களை வழிபட்டார்கள் என்று ஓரளவிற்குத் தெரிந்து கொள்டோம்.

உலகில் மனிதன் தோன்றி எத்தனை எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் மனிதன் எப்படி வாழ்ந்தான், எந்தத் தெய்வங்களை வணங்கினான், எந்தத் துதிகளைச் செய்தான், எப்படியெல்லாம் தெய்வங்களை வழிபட்டான் என்பதைப் பற்றிய விவரங்கள் ஓரளவிற்கே நமக்குக் கிடைத்திருக்கின்றன.

இவைகளிலிருந்து நாம் எகிப்பது நாட்டில் மக்கள் ஸூரியன் முதலிய சில இயற்கைச் சக்திகளை வழிபட்டார்கள் என்று அறிகிறோம். காகிதம் போன்ற பனபரஸ் என்ற பொருளில் எழுதி வைத்திருக்கும் துதிகளிலிருந்து இது தெரிகிறது. சுமார் 6000 ஆண்டுகளுக்கு மேல் இந்தப் பண்பாடு இருந்து, வானளவும் எட்டுகின்ற பிரமிட் போன்ற வியக்கத்தகுந்த சாதனைகளைப் படைத்துள்ளது. ஆனால் அக்கால மக்கள் வழிபட்ட தெய்வங்களும், ஓதிய துதிகளும், பின்பற்றிய மதங்களும் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போய்விட்டன. இன்று அவைகளைப் பற்றிய விவரங்களைத் தொல்பொருள் காக்ஷி :பகங்களில் (museum) தான் காணமுடியும். இப்பொ ழுது அங்குள்ள மக்கள் வேறு மதங்களைப் பின் பற்றுகி,ார்கள்.

இப்பொழுது ஈராக் எனப்படும் நாட்டில் சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன் பல நாகரிகங்கள் தழைத்தோங்கின. பாபிலோனியன், மெஸபொடோமியன் பண்பாடுகள் அக்கம்பக்கத்திலுள்ள நாடுகளை வென்று செழிப்பான வாழ்க்கை முறையை அமைத்துக்கொண்டன. மதங்களும், தெய்வங்களும், துதிகளும் தோன்றின. இவைகளைப் பற்றிய ஒரு சில விவரங்களும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. ஆனால் இன்று அந்த மதங்களும், தெய்வங்களும், துதிகளும் மக்களிடையே காணமுடியவில்லை.

கிரேக்க நாகரீகத்திற்கும் இதே கதி தான். அக்காலத்தில் புனையப்பட்ட கிரேக்க இலக்கியங்களில் பல நூல்கள் இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளன. அவைகளிலிருந்து நாம் அக்கால கிரேக்க தெய்வங்களைப் பற்றியும், அக்கால மக்களின் தெய்வ வழிபாட்டைப் பற்றியும், மிக விவரமாக அறிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அந்தத் தெய்வங்களும், துதிகளும், வழிபாடும், மதமும் முழுவதுமாக அழிந்து போய்விட்டன. அக்காலத்தில் தழைத்திருந்த கிரேக்க சாம்ராஜ்யத்தில், இன்று பெரும்பாலோர் கிறிஸ்தவ மதத்தையும் சிலர் இஸ்லாமிய மதத்தையும் பின் பற்றுகிறார்கள்.

மற்ற பண்பாடுகளிலும் இதையேதான் காண்கிறோம். பழங்காலத்தில் இருந்த மதங்கள் அழிந்து போய், அந்த இடத்தில் யூதர்களின் மதம் (zionism), கிறிஸ்தவ மதம், இஸ்லாமிய மதம், புத்த மதம் இவைகளைத் தான் காண்கிறோம். இந்தியாவில் சரண் புகுந்த பார்ஸிகள் பழைய ஜொராஸ்ட்ரிய மதத்தைப் பின்பற்றுகிறார்கள்.

ஆனால், நமது நாட்டில், இந்தப் பாரத தேசத்தில் ஹிந்து மதம் பல்லாயிரமாண்டுகாலமாக இருந்து வந்திருக்கிறது, இன்றும் தழைத் தோங்கி உள்ளது. ஆராய்ச்சியாளர்கள் இதன் ஆரம்பத்தைக் கண்டு பிடிக்க இயலவில்லை. அன்று

போல் இன்றும் வேத கோஷங்கள், அதே மந்திரங்கள், அதே ஸ்வரங்கள், இம்மியளவு கூடப் பிசகாமல், கிராமங்களிலும், நகரங்களிலும், வீடுகளிலும், பொது இடங்களிலும், ஒரே சீராகப் பலரால் கம்பீரமாக ஓதப்படும் காட்சி கண் கொள்ளாதது, மயிர்க்கூச்சல் எடுக்கும்படியாக உள்ளது. தெய்வங்களிலும், வழிபடும் முறைகளிலும் சற்று மாறுபாட்டைக் காணலாம். அன்று இந்திரனையும் வருணனையும் தொழுதார்கள்; இன்று சிவனையும் விஷ்ணுவையும் வழிபடுகிறார்கள். அன்று வேள்விகளைப் புரிந்தார்கள். இன்று ஹோமங்களைச் செய்கிறார்கள். கோயிலிலும் வீட்டிலும் பூஜை செய்கிறார்கள். அன்று வேள்வி முடிந்த பிறகு எஞ்சியுள்ள ஸோமரசத்தைக் குடித்தார்கள்; இன்று ஹோமத்தின் முடிவில், நைவேத்தியம் செய்த சர்க்கரைப் பொங்கலைப் பிரசாதமாக உண்கிறார்கள். வேத மந்திரங்கள் மாறவில்லை; அடிப்படைத் தத்துவங்கள் மாறவில்லை.

வேதகாலத்திலிருந்து இன்று வரை நம் மதத்தில் பல மாறுபாடுகள் ஏற்பட்டது உண்மைதான். ஆரம்பத்தில் மக்கள் பெரிய வேள்விகளைப் புரிந்தார்கள். இதற்குப் பெரும் முயற்சி தேவைப்பட்டது. காலப் போக்கில் இது சிறிது சிறிதாகக் குறைந்து இதற்குப் பதிலாக எளிய முறையில் செய்யக் கூடிய ஹோமங்கள் உருவாகின; ஆனாலும் அதே மந்திரங்களைத் தான் ஓதுகிறார்கள். வேள்வியில் போடப்படும் அதே ஹவிஸ் (சோறு) ஆஜ்யம் (நெய்) ஸமித்து முதலிய பொருள்களைத் தான் ஹோமகுண்டத்தீயிலும் அர்ப்பணிக்கிறார்கள்.

ஒரு கால கட்டத்தில் விக்கிரஹ வழிபாடும் கோவில்களும் உண்டாயின. சைவ வைஷ்ணவ ஆகமங்கள் கோவில் வழிபாட்டு முறைகளை வரையறுத்து, ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டிய வழிபாடுகளையும், விசேஷ தினங்களில் செய்ய வேண்டிய உற்சவங்கள் முதலியவற்றை

யும் விரிவாக ஏற்படுத்தின. மக்கள் திரள் திரளாகக் கோவில் வழிபாட்டில் ஈடுபட்டார்கள்.

வீடுகளில் அன்றாடம் செய்ய வேண்டிய பூஜைகளையும், விசேஷ நாட்களில் புரிய வேண்டிய வழிபாடுகளையும், மகரிஷிகள் வேதத்தை ஒட்டிய கிருஹ்ய ஸூத்திரங்களில் உருவாக்கினார்கள்.

வெளிப்படை நோக்கில், இன்று நமது ஹிந்து மதத்தில் தெய்வங்களை முழுவதுமாக மனித உருவாக்கம் (anthropomorphism) செய்து வழிபடுவது வேதகாலத்திலிருந்து முற்றும் மாறுபட்டதாக உள்ளது. கோவில் வழிபாட்டிலும், விக்கிரஹ ஆராதனையிலும் வீட்டில் நடக்கும் பூஜைகளிலும் இந்த வேற்றுமையைக் கண்கூடாகக் காணலாம்.

ஆனால் அடிப்படை நோக்கில் வேதங்களின் முழு ஆதிக்கத்தை இந்த வழி பாடுகளில் காணலாம். எந்த அக்கினி மூலமாக வேதகாலத்தில் ஆஹுதிகளைத் தெய்வங்களுக்கு வழங்கினார்களோ, அதே அக்கினி மூலமாகத்தான் இன்றும் அஹுதிகளை அர்ப்பணிக்கிறார்கள். வேதகாலத்திலிருந்த மாதிரியே, இன்றும், நெய், அன்னம் ஸமித்து ஆகிய மூன்று பொருள்களும் அக்கினி குண்டத்தில் கொடுக்கப்படுகின்றன.

முன்பு ஓதப்பட்ட பெரும்பாலான மந்திரங்கள் இன்றும் ஓதப்படுகின்றன. முன்பு கூறியது போல, ஓதப்படும் ஒவ்வொரு மந்திரமும் அன்று போல இன்றும் ஒரு எழுத்துக்கூட மாறாமல், ஒரு ஸ்வரம் கூடப் பிசகாமல் ஒரே சீராக, காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை ஓதப்படுகிறது.

மற்ற மதங்களில் ஆரம்ப கால முதல் மாற்றம் ஏது மில்லாமல் வழிபாடும் தெய்வமும் ஒரே விதமாக உள்ளன. இது குளம், ஏரி முதலிய நீர்த்தேக்கங்களை ஒக்கும் அநாதிகாலமாக இருந்து வரும் நமது மதம் காலத்திற்கேற்ப சில சிறிய மாறுதல்களுடன் ஓடிக்கொண்டிருக்கும் ஒரு

பெரிய நதிக்கு ஒப்பாகும். மலையுச்சியில் தொடங்கி, கீழே இறங்கி வந்து, பல உபநதிகளுடன் சேர்ந்து, ஆழமாகவும் அகலமாகவும் பிரவகிக்கும் என்றும் வற்றாத ஒரு மாபெரும் நதியாக நமது மதம் விளங்குகிறது.

இந்தப் பாரத தேசத்தில் எத்தனை எத்தனையோ மகரிஷிகளும், முனிவர்களும், தபஸ்விகளும், அவதார புருஷர்களும், மடாதிபதிகளும், பக்தர்களும் மற்றும் மகான்களும் தோன்றி இந்த வேத மதத்தைப் பேணிப் பாதுகாத்து வளர்த்து வந்துள்ளார்கள். இப்படிப்பட்ட மதத்தின் வாரிசுகளாகிய நாம் நமது மதத்தின் முக்கிய கோட்பாடுகளையும் தத்துவங்களையும் சிறிதளவேயாயிலும் தெரிந்து கொண்டு, நமது ஆன்மிகக் கடமைகளையும், தெய்வ வழிபாட்டையும் ஓரளவேயாயினும் புரிந்து கொண்டு, நமது பிற்காலச் சந்ததிகள் இவைகளைப் பின் பற்ற வழி வகுப்போமாக. நமது மதம், வேதம் ஏற்றி வைத்த அணையா விளக்காக, காலம் காலமாக, மக்களின் அக இருளைப் போக்கும் ஒளிப்பிழம்பாகத் நிகழட்டும். இந்த மாபெரும் முயற்சியில், நாம் எல்லோரும் ஒருங்கிணைந்து வேதத்தை வளர்த்து அது காட்டும் வழியில் நம் கடமைகளைச் செவ்வனே செய்வோமாக.



முற்றும்



திரு. அ.வெ. சுகவ[illegible] வயது இளைஞர். எஞ்ஜினியர் பட்டம் பெற்று இரயில்வேயில் அதிகாரியாகத் தொடங்கி, துறைத் தலைவராக 1980-இல் ஓய்வு பெற்றார்.

சிறு வயதிலிருந்தே இவர் வட மொழியில் நல்ல புலமை பெற்று, பல வடமொழி நூல்களில் பயிற்சி பெற்றவர். சிறப்பாகச் சமய நூல்களில் ஆழ்ந்த புலமை பெற்றுத் தேர்ந்தவர். வடமொழியில் உள்ள காவிய நாடகங்களோடு வால்மீகி இராமாயணம் போன்ற நூல்களைப் படித்துப் பயன் பெற்றவர். வேதத்தில் ஆழ்ந்த தேர்ச்சி பெற்றுப் பல ஆண்டுகளாக அதனையே விரும்பிப் படிப்பவர்.

சென்னை முதலிய நகரங்களில் இலக்கிய, சமயக் கூட்டங்களில் உரை ஆற்றியவர். அண்மையில் மத்திய அரசின் மானியம் பெற்று, தில்லியில் நடத்தப் பெற்ற ஒரு கருத்தரங்கில் "வேதத்தில் பெண்பாலார்" என்ற தலைப்பில் ஓர் அரிய ஆராய்ச்சிக் கட்டுரையைப் படித்தார். ஆங்கிலத்தில் இவர் இயற்றிய கவிதைகள் நூல் வடிவில் வெளிவந்திருக்கின்றன. "கவிஞன்" என்ற அனைத்துலக ஆங்கில மாத இதழின் பதிப்பாளர்கள் சில ஆண்டுகளுக்கு முன் வடமொழிச் சிறப்பிதழ் ஒன்றினை வெளிக்கொணரத் திட்டமிட்ட போது அதற்கு இவரைக் கௌரவ ஆசிரியராக நியமித்தார்; சிறப்பிதழ் பலரின் பாராட்டைப் பெற்றது.

எமது விருப்பப்படி இந்நூலை அடுத்து "வே[illegible] தெய்வங்கள்" என்ற நூலை இவர் எழுதி வருகி[illegible] வேதத்தின் அடிப்படையில் இவர் சில நூல்களை எழுதுவார் என்று எதிர்நோக்குகிறோம்.

வேதத்தில் ஒப்பற்ற புலமையைப் பெற்றுள்ள இவர் தமிழில் எளிய நடையில் நூல்களை எழுதி வழங்க முன்வந்திருப்பது தமிழரின் நற்பேறு என்றே சொல்ல வேண்டும்.